# தூக்கு மேடைக் குறிப்பு

**ஜூலிஸ் பூசிக்**

தமிழாக்கியவர்

**எம். இஸ்மத் பாஷா**




**தமிழ்ப் புத்தகாலயம்**

பு.எண்:34 ப.எண்:35 சாரங்கபாணித் தெரு

திருமலை சாலை குறுக்கே (காமராஜர் நினைவில்லம் அருகே)

தி.நகர் சென்னை - 600017

044 - 28340495

**Web : dhagambook.tripod.com**

**Tamilputhakalayam@yahoo.com**

# தூக்கு மேடைக் குறிப்பு

முதற் பதிப்பு : அக்டோபர் 1949
பதினொன்றாம் பதிப்பு : மே 2002
பன்னிரண்டாம் பதிப்பு : ஜனவரி 2009

**விலை : ரூ.55.00**






**THOOKKU MEDAIK KURIPPU**
**by JULICE BUZIK**


Twelfth edition : january 2009

**pages: 160**

cover design : **K. Uma**

**TAMIL PUTHAKALAYAM**
NEW NO: 34 OLD NO: 35 SARANGAPANI STREET
OFF : THIRUMALAI ROAD (Near kamarajar House)
T. NAGAR, CHENNAI - 600017
: 28340495 Fax: 28344528

Email : tamilputhakalayam@yahoo.com
tamilputhakalayam@vsnl.com

Website : http:/dhagambook.tripod.com
: http:/akilan.50megs.com

**Price : Rs. 55-00**

**ISBN : 81-89628-15-1**



---

Printed at : padmavathi Offset, chennai -2. 28450105

# ஒரு குறிப்பு

ராவன்ஸ்பர்க் பாதுகாப்புக் கொட்டடியிலே சக கைதி ஒருவரின் மூலமாக, எனது கணவர் ஜூலிஸ் பூகிக்குக்கு, 1943 ஆகஸ்ட் 25—ம் தேதி பெர்லினில் கூடிய நாஜிக் கோர்ட் மரணதண்டனை விதித்ததைக் கேள்விப் பட்டேன்.

அவருடைய எதிர்காலத்தைப் பற்றிய கேள்விகள், சிறைக் கோட்டத்தின் வானளாவிய மதிற்சுவர்களிலே திரும்பத் திரும்ப எதிரொலித்துக் கொண்டிருந்தன.

1945—ஏப்ரலில் ஹிட்லர் ஜெர்மனி தோற்கடிக்கப் பட்ட பின்னர், கைதிகளெல்லாம் விடுவிக்கப்பட்டனர். அவர்களைச் சித்திரவதை செய்து சாக்காட்டிலே தள்ள, பாஸிஸ்ட் வெறியர்களுக்கு அவகாசம் கிட்டவில்லை. அப்படிக் காப்பாற்றப்பட்டவர்களிலே நானும் ஒருத்தி.

விடுதலை செய்யப்பட்டு எனது பிறந்த நாட்டுக்குத் திரும்பிச் சென்று, கணவனைக் காண்பதற்காகத் தேடினேன்—ஜெர்மன் படையெடுப்பாளர்களால் சித்திர வதை நரகக் குழிகளுக்கு இழுத்துச் செல்லப்பட்ட தத்தம் புருஷர்களையும், குழந்தைகளையும், தந்தை தாய்களை யும் ஆயிரக்கணக்கான மக்கள் தேடித் தேடியலைந் ததைப் போல.

மரண தண்டனை விதிக்கப்பட்ட பதினான்காவது நாளிலேயே, 1943 செப்டம்பர் 8—ம் தேதியன்று, என் கணவர் பெர்லினிலே தூக்கிலிடப்பட்டதாகத் தெரிந்து கொண்டேன்.

அதோடு கூடவே, பான்கிராப்ட்ஸ் சிறையிலிருக்கும் போது ஜூலியஸ் பூசிக் பல குறிப்புகள் எழுதியதாகவும் அறிந்தேன். அவருடைய அறைக்கு, பென்சிலையும் காகிதத்தையும் கொண்டு போய்க் கொடுத்து, அந்தக் குறிப்புக்களை ரகசியமாக, ஒவ்வொன்றாய் வெளியில் எடுத்துச் சென்றவர் ஒரு செக் காவலாளி. அவர் பெயர் ஏ. கோலின்ஸ்கி. அவரைச் சந்தித்து எனது கணவர் பான்கிராப்ட்ஸ் சிறையிலே எழுதிய குறிப்புகளனைத்தை யும் சேகரித்தேன். வரிசைக்கிரமமாக எண்களிடப்பட்ட அந்தக் குறிப்புத் தாள்களை, நம்பிக்கைமிக்க வெவ்வேறு மனிதர்கள் ஒளித்து வைத்திருந்தார்கள். அவை அனைத்தும் கிட்டின. இப்பொழுது அவை—ஜூலியஸ் பூசிக் வாழ்க்கைச் சரித்திரத்தின் கடைசி அத்தியாயங்கள் — வாசகர்களுக்குச் சமர்ப்பிக்கப்படுகின்றன.

**அகுஸ்தினா பூசிக்**

# தூக்கு மேடைக் குறிப்பு

## முதல் அத்தியாயம்:
## இருபத்து நான்கு மணி நேரம்

பத்து அடிக்க ஐந்து நிமிஷம், 1942, ஏப்ரல், 24 இதமான—ரம்யமான—வஸந்த மாலை.

நொண்டிக்கிழம் போல் வேஷம், தள்ளாடும்பாவனை. இந்த நடிப்புடனே முடிந்தவரை வேகமாக விரைகிறேன். பத்து அடிக்கும்போது ஊர் அடங்க வேண்டும் என்பது நாஜி உத்தரவு. அப்போது ஜிலினிக் தம்பதிகளின் வீடும் தாழிடப் படும். அதற்குள் நான் அங்கு போய்ச் சேர்ந்தாக வேண்டும்.

என்னைச் சந்திக்கும் பொருட்டு, என் 'துணைவன்' மிரேக் அங்கு காத்திருக்கிறான். அவன் எனக்குத் தெரிவிக் கவோ, நான் அவனுக்குத் தெரிவிக்கவோ, முக்கியமான தகவல் இந்தத் தடவை எதுவும் இல்லை என்பது எனக்குத் தெரியும். எனினும்ஏற்பாட்டின்படி சந்திக்காமல் இருப்பது தவறு. அது அவசியமற்ற பீதியை உண்டுபண்ணும். தம்பதிகள், நான் போகாவிட்டால் என்னவோ, ஏதோ என்று கலக்கமடைவர். ஏற்கனவே அவர்களுக்கு இருக்கும் கவலைகள் போதாதா? நான் புதிய கவலைகளை வேறு அவர்களுக்கு— அந்த அருமை யான உள்ளங்களுக்கு—உண்டு பண்ண வேண்டுமா? சே, அதை நான் வெறுக்கிறேன்.

அவர்கள் என்னை வரவேற்கிறர்கள். ஒரு கோப்பை தேநீர் கொடுத்து உபசரிக்கிறார்கள்.

மிரேக் வந்திருக்கிறான். அவன்கூட, பிரைடு தம்பதி களும் வந்திருக்கிறார்கள்.

அவர்கள் அங்கு வர அவசியம் இல்லை. இப்போது ஒரு கூட்டம் ஆகிவிடவில்லையா? இது சந்தேகத்துக்கு இடம்

அளிக்கும். துணிந்து இருக்க வேண்டும்தான். ஆனால், அவசிய மில்லாதபோது அது எதற்கு? அவர்களிடம் நான் சொல்லு கிறேன். "தோழர்களே! உங்களைப் பார்க்க எனக்கு விருப்பம் தான். ஆனால் இப்படிச் சேர்ந்தாற்போல் அல்ல. ஒரு அறை யில் ஒரே சமயத்தில் இத்தனை பேர் கூடியிருப்பதைவிட, சிறைக்குப் போக—தூக்கில் தொங்க வேறு சிறந்த மார்க்கம் இல்லை. இரகசிய வேலைகளில் ஈடுபடுவது என்றால் அவற்றிற் கான விதிகளின் பிரகாரம் நடக்கவேண்டும். இல்லையேல் எங்களைவிட்டு விலகிவிட வேண்டும். விதிகளை அனுசரிக்காத தால் நீங்கள் உங்களுக்கு மட்டுமல்ல, மற்றவர்களுக்கும் ஆபத்தை விலைக்கு வாங்குகிறீர்கள். என்ன, புரிகிறதா?"

"புரிகிறது."

"சரி, இருக்கட்டும். இப்போது எனக்கு என்ன கொண்டு வந்திருக்கிறீர்கள்?"

"ரெட் நைட்ஸ் (Red Nights) மே தின மலருடைய நகல்."

"ரொம்ப நல்லது... மிரேக்! நீ...?"

"புதிதாய் ஒன்றும் விசேஷமில்லை. வேலை சரியாக நடக்கிறது..."

"சரிதான். என்னிடமும் சொல்வதற்கு ஒன்றுமில்லை. நீ இப்போது போகலாம். மே தினத்துக்குப் பிறகு சந்திக்கிறேன். நானே சொல்லி அனுப்புகிறேன்.

"இன்னும் கொஞ்சம் 'டீ' குடியுங்கள்!"

"ஊஹூம். திருமதி ஜிலினிக்! வேண்டாம். இங்கு எத்தனை பேர் இருக்கிறோம் என்று பார்த்தீர்களா? நானே குடித்துவிட்டால்..."

"பரவாயில்லை. ஒரே ஒரு கோப்பை மட்டும்..." கோப்பை யில் ஊற்றிய சூடான தேநீரிலிருந்து ஆவி கிளம்புகிறது.

தெருக் கதவை யாரோ தட்டுகிறார்கள்.

இரவு இவ்வளவு நாழிக்குப் பிறகா?.... யார் அது?

தட்டுகிறவர்களுக்குப் பொறுமையில்லை, என்ன அவசரம்! அவர்கள் இடிக்கிறார்கள்!

"திற திற போலீஸ்!"

வந்தது ஆபத்து! மலைக்காதே! ஓடு! எங்கே ஜன்னல் அதோ! தாண்டு! தப்பிப் பிழை! கையில் துப்பாக்கியுண்டு; ஒரு கை பார்க்கலாம்... முடியாது, நேரமில்லை; அவகாச மில்லை. ஜன்னலுக்கு நேரே தெருவில் கெஸ்டேபோ. அண்ணாந்து ஜன்னலைக் குறி வைத்தவாறு துப்பாக்கியுடன் நிற்கிறார்கள்.

அதற்குள் தெருக்கதவை உடைத்துத் தள்ளி, ஆசாமிகள் உள்ளே புகுந்துவிட்டனர். சமையல்கட்டு வழியாகப் பலர் திமுதிமுவென்று அறைக்குள் பிரவேசித்தனர். ஒன்று இரண்டு, மூன்று—ஒன்பது பேர்!

அவர்கள் வந்த கதவின் பின்புறம் நான் பதுங்குகிறேன். நல்லவேளை! அவர்கள் என்னைப் பார்க்கவில்லை. அவர் களை நான் முதுகில் சுட்டுவிடலாம். ரொம்ப சுலபம்! ஆனால்... விபரீதம்; அவர்கள் ஒவ்வொருவருடைய கையிலும் ஒரு துப்பாக்கி. அத்தனையும் அந்த இரண்டு யுவதிகளையும் மூன்று வாலிபர்களையும் குறிப்பார்க்கின்றன. என் துப்பாக்கி யிலிருந்து மறு வேட்டுக் கிளம்புவதற்குள், என் ஐந்து தோழர் களும் சுடப்பட்டு வீழ்வார்கள்... என்னையே நான் சுட்டுக் கொண்டால்?... அப்படியானாலும், என் வேட்டுச் சத்தம் கேட்டவுடன் அவர்களும் சுடுவர். எதிரே நிற்கும் ஐவரும் மடிவர்... நான் சுடாவிட்டால்?... ஆறு மாதமோ, ஒரு வருடமோ அவர்கள் சிறையில் அவதிப்படுவர். புரட்சி அவர் களை விடுதலை செய்யும் உயிரோடே... மிரேக்கும் நானும் மட்டுமே உயிரோடு மீள மாட்டோம். எங்கள் இருவரையும் அவர்கள் சித்திரவதை செய்வார்கள். என்னிடமிருந்து இம்மி கூடக் கறக்கமுடியாது. ஆனால் மிரேக்கிடமிருந்தோ?... அவன் சாமான்யமானவன் அல்ல. ஸ்பெயின் போரில் சண்டை

போட்டவன். பிரான்ஸில் மந்தைவெளிச் சிறையில் இரண்டு ஆண்டுகள் அவதிப்பட்டு, உறுதி குலையாமல் தப்பியவன். யுத்த நடுவில், பிரான்ஸிலிருந்து தலைமறைவாய் பிரேக் நகருக்குத் தப்பி வந்தவன். இல்லை, அவன் ஒன்றையும் சொல்லிவிட மாட்டான்... சுடவா வேண்டாமா? முடிவு செய்ய இரண்டே வினாடிகள்—இல்லை மூன்று வினாடிகளா?

சுட்டால் என்னைத் தவிர வேறு யாருக்கும் நன்மை இல்லை. சித்திரவதைக்கு ஆளாகாமல் என்னைக் காப்பாற்றிக் கொள்வதைத் தவிர, வேறு யாரையும் நான் காப்பாற்றவில்லை. ஆனால் ஐந்து தோழர்களைப் பலியிடுகிறேன். இது உண்மைதானே? ஆமாம்; தீர்மானித்து விட்டேன். பதுங்கியிருந்த மூலையிலிருந்து வெளியே வருகிறேன்.

"ஏய்! இதோ இன்னும் ஒருவன் கூட!"

என் முகத்தில் முதல் குத்து. ஒருவனைக் கீழே உருட்ட அது ஒன்றே போதும்.

"கைகளைத் தூக்கு!"

இன்னொரு குத்து; மீண்டும் ஒன்று.

மேலும் பல அடிகள்; உதைகள்.

"நட!"

என்னை லாரிக்குத் தள்ளிப் போகிறார்கள். எனக்கு எதிரே கைத் துப்பாக்கிகள் நீட்டப்பட்டிருக்கின்றன. அவர்களுடைய விசாரணை, லாரியிலேயே ஆரம்பித்துவிட்டது.

"யாரடா நீ?"

"பேராசிரியன் ஹொராக்."

"புளுகுகிறாய்!"

தோளை உயர்த்தித் தாழ்த்துகிறேன்.

"அசையாதே! சுட்டுக் கொன்று விடுவோம்!"

சுடவில்லை; குத்துகிறார்கள்.

எதிரே ஒரு கார் எங்களைத் தாண்டிச் செல்கிறது. அது வெண்மையாகத் தோன்றுகிறது. கல்யாணக் காரா அது? இந்த அகாலத்திலா கல்யாணக் கார் போகும்?... ஊஹூம்... எனக்கு ஜன்னி கண்டிருக்க வேண்டும்.

பெட்செஸ் கட்டிடம்; கெஸ்டாபோ தலைமைக் காரியாலயம்.

உயிரோடு இங்கு காலடி வைப்பேன் என்று கனவிலும் கருதவில்லை. நாலாவது மாடி வரை என்னைத் தள்ளிப் போகிறார்கள். நாலாவது மாடி! இதுதானா அந்த இடம்! பெயர் பெற்ற இடம்! கம்யூனிஸ்டுகளைக் கருவறுக்கும் வேலைகளைக் கவனிப்பதற்காகப் பிரத்தியேகமாக ஏற்படுத்தப் பட்டுள்ள இலாகா! என் கண்கள் ஆர்வத்தினால் அநேகமாக ஒவ்வொன்றையும் துருவித் துருவிப் பார்க்கின்றன!

என்னைப் பிடிக்க வந்தவர்களில் ஒருவனான நெட்டை அதிகாரி, கைத் துப்பாக்கியைப் பைக்குள் போட்டுக் கொண்டு, தன் காரியாலய அறைக்குள் என்னை அழைத்துப் போகிறான். சிகரெட் பிடிக்க நெருப்பு உதவுகிறான்.

"யார் நீ?"

"பேராசிரியன் ஹெராக்."

"பொய்!"

அவன் கைக்கெடிகாரத்தில் மணி பதினொன்று.

"இவனைச் சோதனைப் போடுங்கள்!"

அவர்கள் என் ஆடைகளைக் களைந்து சோதனை செய்கிறார்கள்.

"இவனிடம் ஒரு அறிமுக அடையாளச் சீட்டு இருக் கிறது?"

"பெயர்?"

"பேராசிரியர் ஹெராக்."

"சரி பார்த்துச் சொல்!"

அவர்கள் யாருடனோ டெலிபோனில் பேசுகிறார்கள்.

"அப்படி ஒரு பெயரும் பதிவு ஆகவில்லை. இது கள்ளச் சீட்டு."

"இதை உனக்குக் கொடுத்தது யார்?"

"போலீஸ் தலைமைக் காரியாலயம்."

முதல் லத்தி அடி; இரண்டு, மூன்று... எத்தனை அடிகள்? அதை நான் எண்ண வேண்டுமா? யாருக்காக? இந்தப் புள்ளி விபரத்தைச் சமப்பிக்க ஒரு இடமும் இல்லை அப்பனே!

"உன் பெயர்? சொல்லு? விலாசம்? பதில்! உனக்கும் யாருக்கும் தொடர்பு? பேசு? அவர்களுடைய விலாசம்? பேசு பேசு! பேசு, இல்லையேல், தோல் உரிந்து விடும்!"

எத்தனை அடிகள் ஒருவனால் தாங்க முடியும்?

நடுநிசி என்று அறிவிக்கிறது ரேடியோ. காப்பிக் கடைகள் மூடப்படும் கடைசி வரை இருந்து குடித்துக் களித்தவர்களும் வீட்டுக்கு நடையைக் கட்டுவர். பிரிய மனம் இல்லாமல் —வீட்டுக்கு முன் வீதியில் நின்று, காதலர்கள் விடைபெற முயற்சிப்பர். நெட்டை அதிகாரி குதூகலத்துடன் அறைக்குள் நுழைகிறான்.

"பத்திரிகை ஆசிரியரே! சௌக்கியம்தானே?"

பத்திரிகை ஆசிரியர்! அதை அவர்களுக்குச் சொன்னது யார்? ஜிலினிக் தம்பதிகளா? பிரைடு தம்பதிகளா? இருக்க முடியாதே! அவர்களுக்கு என் பெயர் கூடத் தெரியாதே!

"பார்த்தாயா? எங்களுக்கு எல்லாம் தெரியும். பேசு; நியாயமாக நடந்து கொள்!"

அவர்களுடைய அகராதியே தனி. அதில் 'நியாயமாக நடப்பது' என்றால், 'காட்டிக் கொடுத்தல்' என்று அர்த்தம்.

நான் அவர்கள் கூறுகிறபடி 'நியாயமாக நடக்க' மாட்டேன்.

"கட்டிப்போட்டு இன்னும் கொஞ்சம் கொடுங்கள்!"

மணி ஒன்று. இன்னும் ஓய்ந்து கிடக்கப் போகாத கார்கள் எல்லாம், இருப்பிடம் நோக்கி ஓடுகின்றன. தெருவெல்லாம் 'வெறிச்'சென்று இருக்கும், இம்மியும் ஐயமின்றி விசுவாசத்துடன் செவிசாய்த்துத் தன் பிரசாரத்தைக் கேட்டு வரும் தன் நேயர்களுக்கு ரேடியோ, "குட்நைட்" (நிம்மதியாகத் தூங்கும்படி பிரார்த்தித்து) கூறுகிறது.

"உன்னைத் தவிர மத்தியக் கமிட்டி உறுப்பினர்கள் யார் யார்? ஒலி பரப்பும் கருவிகளை எங்கே ஒளித்து வைத்திருக்கிறீர்கள்? உங்களுடைய ரகசிய அச்சுக்கூடம் எங்கே இருக்கிறது? பேசு! பேசு! பேசு!"

மீண்டும் அடிகள். உதட்டைக் கடிப்பதால் உண்டாகும் வலியைத் தவிர, வேறு எங்கும் உணர்ச்சி இல்லை.

"பூட்ஸ்களைக் கழற்றுங்கள்!"

உண்மைதான். இன்னும் என் அடிப் பாதங்கள் புடைக்கவில்லை. அவற்றில் இன்னும் சொரணை இருக்கிறது. இல்லாவிட்டால் வலிக்குமா? ஐந்து, ஆறு, ஏழு— ஒவ்வொரு பிரம்பு அடியும் நேரே மூளையில் விழுவது போல் இருக்கிறது.

மணி இரண்டு. பிரேக் உறக்கத்தில் ஆழ்ந்துள்ளது. எங்கோ ஒரு குழந்தை அழும்; மனைவியின் இடுப்பில் தட்டுவான் கணவன்.

"பேசு! பேசு!"

இரத்தம் கசியும் ஈறுகளை என் நாக்குத் தடவிப் பார்க்கிறது. எத்தனை பற்கள் உடைந்தன? ஹூம்! எண்ண முடியாது. இயலவில்லை. பன்னிரண்டா? பதினைந்தா? பதினேழா? இல்லை. அது 'விசாரணை' செய்யும் அதிகாரிகளின் எண்ணிக்கை. அவர்களில் சிலர், நிரம்பக் களைத்துவிட்டார்கள். ஆனால் சாவு இன்னும் வரமாட்டேனென்கிறது.

மணி மூன்று. சுற்றுப்புறங்களிலிருந்து வைகறை நகருக்குள் நுழைகிறது. தோட்டக்காரர்கள் காய்கறிகளை வண்டியில் ஏற்றி

மார்க்கெட்டுக்கு வருகிறர்கள். நகர சுத்தித் தொழிலாளர்கள் தம் பணி புரியப் போகிறார்கள். பொழுது விடிவதை இன்னும் ஒரு தடவை பார்க்க வாய்ப்புக் கிடைக்கும் போலிருக்கிறது.

அவர்கள் என் மனைவியை அழைத்து வந்து என் முன் நிறுத்துகிறார்கள்.

"இவளை உனக்குத் தெரியுமா?"

என் வாயைச் சுற்றி வழியும் இரத்தத்தை, அவளுடைய கண்களில் படாமல் மறைக்க விரும்பி, நாக்கால் வழித்து விழுங்குகிறேன்... ஆனால் அது அசட்டுத்தனம். முகத்தில் இரத்தம் காயாத மயிர்க்கால் ஏது? கைவிரல்களின் நுனி யிலிருந்துகூட அது சொட்டுகிறதே!

"இவனைத் தெரியுமா?"

"ஊஹூம் தெரியாது."

இதைச் சொல்லியபோது, உள்ளத்தில் உண்டான அச்சத்தை அவள் துளிகூட எவ்விதத்திலும் வெளியில் காட்ட வில்லை. பார்வையில்கூட வெளியாகவில்லை. அசல் தங்கம் அவள்! என்னைத் தனக்குத் தெரியும் என்று எந்தச் சந்தர்ப்பத் திலும் காட்டிக் கொள்வதில்லை என அவள் என்னிடம் சத்தியம் செய்திருந்தாள். இப்போது அவர்களுக்கு என்னைத் தெரிந்துவிட்ட போதிலும், அவளையே அதனால் அவர்கள் இழுத்து வந்து விட்ட போதிலும் சத்தியத்தைக் காப்பாற்ற வேண்டிய அவசியமில்லாமல் போன போதிலும், அவள் தன் சத்தியத்தைக் காப்பாற்றினாள். என் நிஜப் பெயரை அவர் களுக்குத் தெரிவித்தது யார்?

அவளை அங்கிருந்து அகற்றிச் சென்றனர். முடிந்த அளவுக்குப் பார்வை மூலம் உற்சாகம் ஊட்டும் வண்ணம் விடையளித்தேன். ஒருவேளை இந்தப் பார்வை உற்சாகமூட்டக் கூடியதாக இல்லையோ, என்னவோ எனக்குத் தெரியாது.

மணி நான்கு. கிழக்கு வெளுக்கப் போகிறதா இல்லையா? ஜன்னல்கள் இன்னும் இருட்டாகவே இருக்கின்றன. சாவு

*வரபோகிறதா இல்லையா? சாவு வருவதில் நிரம்பத் தாமதமா கிறது. அதைச் சந்திக்க நானே போகட்டுமா? எப்படி?*

*யார் பேரிலேயோ முட்டிக் கொள்கிறேன். தரையில் விழுகிறேன். அவர்கள் என்னை உதைக்கிறார்கள். பேஷ்! முடிவை விரைவு படுத்துகிறார்கள்! அது வரப்போகிறது விரைவாக. ஒரு கருப்பன் என் தாடியைப் பிடித்துத் தூக்கி நிறுத்துகிறான். கை நிறையப் பிடுங்கிய தாடி மயிரை என்னிடம் காட்டி, பேய் போலச் சிரிக்கிறான். அது வாஸ்தவத் தில் சிரிக்கத்தக்க விஷயம்தான். எனக்கு வலி தெரியவில்லை.*

*மணி ஐந்து............. ஆறு........ ஏழு........ பகல் மணி பத்து. தொழிலாளிகள் தத்தம் வேலைகளில் ஈடுபட்டிருக்கிறார்கள். குழந்தைகள் பள்ளிக்கூடத்தில் படிக்கிறார்கள். கடைகளில் வியாபாரம் நடக்கிறது. வீட்டில் பகல் சாப்பாடு தயாரா யிருக்கிறது. என் அம்மா இந்நேரத்தில் ஒருவேளை என்னைப் பற்றி நினைந்து உருகிக் கொண்டிருப்பாள். என் தோழர்கள் இந்நேரம் நான் சிறைப்பட்ட செய்தியை ஒருவேளை அறிந் திருப்பர். தாங்களும் சிறைப்படாமல் தப்ப உஷாராகி இருப்பர்... ஆமாம், உஷாராயிருப்பர்... ஒரு வேளை நான் சொல்லி விடுவேனோவென்று... ஊஉம். நான் மாட்டேன். சொல்ல மாட்டேன். தோழர்களே! என்னை நம்பலாம்! உண்மை யிலேயே நம்பலாம்! எப்படியானாலும் முடிவு இன்னும் வெகு தொலைவில் இருக்காது; இந்த எண்ணங்களெல்லாம் வெறும் பீதி; ஜன்னியின் கோளாறுகள்; வெறும் பிதற்றல்கள். ஆமாம், வெறு பிதற்றல்கள்... உடம்பு முழுதும் அடிகள். உணர்வு தவறுகிறது. தண்ணீரைக் கொட்டி உணர்வு ஊட்டுகிறார்கள். உடனே மீண்டும் அடிக்கிறார்கள்... கூடவே, “பேசு! பேசு! பேசு” என்று கத்துகிறார்கள்... ஆனால் நான் இன்னும் சாகாமல் இருக்கிறேன். என்னைப் பெற்ற தாயே! தந்தையே! இந்தச் சித்திரவதையைத் தாங்கிக் கொள்ளும் அளவுக்கு என்னை ஏன் வலுவுள்ளவனாகப் பெற்றீர்கள்?*

பிற்பகல் மணி ஐந்து. இதற்குள் அவர்கள் எல்லோரும் களைத்து விட்டார்கள். அவர்களுடைய அடிகள் ஓய்ந்து ஓய்ந்து விழுகின்றன. திடீரென்று ஒரு குரல், வெகு தொலைவி லிருந்து, நிதானமாக, இரக்கப்படுவது போல் கூறுகிறது.

"அவன் பட்டது போதும்!"

சிறிது நேரம் கழித்த பிறகு, ஒரு மேஜையின் பக்கத்தில் உட்கார்ந்து இருக்கிறேன். அந்த மேஜை என்னிடமிருந்து விலகிப் போவதும், வருவதுமாக இருக்கிறது. யாரோ ஒருவன் எனக்குத் தண்ணீர் தருகிறான். யாரோ ஒருவன் ஒரு சிகரெட்டை நீட்டுகிறான். அதை விரலால் பிடிக்கக்கூட எனக்கு முடியவில்லை. யாரோ ஒருவன் என் காலில் செருப்பை மாட்ட முயலுகிறான். ஆனால் முடியவில்லை என்கிறான். பிறகு என்னைச் சிறிது தூரம் இழுத்துப் போகிறார் கள். சிறிது தூரம் சுமந்து போகிறார்கள். கீழே லாரியில் சேர்க் கிறார்கள். லாரி ஓடுகிறது. எவனோ என் எதிரே துப்பாக்கியை நீட்டிப் பிடித்திருக்கிறான். அந்த நிலைமையில் தப்பி ஓடி விடுவேனாம்! சிரிக்க வேண்டும் போலிருக்கிறது. ஒரு கார் எதிரே வருகிறது. வெண்மலர்களால் போர்த்தப்பட்ட கல்யாணக் கார் அது—ஒருவேளை அது வெறும் கனவாக இருக்கலாம். கனவல்லவென்றால், ஜன்னியாக இருக்க வேண்டும். அல்லது மூச்சின் கடைசி ஓட்டமாக இருக்கக்கூடும். அல்லது சாவாகவே இருக்கலாம். ஆனால் சாவது கஷ்டம். இது சுலபமாக இருக்கிறது. அல்லது இது கஷ்டமும் அல்ல, சுகமும் அல்ல. மேட்டிலிருந்து இறங்குவது போல் எளிதாக அல்லவா இருக்கிறது? ஒரு மூச்சு இழுத்துவிட்டால், எல்லாவற்றையும் ஒழித்து விடலாம்.

எல்லாம் ஒழிந்தனவா—இல்லை? இன்னும் இல்லை. இப்போது மீண்டும் தலைதூக்கிவிட்டேன். யாரும் பிடித்து நிறுத்தவில்லை. எதன் பேரிலும் சாயவுமில்லை. நானே எழுந்து நிற்கிறேன். எதிரே சுவர் பக்கத்தில்தான் இருக்கிறது. அதில்

என்ன? கண்ணைப் பறிக்கிறதே!... இரத்தம் அது.... ஆமாம்.... இரத்தந்தான். கையால் தொட்டுத் தேய்க்கிறேன். அது உறையவில்லை! பச்சை இரத்தம்... அது என் இரத்தம்.

பின்புறம் எவனோ என் தலையில் ஓங்கி அடிக்கிறான். கையைத் தலைக்குமேல் தூக்கு என்கிறான். முழங்காலை மடக்கு என்கிறான். உட்கார் எழுந்திரு! — மூன்றாம் தடவை முடியாமல் விழுகிறேன்.

எஸ்.எஸ். படை முரடன் ஒருவன் என்னை மிதித்து நிற்கிறான். எழுந்திரு என்று உதைக்கிறான். அதில் பிர யோஜனமில்லை. எவனோ முகத்தில் தண்ணீரைக் கொட்டு கிறான். ஒரு மேஜையின் பக்கமாக உட்கார்ந்திருக்கிறேன். ஒரு பெண் எதையோ தருகிறாள். அது மருந்து போலும். எங்கு வலி அதிகம் என்று கேட்கிறாள். எல்லா வலியும், இதயத்தில் தான் என்கிறேன்.

“உனக்கு இதயமே கிடையாதே!” என்கிறான் எஸ்.எஸ். முரடன்.

“ஓ! எனக்கு இருக்கிறது, நிச்சயமாக” என்கிறேன் நான். இப்படிச் சொன்னவுடன் எனக்கே என்னைப் பற்றி ஒரு பெருமை; என் இதயத்தைப் பற்றிய அவதூறை மறுக்க எனக்குத் தெம்பு இருந்ததற்காக.

மீண்டும் எல்லாம் மறைகின்றன. சுவர், பெண், மருந்து, எஸ்.எஸ். முரடன் ஒன்றுமே தெரியவில்லை.

பிரக்ஞை மீண்டபோது, என் எதிரே சிறை அறயின் கதவு திறக்கிறது. ஒரு எஸ்.எஸ். தடியன் என்னை உள்ளே இழுத்துப் போகிறான். கிழிந்து போன என் சட்டையைப் பிடித்து இழுத்து, வைக்கோல் படுக்கையில் தள்ளுகிறான். வீக்கத்தைத் தொட்டுப் பார்க்கிறான். அதை வடிய வைக்கப் பற்று கொண்டு வரும்படி கட்டளை இடுகிறான்.

வெளியில் நின்ற வேறு ஒருவனைக் கூப்பிட்டு தலையை ஆட்டி என்னைக் காட்டியவாறு சொல்கிறான்; “ஏய்!

கொஞ்சம் பாரடா! அவுங்க எப்படி ரொம்ப சரியா, துளிகூடப் பாக்கி வைக்காமெ காரியத்தை முடிக்கிறாங்கன்னு பாரடா."

மீண்டும் ஒரு குரல், வெகு தொலைவிலிருந்து, நிதானமாக இரக்கப்படுவதுபோலக் கூறுகிறது.

"விடியும் வரை பிழைத்திருக்க மாட்டான்! பத்து அடிக்க ஐந்து நிமிஷம். இதமான, ரம்யமான வசந்த 'காலை 1921, ஏப்ரல் 25.

## அத்தியாயம் இரண்டு: சாதல்

வெயிலவன் வெப்பமும்
விண்மீன் ஒளியும்
எம்மிடத் திருந்தே ஏகிடும்போது
எம்மிடத் திருந்தே ஏகிடும்போது

வெண் சுவர்களுக்கு நடுவே ஒரு சவக்குழி. பயபக்தி யுடன் கைகளை அடிவயிற்றிலேயே மடக்கிக் கட்டி, இருவர் ஒருவர் பின் ஒருவராக மெதுவாக, அதைச் சுற்றுகிறார்கள். பாடிப் பழகாத அவர்களுடைய குரல்கள், துக்க மயமான ஒரு மரண கீதத்தை எழுப்புகின்றன.

என்னே நேர்த்தியாய் இறக்கை யடித்துத்
தன்னுடைய வழியே தாவுது ஆத்மா
சொர்க்கம் நோக்கியே சொர்க்கம் நோக்கியே

எவனோ இறந்துவிட்டான். எவன் அவன்? அவனுடைய தலைக்குப் பக்கத்தில், விண்ணை நோக்கி இரண்டு மெழுகுவர்த்திகள் எரிகின்றன. அந்த வெளிச்சத்தில் சவப் பெட்டியையும் சவத்தையும் பார்க்க நான் தலையைத் திருப்ப முயலுகிறேன்.

எங்கே இருளே இல்லாதொழிந்ததோ
எங்கே நிரந்தரப் பகலொளி நிலவுமோ

மிகுந்த பிரயாசையுடன் கண்களைத் திறக்கிறேன். அங்குமி ங்கும் விழியை உருட்டிப் பார்க்கிறேன். அங்கு வேறு ஒருவரையும் காணவில்லை. அவ்விருவரும் நானும் மட்டுமே இருக்கிறோம். அப்படியானால் யாருக்காக அவர்கள் இந்த மரண கீதத்தைப் பாடுகிறார்கள்!

எங்கே தாரகை என்றும் ஒளிருமோ அங்கே
ஏசுவே அன்னவன் ஏசுவே அன்னவன்

இது ஒரு சவ அடக்கச் சடங்கு. ஆமாம், நிச்சயமாக அப்படித்தான் தோன்றுகிறது. ஆனால் அவர்கள் புதைப்பது யாரை? இங்கே மீண்டும் பார்க்கலாம்— அவ்விருவரும் நானும் மட்டுமே இருக்கிறோம். அவர்களைத் தவிர நான்! நான்! அப்படியானால் இது என் சவ அடக்கச் சடங்கா? ஆனால் பொறுங்கள், கவனியுங்கள்! இதில் ஏதோ தவறு நேர்ந்திருக்கிறது. நான் செத்துவிடவில்லை. இன்னும் உயிரோடு இருக்கிறேன். உங்களை நான் பார்ப்பதும், பேசுவதும் உங்களுக்குத் தெரிய வில்லையா? நிறுத்துங்கள்! சாவதற்குள் என்னைப் புதைத்து விடாதீர்கள்.

எவனோ ஒருவன் எம்மிடம் வந்து
இறுதிப் பிரிவுரை சொல்லும்போது
இறுதிப் பிரிவுரை சொல்லும்போது...

அவர்கள் செவிசாய்க்கவில்லை. கேட்கவில்லை. அவர்கள் செவிடர்களா? நான் உரக்கச் சொல்லவில்லையா? அல்லது நான் ஒருவேளை உண்மையிலேயே செத்து விட்டேனா? சவத்தின் குரலை அவர்களால் கேட்க முடியவில்லையோ? என் சொந்தச் சவ அடக்கத்தை நான் பார்க்கும்போது, என் உடல் இங்கேயே மல்லாந்து கிடக்கிறதா? வேடிக்கையாக இருக்கிறதே!

**ஆசை மிகுந்த அவனது விழிகளை**
**திருப்பி உயர்த்துவான் சொர்க்கம் நோக்கியே**
**திருப்பி உயர்த்துவான் சொர்க்கம் நோக்கியே...**

இப்போது எனக்கு ஞாபகம் வருகிறது. எவனோ ஒருவன் என்னைச் சிரமத்துடன் தூக்கி நிறுத்தினான். ஆடையை உடுத்திவிட்டான். பிறகு சவப்போர்வையைப் போர்த்திப் பாடை தூக்கிப் போனார்கள். அவர்களுடைய பூட்ஸ் லாடம் 'டக், டக்' என்று முற்றத்தில் கேட்டது. அதன் பிறகு... நினைவில்லை.

**அழிவிலாப் பேரொளி அங்கே என்றும்**
**நிரந்தரமாக நிலவிடுகின்றது...**

ஆனால் இவையெல்லாம் மதியீனம். நான் இன்னும் உயிரோடு இருக்கிறேன். எங்கோ வலிக்கிறது. தாகம் எடுக்கிறது. செத்தவர்களுக்குத் தாகம் எடுக்காது. கையை அசைக்கப் பார்க்கிறேன். அதற்காகச் சக்தி முழுவதையும் திரட்டி உபயோகிக்கிறேன். இயல்புக்கு மாறான, விசித்திரமான ஒரு சப்தம் என் வாயிலிருந்து குபீரென்று கிளம்புகிறது.

"தண்ணீர்!"

அப்பாடா! அந்த இரு ஆசாமிகளும் வட்டம் சுற்றுவதை நிறுத்துகிறார்கள். என் அருகே குனிகிறார்கள். ஒருவன் என் தலையை உயர்த்துகிறான். ஒரு தண்ணீர் குவளையை என் உதட்டில் சாய்க்கிறான்.

"தம்பி, நீ ஏதாவது கொஞ்சம் சாப்பிட வேண்டும்! இரண்டு நாட்களாய் வெறும் தண்ணீரையே குடித்திருக்கிறாய்."

என்ன? அவன் சொல்வது என்ன? ஏற்கெனவே இரண்டு நாட்கள் கழிந்துவிட்டனவா? இன்றைக்கு என்ன கிழமை?

"திங்கள்."

திங்கட்கிழமை. வெள்ளியன்று நான் கைதானேன். ஓ! என் தலை எவ்வளவு கனக்கிறது! தண்ணீர்தான் எவ்வளவு

குளிர்ச்சி. தூக்கம். தூங்குகிறேன்... ஊற்றின் நீர்ப்பரப்பை ஒரு சொட்டு கலக்கிவிட்டது. எனக்குத் தெரிந்த ஊற்று அது. குன்றுகளுக்கு இடையே புல்வெளியில்—ரோக்லான் மலையின் கீழ்—காட்டிலாகா அதிகாரியின் வீட்டருகில்—அது இருக்கிறது. இலேசான நீர்த்திவலைகள் மர இலைகளில் படுகின்றன. இனிய கீதம் போல் இசைக்கின்றன... தூங்குவது எவ்வளவு இன்பமயமாக இருக்கிறது...

... தூக்கம் கலைகிறது. விழிக்கிறேன். செவ்வாய்க் கிழமை பகல் ஓடிவிட்டது. மாலை நேரம். என்னைக் குனிந்து பார்த்து நிற்கிறது ஒரு நாய். அது ஓநாய் ஜாதியைச் சேர்ந்தது. தன் விவேகமான அழகிய கண்களால் சோதிப்பது போல், என்னை அது கேட்கிறது.

"நீ எங்கு தங்கியிருந்தாய்?"

ஓநாய் அல்ல; அது நாய்; குரல் வேறு யாருடையதோ, ஆமாம். அங்கு வேறு எவனோ நிற்கிறான். நீண்ட பூட்ஸ்கள் மட்டுமே என் கண்களுக்குப் புலப்படுகின்றன. ஒரு ஜதை மட்டுமல்ல; இரண்டு ஜதை; மூன்று ஜதை. ஒரு பட்டாளத்தான் கால் சட்டைகூடத் தெரிகிறதே! அதற்கு மேல் பார்வை ஓடவில்லை. தலையைத் தூக்கினால் கிறுகிறுக்கிறது. ஹும். அது கிடக்கட்டும். யாருக்குக் கவலை? நான் தூங்கலாம்.

புதன் கிழமை.

மரண கீதம் பாடிய இருவரும் இப்போது ஒரு மேஜையின் பக்கத்தில் உட்கார்ந்திருக்கின்றனர். ஒரு மண் சட்டியிலிருந்து எதையோ உண்கிறார்கள். இப்போது தனித் தனியாய் அவர்களை என்னால் விவரிக்க முடியும். ஒருவனைவிட மற்றவன் இளையவன். பார்த்தால் சந்நியாசிகள் போல் தோன்றவில்லை. இது மடத்து அறையல்ல, சிறை. தரையில் நீளமான பலகை கிடக்கிறது. அதன் நுனிவரையில் பார்வையைச் செலுத்துகிறேன். கடைக் கோடியில், அதோ அங்கே கனமான கொடூரக் கதவு...

பூட்டில் சாவி உராயும் சத்தம்; இரு ஆசாமிகளும் துள்ளி எழுந்து விறைப்பாக நிற்கிறார்கள். எஸ்.எஸ். படையினர் இருவர் உள்ளே பிரவேசிக்கின்றனர். எனக்கு ஆடை உடுத்தும் படி கட்டளை இடுகின்றனர். ஒவ்வொரு பாத உறையிலும், சட்டையிலும் எவ்வளவு வேதனை மறைந்திருந்தது என்பது எனக்குத் தெரியாது. ஒரு நோயாளி ஸ்ட்ரெச்சரில் என்னைக் கிடத்தி, கீழே தூக்கிப் போகிறார்கள். நீண்ட வராந்தாவில் அவர்களுடைய கனமான பூட்ஸ்கள் அதிர்ச்சியை உண்டு பண்ணுகின்றன... இந்த வழிதான் முன்பு கடைசியாகப் பிரக்ஞை இழந்த போது என்னை அவர்கள் தூக்கிச் சென்ற வழியாக இருக்க வேண்டும். இது எங்கே போகிறது? எந்த நரகத்தில் போய் முடியும்?

பான்கிராட்ஸ் சிறைப் போலீஸ் காரியாலயம். உபசார மற்ற வரவேற்பு அறை.

என்னைத் தரையில் கிடத்துகிறார்கள். ஆத்திரமாக ஒரு ஜெர்மன் குரல் பேசுகிறது. அதை, போலி நட்பாக விளங்கும் ஒரு 'செக்' குரல் எனக்கு மொழி பெயர்க்கிறது.

"இவளை உனக்குத் தெரியுமா?"

கையால் தாங்கி முகத்தை உயர்த்துகிறேன். ஸ்ட்ரெச்சர் பக்கமாகப் பார்த்து விசாலமான முகமுடைய ஒரு யுவதி நிற்கிறாள். அவள் முகம் தொங்கவில்லை; கம்பீரமாக நிமிர்ந்திருக்கிறது. அச்சமல்ல; பெருமிதம்! அதில் தாண்டவ மாடுகிறது. அவர்களுடைய கண்கள் மட்டும் கீழே பார்க் கின்றன. அதுவும் என்னை நோக்கி வணக்கம் தெரிவிக்கப் போதுமான அளவு மட்டுமே.

"தெரியாது."

ஒரே ஒரு தடவை அந்தப் பயங்கரமான இரவில் பெட்செக் மாளிகையில் அவளைப் பார்த்ததாக ஞாபகம். இது இரண்டாம் தடவை துர்பாக்கியம்! மூன்றாம் தடவையாக அவளைப் பார்க்க முடியவில்லை! எவ்வளவு பெருமிதத்துடன்

இங்கு நின்றாள்! இதற்காக அவள் கையைப் பிடித்துப் பாராட்ட வேண்டும். ஆனால் அந்த வாய்ப்புக் கிடைக்கவே இல்லை. அவள் ஆர்னாட்ஸ் லாரன்ஸுடைய மனைவி, 1942ல் ராணுவச் சட்டம் சாதராச் செய்யப் பட்டவுடன் அவள் தூக்கிலிடப்பட்டாள்.

"ஆனால் இப்போது நிற்பவளை உனக்கு நிச்சயம் தெரியும்."

அனிச்கா ஜிரஸ்கோவா! அட தெய்வமே! 'அனிச்கா நீயெப்படி இங்கு வந்தாய்? உன்னை நான் காட்டிக் கொடுக்க வில்லையே! உனக்கும் எனக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லையே! உன்னை எனக்குத் தெரியாது! புரிகிறதா? உன்னை எனக்குத் தெரியாது.'

"இவளையும் எனக்குத் தெரியாது."

"புத்திசாலித்தனமாக நடந்து கொள்."

"எனக்குத் தெரியாது."

"ஜுலோ, பரவாயில்லை" என்கிறாள் அனிச்கா. விரலில் தன் கைக்குட்டையை அவள் சுற்றுகிறாள். இது அவளுடைய உள்ளக் கிளர்ச்சியைக் காட்டிவிடுகிறது. "பரவாயில்லை. யாரோ என்னைக் காட்டிக் கொடுத்துவிட்டார்கள்."

"யார்?

"பேசாதே!" — பதில் சொல்லவிடாமல் அவளை அவர்கள் தடுக்கிறார்கள். அவள் குனிகிறாள். என்னிடம் கையை நீட்டுகிறாள். முரட்டுத்தனமாக அவளை அவர்கள் அப்பால் தள்ளுகிறார்கள்.

அனிச்கா!

அதற்கு மேல் அவர்களுடைய கேள்விகள் என் காதில் விழவில்லை. இரண்டு எஸ்.எஸ். படையினர் என்னைத் திரும்பவும் ஸ்ட்ரெச்சரில் தூக்கிப் போகிறார்கள். இந்தக் காட்சியைத் தூரத்திலிருந்து வேடிக்கை பார்ப்பவனைப் போல,

வழியில்லாமல் நான் உணர்கிறேன். ஸ்ட்ரெச்சரை முரட்டுத் தனமாக ஆட்டி, என்ன அட்டகாசம் செய்கிறார்கள்! ஒரு முழம் கயிற்றில் தொங்க எனக்கு விருப்பமா என்று சிரித்துக் கொண்டே எவ்வளவு திமிருடன் கேட்கிறார்கள்.

இடத்தைத் திரும்பவும் புரிந்து கொள்ள ஆரம்பிக்கிறேன். என்கூட இருக்கும் கைதிகளில் இளையவன் பெயர் காரெக். வயதான ஆசாமியை அவன் 'அப்பா' என்று அழைக்கிறான். தம்மைப் பற்றி அவர்கள் ஏதேதோ என்னிடம் சொல்கிறார்கள். ஆனால் ஒன்றும் புரியவில்லை. எல்லாம் குழப்பமாக இருக் கிறது. அவர்களுடைய பேச்சில் ஏதோ ஒரு சுரங்கமும், பள்ளி யில் உட்கார்ந்திருக்கும் சிறுவர்களும் வருவதாகத் தோன்று கிறது... ஒரு மணி ஓசை கேட்கிறது. எங்கேயோ தீப்பிடித்திருக்க வேண்டும்... ஒவ்வொரு நாளும் என்னைக் கவனிக்க ஒரு டாக்டரும், ஒரு எஸ்.எஸ். வேலைக்காரனும் வருவதாக அவர் கள் சொல்கிறார்கள். என் உடம்பு சீக்கிரம் குணமாகிவிடும் என்றும், அது ரொம்ப மோசமாகி விடவில்லை என்றும் சொல்கிறார்கள். இப்படித்தான் 'அப்பா' பேசுகிறார்கள். நம்பிக்கை ஏற்படும்படி அதை காரெக் ஆமோதிக்கிறான். இந்த வார்த்தைகளைக் கேட்கும்போது, வேதனைப்படும் சமயத்தில் கூட அவர்கள் முழுப் பொய்யைச் சொல்கிறார்களே என்று நான் நினைக்கிறேன். ரொம்ப நல்லவர்கள்தான். ஆனால் எனக்கு என்னவோ அவர்கள் கூற்றை நம்பமுடியவில்லை.

பிற்பகல்.

கதவு திறக்கிறது. ஓசைப்படாமல் நுழைகிறது நாய். என் தலைமாட்டில் நின்று சோதிப்பது போல் பார்க்கிறது. திரும்ப வும் இரண்டு ஜதை கனமான பூட்ஸ்கள். ஒரு ஜதை நாயின் எஜமானனுடையது என்பது எனக்கு ஏற்கெனவே தெரியும். அவன்தான் அந்த சிறைக்கு சூப்பிரன்டென்டென்ட். இரண்டாவது ஜதை முதல் இரவு 'விசாரணை' செய்த அதிகாரி யுடையது. அவன் தான் கம்யூனிஸ்ட் ஒழிப்பு இலாக்காவுக்குத் தலைவன். அவர்களுக்குப் பின் சில சிவிலியன் கால் சட்டை

தோன்றுகின்றன. கண்களை உயர்த்தி அண்ணாந்து பார்க்கிறேன்... இப்போது புரிகிறது. இவன்தான் என்னைப் பிடிக்க வந்த கோஷ்டிக்குத் தலைமை தாங்கிய நெட்டை அதிகாரி. அவன் ஒரு நாற்காலியில் உட்கார்ந்து கேள்விகளை ஆரம்பிக்கிறான்.

"உன் திட்டத்தில் மண் விழுந்து உன் முயற்சிகள் எல்லாம் வியர்த்தமாகி விட்டன! கடைசியாக உன்னையாவது நீ காப்பாற்றிக் கொள்! கேள்விக்குச் சரியாகப் பதில் சொல்!" ஒரு சிகரெட் நீட்டுகிறான். அது எனக்குத் தேவையில்லை. அதை என்னால் பிடிக்க முடியாது.

"பாக்ஸாஸுடன் எத்தனை நாட்கள் இருந்தாய்?"

பாக்ஸாஸ்! இவ்வளவு தெரிந்துவிட்டதா? இதை யார் சொன்னது?

"பார்த்தாயா? எங்களுக்கு எல்லாம் தெரியும். மறைக்காதே, பேசு?"

உங்களுக்கு எல்லாம் தெரியும் என்றால் தெரிந்ததையே என்னிடம் ஏன் கேட்க வேண்டும், நான் ஏன் இன்னும் சொல்ல வேண்டும்? என் வாழ்க்கையை நான் வீணாக்க வில்லை. அதன் முடிவைக் கெடுத்துக் கொள்ளமாட்டேன்.

ஒருமணி நேரம் நடக்கிறது விசாரணை. அவன் அதட்ட வில்லை; கத்தவில்லை; பொறுமையுடன் கேட்கிறான். பதில் கிடைக்கவில்லை என்றால் வேறு கேள்வியை—மீண்டும் ஒன்றை—புதியதொன்றை—முடிவில்லாதபடி கேட்கிறான்.

"உனக்குப் புரியவில்லையா? இதுதான் முடிவு, தெரிகிறதா? உன் முயற்சியில் நீ தோற்றுவிட்டாய்."

"நான் ஒருவன் மட்டுமே தோற்றிருக்கிறேன்."

"பொதுவுடைமை வெற்றியில் இன்னுமா நம்பிக்கை வைத்திருக்கிறாய்?"

"சந்தேகம் இல்லாமல்."

“இன்னும் நம்புகிறானா?” என்று ஜெர்மன் அதிகாரி கேட்கிறான். நெட்டை அதிகாரி மொழி பெயர்க்கிறார்.

“ரஷ்யாவின் வெற்றியில் இன்னும் நம்பிக்கை கொண்டிருக்கிறானா?”

“ஆமாம், வேறுவிதமாக இருக்க முடியாது.”

ரொம்பக் களைத்துவிட்டேன். விழிப்புடன் இருக்கும் பொருட்டு பலம் முழுவதையும் திரட்டுகிறேன். புண்ணிலிருந்து இரத்தம் கொட்டுவது போல, பிரக்ஞை கிடுகிடு வென்று வேகமாகத் தப்புகிறது. உதவி செய்வதுபோல அவர்கள் கையை நீட்டுகிறார்கள்... நெற்றியில் சாவின் அறிகுறிகளைக் காண்பதால்போலும். சில நாடுகளில் தண்டிக்கப் பட்டவனைத் தூக்கில் கொல்வதற்கு முன்பு கொலையாளி அவனை முத்தமிடுவதுகூட சம்பிரதாயமாக இருக்கிறது.

மாலை நேரம்.

பயபக்தியுடன் அடிவயிற்றில் கைகளை மடக்கிக் கட்டி ஒருவர் பின் ஒருவராக இருவர் சுற்றிச் சுற்றி வருகிறார்கள். தனித்தனியாக மரண கீதத்தைப் பாடுகிறார்கள்.

**வெயிலவன் வெப்பம் விண்மீன் ஒளியும்**<br>**எம்மிடத்திருந்தே ஏகிடும்போது**<br>**எம்மிடத்திருந்தே ஏகிடும்போது**

ஐயோ! போதும்! நிறுத்துங்கள். அந்தப் பாட்டு நல்லதாகவே இருக்கலாம். ஆனால் இன்று வேண்டாம். இன்று மட்டும் வேண்டாம்! இன்று விரைவாக வரவிருக்கிறது மே தினம். அது மனிதனுடைய வாழ்க்கையிலேயே நனி சிறந்த நன்னாள்! பெருநாள்! குதூகல விடுமுறை நாள்! உற்சாக மூட்டக்கூடிய பாட்டாக எதையோ நான் பாட முயலுகிறேன். ஒரு வேளை அது அவர்களுடையதைவிட துக்ககரமானதாக இருக்கிறதோ! என்னவோ! காரெக் முகத்தைத் திருப்பிக்

கொள்கிறான். 'அப்பா' கண்ணைத் துடைக்கிறார். அவர்கள் எப்படி நினைத்தால் என்ன! நான் நிறுத்தவில்லை. பாடு கிறேன். மெதுவாக அவர்களும் சேர்கிறார்கள். பாடுகிறார்கள். சந்தோஷமாக தூக்கத்தில் ஆழ்கிறேன்.

மே முதல் நாள். வானம் வெளுப்பதற்கு முன்.

சிறை மணிக்கூண்டில் மூன்று மணி அடிக்கிறது. முதல் தடவையாக அதன் ஓசை என் காதில் கணீர் கணீர் என்று விழுகிறது. பிரக்ஞை முழுவதும் மீண்டுவிட்டது. ஜன்னல் வழியாகப் புதுக்காற்று வீசுகிறது. அது என் விலாப்புறமாகச் செல்கிறது. படுக்கையின் வெளியே நீட்டிக் கொண்டிருக்கும் வைக்கோல் நுனிகளை அசைக்கிறது. இப்போது தான் எனக்குத் தெரிகிறது. வைக்கோல் நுனிகள் என் முதுகை உறுத்துகின்றன என்று! மூச்சு விடுவது மிகவும் கஷ்டமாகத் தோன்றுகிறது. உடலின் ஒவ்வொரு அணுவும் வலிக்கிறது. ஜன்னலைத் திறந்தவுடன் சட்டென்று பார்ப்பதுபோல் இதுதான் என் முடிவு என்று சட்டென்று புரிந்து கொள்கிறேன். நான் செத்துக் கொண்டிருக்கிறேன்.

சாவே என்னிடம் வர உனக்கு வெகு நேரம் ஆகிவிட்டது. ஒரு காலத்தில் உன்னைச் சந்திப்பதற்குள் பல ஆண்டுகள் கழிந்துவிடும் என்றுதான் நினைத்தேன். சுதந்திர மனிதனாய் வாழலாம்! பற்பல வேலைகளைச் செய்யலாம்; மனம் பூரிக்க நேசிக்கலாம்; இன்பம் பொங்கப் பாடலாம்; நானிலமெங்கும் சுற்றித் திரியலாம். குதூகலிக்கலாம்... இப்படியாக எண்ணி னேன். அப்போது தான் நான் பாலப்பருவம் மாறிப் பக்குவ மடைந்திருக்கிறேன். என் உடம்பில் நிரம்பத் தெம்பு இருந்தது. ஆனால் இப்போது அது இல்லை; குன்றிக் குறைந்து வருகிறது.

நான் வாழ்வை நேசித்தேன். அதன் எழிலுக்காகப் போராடப் புறப்பட்டேன். ஜனங்களே! உங்களை மனப் பூர்வமாக நேசித்தேன். நீங்களும் என்னை நேசித்தபோது என் மனம் குளிர்ந்தது. என்னை நீங்கள் தவறாகப் புரிந்து கொண்ட போது, என் இதயம் வேதனையில் வெந்தது. உங்களில்

யாருக்காவது நான் ஏதாவது தீங்கு இழைத்திருந்தால் அருள் கூர்ந்து மன்னித்து விடுங்கள். என்னால் உற்சாகம் அடைந்த வர்கள், மனம் மகிழ்ந்தவர்கள், வீறு கொண்டவர்கள் யாரேனும் இருந்தால், என்னை மறந்து விடும்படி அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன். என் இறுதி விருப்பம்; நான் விட்டுச் செல்லும் உயில்! அப்பா! அம்மா! சகோதரிகளே! உங்களுக்கு —என் ஆருயிர் மனைவியே! உனக்கு— இன்னுயிர்த் தோழர்காள்! உங்களுக்கு—நான் நேசித்த ஒவ்வொருவருக்கும்— இதுதான் என் உயில். துயரத்தின் தூசியைக் கண்ணீர் கரைத்து விடும் என்று நினைத்தால், சிறுது நேரம் அழுங்கள். ஆனால் வருத்தப்படாதீர்கள், நான் மகிழ்ச்சியாக வாழ்ந்தேன்; மகிழ்ச்சிக்காகச் சாகிறேன்; என் சமாதியில் துக்க வேதனையை நிறுத்துவது கொடுமையாகும்.

மே முதல் நாள்!

இந்த நன்னாளில் பொழுது புலர்வதற்குள் நாங்கள் எழுவோம். கொடிகளைத் தயார் செய்வோம். இந்த நேரத்தில் மாஸ்கோவில், மே தின அணிவகுப்பில் செல்லும் பொருட்டு முதல் வரிசையினர் ஆயத்தமாகி, தத்தம் இடத்தில் தயாராகப் போய் நிற்பர். இன்றைக்கு இந்நேரத்தில் மனித சுதந்திரத்தைக் காப்பதற்காக நடைபெறும் மகத்தான இறுதிப் போரில் லட்சோபலட்சம் மக்கள் சமர் புரிந்து கொண்டிருக்கிறார்கள். ஆயிரக் கணக்கான வீரர்கள் மடிந்து கொண்டிருக்கிறார்கள். நான் அவர்களின் ஒருவன். அவர்களில் ஒருவனாகவே என்று மிருப்பேன். சுதந்திரத்திற்கான இறுதிப்போரில் ஒரு வீரனா யிருப்பது எவ்வளவு மகத்தான பாக்கியம்?

ஆனால் சாவது செளந்தர்யமானதல்ல. எனக்கு மூச்சுத் திணறுகிறது. இருமல் பக்கத்திலுள்ளவர்களை எழுப்பிவிடும் போலிருக்கிறது. கொஞ்சம் தண்ணீர் குடித்தால் ஒருவேளை... ஆனால் தகரக் குவளையில் இருந்த தண்ணீர் முழுவதும் தீர்ந்துவிட்டது. அதோ அந்த மூலையில், கேவலம் ஆறு அடி தூரத்தில்... முகம் கழுவும் இடத்தில் தண்ணீர் ஏராளமாக

இருக்கிறது. ஆனால் அங்கு போய்ச் சேர என் உடம்பில் வலுவிருக்கிறதா?

ஓசைப்படாமல் குப்புறப்படுத்தவாறே நகர்கிறேன். மிக மெதுவாக... சாவின் பெருமை மற்றவர்களை எழுப்பாமல் இருப்பதில்தான் இருக்கிறது என்ற எண்ணமோ என்னவோ? கடைசியாக அங்கு போய்ச் சேர்கிறேன். தொட்டியிலிருந்து ஆர்வத்துடன் தண்ணீரைக் குடிக்கிறேன்.

போகவும், குடிக்கவும், திரும்பி ஊர்ந்து வரவும் எவ்வளவு நாழியாயிற்று என்பது எனக்குத் தெரியாது. மீண்டும் நினைவு தப்புகிறது. கை நாடியைத் தடவிப் பார்க்கிறேன். ஒன்றும் புரிய வில்லை. இருதயம் திடீரென்று தொண்டை பக்கம் பாய்கிறது. உடனேயே பழைய ஸ்தானத்தில் குதிக்கிறது. அதன் கூடவே நானும் கீழே விழுகிறேன். இடையே காரெக் கூறியது மட்டும் காதில் கேட்கிறது.

"அப்பா! அப்பா! கேட்கிறதா? பாவம்? இறுதி மூச்சு விடுகிறான்."

காலையில் டாக்டர் வந்தார்.

ஆனால் இவைகளையெல்லாம், பிற்காலத்தில் மிகவும் பிற்காலத்திலேயே அறிந்தேன்.

அவர் வந்தார்; என்னைப் பரிசோதித்தார். தலையை அசைத்துவிட்டு ஆஸ்பத்திரிக்குப் போனார். வயித்திய ரிப் போர்ட்டை எடுத்து, என் பெயருக்குமுன் நேற்று மாலையில் எழுதப்பட்டிருந்த "மரணம்" என்ற வார்த்தையை அடித்துத் திருத்திவிட்டு ஒரு நிபுணரின் சுய திருப்தியோடு கூறினார்:

"அவனுக்கு ஒரு குதிரையின் வலுவிருக்கிறது."

---

## அத்தியாயம் மூன்று — அறை 267

கதவிலிருந்து ஏழடி தூரம் ஜன்னல்; ஜன்னலிலிருந்து ஏழடி தூரம் கதவு, அது எனக்கு மனப்பாடம்.

இந்தத் தூரத்தை பான்கிராட்ஸ் அறையின் பயின் மரப் பலகைத் தளத்தின் மீது எத்தனை தடவை அளந்திருக்கிறேன். எங்கள் நகர மக்களின் நாசகரமான கொள்கைகளின் விளைவாய் செக் இனத்துக்கே விடப்பட விருந்த பலன்களை மற்றவர்களைத் காட்டிலும் நிரம்பத் தெளிவாக உணர்ந்து கொண்டிருந்தேன் என்பதனால் தானோ, என்னவோ நான் அங்கு அடைப்பட்டிருந்தேன். என் நாடு தற்போது சிலுவையில் அறையப்பட்டிருக்கிறது. என் அறைக்கு முன் ஜெர்மன் காவல்காரன் பாராக் கொடுக்கிறான். வெளியில் எங்கேயோ அரசியல் பிரகஸ்பதிகள் தேசத் துரோக வலைகளைப் பின்னி வருகிறார்கள். மனிதர்களுக்குத் தங்களுடைய கண்களைத் திறந்து பார்க்க எத்தனை நூற்றாண்டுகள் வேண்டியிருக்கிறது? தன் சரித்திரக் காலத்தில் முன்னேற முயன்ற மனித வர்க்கம் எத்தனை ஆயிரம் சிறைகளில் நுழைந்து அவதியுற்றிருக்கிறது? முன்னேற்றப் பாதையில் சொச்சமுள்ள தூரத்தைக் கடப்பதற் குள் இன்னும் எத்தனை சிறையறைகளை அது தாண்ட வேண்டியிருக்கும்! நெரூடாவின் கிறிஸ்து குழந்தையே! மனிதனுடைய விமோசனப் பாதைக்கு ஒரு முடிவே இல்லை. ஆனால் கடைசியாக மனிதன் விழித்துக் கொண்டுவிட்டான்! ஆமாம்; கடைசியாக விழித்துக் கொண்டுவிட்டான்.

ஏழு அடிகள் அப்படி; எழு அடிகள் இப்படி.

ஒரு சுவரில் மடக்குப் பலகைப் படுக்கை. இன்னொன்றில் அசிங்கமான காவியேறிய அலமாரி. அதில் ஒரு மண்சட்டி. தற்போது இவையெல்லாம் எனக்குப் பழக்கமாகிவிட்டன.

இந்தக் காலத்தில் சிறைகள் கூட இயந்திரமயமாக்கப் பட்டிருக்கின்றன. எல்லா அறைகளுக்கும் சூடு தர பெரிய கணப்பு, வாளிக்குப் பதில் ஒவ்வொரு அறையிலும் ஒரு தண்ணீர்க்குழாய், பாதாளச் சாக்கடைக்கு மலத்தைத் தள்ளிச் செல்ல தண்ணீர் விசை. இவை மட்டுமா? முக்கியமான தென்னவென்றால், கைதிகளும் காவலாளிகளும்கூட இயந்திரங் களாக ஆக்கப்பட்டிருக்கிறார்கள். ஆமாம், வெறும் இயந்திரங்

கள்... ஒரு பித்தானை அழுத்தின உடனே கதவின் பூட்டை ஒரு சாவி திறக்கும். இல்லாவிட்டால் கதவின்மேல் புறமுள்ள ஒரு துவாரம் திறக்கும். உடனே எல்லாக் கைதிகளும்—என்ன செய்து கொண்டிருந்த போதிலும் எல்லாவற்றையும் விட்டுத் துள்ளி எழுவார்கள். ஒருவர்பின் ஒருவராக 'அட்டென்ஷனி'ல் விறைப்பாக நிற்பார்கள். எல்லோருக்கும் பெரியவன் ஒரே மூச்சில் உரத்த சப்தமிட்டுக் கீழ்க்கண்டவாறு சொல்லுவான்:

"அட்டென்ஷன்! இருநூற்று அறுபத்து ஏழாம் நம்பர் அறை! மூன்று நம்பர்கள்! எல்லாம் சரி!"

நம்பர் 267 தான் எங்கள் அறை. இதில் எல்லா இயந்திரங் களும் இன்றைக்கு சரியாக இயங்கவில்லை. இரண்டு மட்டுமே துள்ளி எழுந்து 'அட்டென்ஷனி'ல் நிற்கின்றன. நான் இன்னும் படுத்த படுக்கையிலே கிடக்கிறேன். ஒரு வாரமாக, இரண்டு வாரமாக, ஒரு மாதமாக, ஒன்றரை மாதமாக இவ்வாறு குப்புறப்படுத்தபடியே கிடக்கிறேன். தற்போதுதான் நான் புனர்ஜென்மம் எடுத்து வருகிறேன். தலையைத் திருப்பவும், கையை உயர்த்தவும் தெம்பு வந்துவிட்டது. முழங்கையை ஊன்றிப் புரண்டு படுக்கக்கூட முடிகிறது.

இந்தக் காலத்தில் அறையில் சில மாறுதல்கள் ஏற்பட்டன. என் சவ அடக்கச் சடங்கில் மரண கீதம் பாடிய காரெக் திடீரென்று ஒரு நாள் மாயமாய் மறைந்தான். அவன் எங்களிடம் விட்டுச் சென்றது ஒரு கனிந்த உள்ளத்தைப் பற்றிய நினைவேயாகும். அவனை நான் கடைசி இரண்டு நாட்கள் வரையில் சரியாகப் பார்க்கவோ, தெரிந்து கொள்ளவோ இல்லை. அரைகுறை பிரக்ஞையில் கனவு போல் கண்டது தான். அவன் எங்களுடன் கழித்த கடைசி இரண்டு நாட்கள் மட்டும் கொஞ்சம் தெளிவாக நினைவிலிருக்கிறது. அவன் தன் வழக்குச் சம்பந்தப்பட்ட விபரங்களைத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தான். நான் ஒவ்வொரு தடவையும் பாதியிலேயே தூங்கிவிட்டேன்.

அவன் முழுப்பெயர் காரெக்மாலிட்ஸ். தொழிலில் ஒரு மெக்கானிக். ஹூலிட்ஸ் அருகே எங்கேயோ உள்ள ஒரு இரும்புச் சுரங்கத்தில் வேலை பார்த்தான். ஒருநாள் அங்கிருந்து வெடி மருந்துகளை எடுத்துச் சென்றான். அது தலைமறைவுப் போராட்டத்துக்கு அவசியமானது; சுமார் இரண்டு வருடங் களுக்கு முன்பு அவன் கைது செய்யப்பட்டான். இப்போது வழக்கு விசாரணைக்காகப் போகிறான். ஒருவேளை அது பெர்லினில் நடக்கக் கூடும். அவன்கூட ஒரு கோஷ்டி பூராவுமே போகிறது. தண்டனை என்னவோ யாருக்குத் தெரியும்? அவனுக்கு மனைவியும் இரண்டு குழந்தைகளும் இருக்கிறார் கள். அவர்கள் பேரில் அவனுக்கு நிரம்பப் பிரியம். ஆனால் என்னால் ஒன்றும் செய்ய முடியவில்லை.

ஒவ்வொரு நாளும் அவன் என் படுக்கையில் உட்கார்ந்து எப்படியாவது என்னைச் சாப்பிட வைக்க எத்தனிப்பான்; சனிக்கிழமையன்று—எட்டு நாட்களாக இங்கு இருக்கிறேனா? தன் முயற்சிகள் யாவும் பலிக்காமல் போனதைக் கண்டதும் கடைசித் தந்திரத்தையும் அவன் கையாண்டான். போலீஸ் மாஸ்டரிடம் நான் வந்ததிலிருந்து ஒரு பருக்கைகூட உண்ண வில்லை என்று தெரிவிக்கிறான். அந்த போலீஸ் மாஸ்டர் ஒரு விசித்திரமான பிரகிருதி. சதாசர்வகாலமும் தன் தலைக்குக் கத்தி வந்து விட்டதுபோல் கலங்கிக் கொண்டிருப்பான். அத்தோடு, ஒரு தலைவலி மருந்தைக் கைதிக்குக் கொடுப்பதாக இருந்தாலும் செக். டாக்டர், தன் அனுமதியைப் பெற்றே செய்ய வேண்டும் என்று ஜபர்தஸ்து செய்பவன். புகாரைக் கேட்ட வுடன் அவன் சிறை ஆஸ்பத்திரிக் கஞ்சியை ஒரு கலயத்தில் கொண்டு வந்தான்; என்னிடம் கொடுத்துக் குடிக்கச் சொன்னான். நான் அதை வேண்டா வெறுப்புடன் முழுக்க முழுக்க வயிற்றுக்குள் தள்ளும் வரையில் என்னை விட்டு அவன் நகரவில்லை. இவ்விதம் போலீஸ் முரட்டுத்தனம் வெற்றியடைந்ததைப் பார்த்தவுடன், அதற்குத் தான் விடுத்த வேண்டுகோள் வீணாகவில்லை என்று நினைத்த காரெக்

நிரம்பத் திருப்தியடைந்தான். மறுநாள் அவனே என் வாயில் ஒரு கோப்பைக் கஞ்சியைக் கவிழ்த்தான். அந்தக் கஞ்சி ஞாயிற்றுக் கிழமை மட்டும் விசேஷமாகத் தரப்படும் கோலாஷ்.

ஆனால் எனக்கு அதை அதிகமாகக் குடிக்க முடிய வில்லை. நன்றாக வெந்த உருளைக் கிழங்கைக்கூட கன்றிப் போன ஈரில் ஒட்டிக் கொண்டிருக்கும் பற்களால் மெல்ல முடியவில்லை. வீங்கி உப்பிப்போன தொண்டை சின்னஞ்சிறு பருக்கையைக் கூட விழுங்க மறுத்தது.

காரெக்கிற்கும் வருத்தம் தாங்க முடியவில்லை. "கோலாஷ் கூட வேண்டாமா? கோலாஷ்கூட இவன் வேண்டாம் என்கிறான்!" என்று அவன் முறையிடுகிறான். அனுதாபத் துடன் என்னைப் பார்த்துத் தலையை ஆட்டுகிறான்.

பிறகு என் கஞ்சியில் பாதியை 'அப்பா'வுக்குக் கொடுத்து விட்டு, மீதிப் பாதியை ஒரே மடக்கில் உள்ளே தள்ளுகிறான்.

கோலாஷ்! அடடா! எப்படி ருசித்தது! 1942-ல் பான் கிராட்ஸ் சிறையில் வசிக்காத உங்களுக்கு எப்படித் தெரியும் அதன் ருசி! உங்களால் இனி அதைத் தெரிந்து கொள்ளவே முடியாது. அந்தக் கொடூர நாட்களில் எங்கள் வயிறு பசியால் துடித்தபோது வாரம் ஒரு தடவை, குளிக்க உடைகளைக் களைந்த சமயம் குழாய் அடியில் நின்ற உருவங்கள் மனிதத் தோல் போர்த்திய எலும்புக் கூடுகளாகத் தோற்றமளித்தபோது, உன் நெருங்கிய நண்பனும் உன் உணவை — வாயால், முடியா விட்டாலும்—கண்ணால்—விழுங்கியபோது, அது எப்படி ருசித்தது! அந்த நாட்களில் பச்சைத் தண்ணீர் போன்ற தக்காளி ரசமும், வயிற்றைக் கலக்கும் வற்றல் குழம்பும்கூட நளபாகமாகக் கருதப்பட்டன. இந்தக் கொடூர நாட்களில் வாரம் இருமுறை— ஞாயிறு, வியாழன்களில்— ஒவ்வொருவ ருடைய சட்டியிலும் அகப்பையிலிருந்து ஒரு உருளைக்கிழங்கு விழும். அதன் மேல் ஒரு சிறிய இறைச்சித் துண்டோடு ஒரு கரண்டி கறிக் குழம்பு ஊற்றப்படும். அதுதான் கோலாஷ்! அதன்

ருசியே தனி. ருசிகூட முக்கியமல்ல; அந்த நேரத்தில் அது புரிந்த பணிதான் முக்கியம்! அது அந்தச் சமயம் மனித வாழ்க்கையை நினைவூட்டும் சின்னமாக விளங்கிற்று; கெஸ்டோபோ சிறை யின் அநாகரிகமான காட்டுமிராண்டித்தனமான, கொடூரமான வாழ்க்கை நிலைமைகளின் நடுவில், அது சாதாரண வாழ்க்கை யின், நாகரிக வாழ்க்கையின் ஒரு சின்னமாக ஒரு அம்சமாக எங்களிடம் வந்தது. அதன் மதிப்பே அலாதி! ஒவ்வொருநாளும் சாவு 'இதோ, அதோ', என்று எண்ணி மனிதன் ஏங்கி இருக்கும் போது ஒரு அகப்பை நல்ல கறிக்குழம்புக்கு அவன் எத்தகைய மகத்தான மதிப்பை அளிப்பான் என்று யாருக்குத் தெரியும்!

கோலாஷை நான் மறுத்தபோது காரெக்கிற்கு ஏற்பட்ட திகிலை இரண்டு மாதங்களுக்குப் பின் தானே புரிந்து கொண் டேன். என்னை அப்போது சாவு நெருங்கிக் கொண்டிருந்தது என்பதற்கு கோலாஷைக்கூட நான் சாப்பிட விரும்பவில்லை என்பதைவிட வேறு தெளிவான அத்தாட்சி வேண்டியதில்லை.

அன்றைக்கு மறுநாள் இரவு இரண்டு மணி இருக்கும். அவர்கள் காரெக்கைத் தூக்கத்திலிருந்து எழுப்பினார்கள். வெளியேபோக ஐந்து நிமிடங்களில் அவன் கிளம்ப வேண்டும் வாழ்வின் முடிவுக்கா, இன்னொரு சிறைக்கா, தூக்கு மேடைக்கா, யாருக்குத் தெரியும்? இதைப்பற்றி அவர்களுக்குக் கவலை ஏன்? ஏதோ உலாவப் போய்வருவதற்குத் தயாராவது போல ஐந்து நிமிடங்களில் கிளம்ப வேண்டுமென்றனர். அவர்கள் சொல்லிவிட்டால் மறு பேச்சுக்கு இடமில்லை. உடனே புறப்பட வேண்டியதுதான்.

ஐந்து நிமிடங்களில் அவன் ஒரு நொடி நேரம் என் படுக்கை ஓரத்தில் உட்கார்ந்தான்! என் தலையை அணைத் தான்; உச்சியில் முத்தமிட்டான். "போதும் நிறுத்து. இப்படிப் பட்ட உணர்ச்சிகளுக்கு இங்கு இடமில்லை" என்று வெளியி லிருந்த சேவகன் கத்தினான். காரெக் உடனே எழுந்து வெளியே நடந்தான். பூட்டு, பிணைப்பைத் துண்டித்து... நாங்கள் இருவர் மட்டும் மிஞ்சினோம்.

நண்பா! மீண்டும் எப்போதாவது நாம் சந்திப்போமா? அடுத்தபடி எங்கள் இருவரில் எவர் முதலில் வெளியே போவார்? எங்கே போவார்? முதலில் போகப் போகிறவனை இழுத்துப்போக எவன் வருவான்? எஸ்.எஸ். உடுப்பு உடுத்தாத சாவா?

சிறையில் ஏற்பட்ட முதற் பிரிவு அது. அது ஏற்பட்ட போது எங்கள் மனதில் உண்டான எண்ணங்களின் எதிரொலி யைக் கொண்டே இப்போது எழுதுகிறேன். அந்தச் சம்பவத் திற்குப் பிறகு இப்போது ஒரு வருடம் கழிந்திருக்கிறது. நண்பன் கதவைத் தாண்டியபோது உண்டான எண்ணங்கள் இன்று வரை எப்படியோ ஒரு விதத்தில் மீண்டும் மீண்டும் உள்ளத்தில் உறுத்திக் கொண்டே இருக்கின்றன. சில சமயம் இவை உள்ளத்தில் பெரும் பளுவை வைத்தாற்போல அமுக்குகின்றன. நண்பனுக்குப் பதில் வேறு ஒரு கைதி வந்தான், பிறகு அவனும் போனான். மீண்டும் ஒருவன் வந்தான். அவனும் போனான். இப்படியாகப் பலர் வந்து போனார்கள். கதவில் தொங்கிய பெயர் ஜாப்தாவில் பெயர்களின் எண்ணிக்கை மூன்றாகவும், இரண்டாகவும் மாறிக் கொண்டிருந்தது. ஆனால் இன்று வரை 267-ஆம் நம்பர் அறையில் உட்கார்ந்து இருப்பவர்கள் நாங்கள் இருவர் மட்டுமே.

'அப்பா' ஒருவர்; நான் ஒருவன்.

'அப்பா'வுக்கு வயது அறுபது. ஜோஸிப் பேஷக் என்பது அவர் பெயர். உபாத்தியாயராக வேலை பார்த்து வந்தார். கைது செய்யப்பட்ட உபாத்தியாயர்களில் அவர்தான் எல்லோருக்கும் மூத்தவர். அந்தத் தொழிலில் எல்லோரையும்விட அதிக காலம் பணி புரிந்தவரும் அவரே. எனக்கு எண்பத்து ஐந்து நாட் களுக்கு முன்பு அவர் கைது செய்யப்பட்டவர். செக் நாடு விடுதலை அடைந்தவுடன், செக் நாட்டுப் பள்ளிக் கூடங் களைப் புனருத்தாரணம் செய்வது பற்றி ஒரு திட்டம் தயாரித் தாராம்; இது ஜெர்மன் பாராளுமன்றத்துக்கு விரோதமான 'சதி' வேலையாம். அதுதான் அவர் செய்த குற்றம்.

'அப்பா' ஒரு...

எப்படி எல்லாவற்றையும் எழுத முடியும்? ஒரே அறையில் ஒரு வருடகாலமாக வசிக்கும் இருவரைப் பற்றி வர்ணிப்பது என்பது சாமான்ய காரியமல்ல, இந்த ஒரு வருட காலத்தில் 'அப்பா' என்ற பெயருக்கு முன்னும் பின்னுமுள்ள மேற்கோள் குறிகள் மறைந்துவிட்டன. வெவ்வேறு வயதுடைய இரு கைதிகள் உண்மையிலேயே தந்தையும் மகனுமானார்கள். ஒவ்வொருவரும் மற்றவருடைய பழக்கச் சொற்களையும், பாவனைகளையும், சில சமயம் தொனிகளையும்கூட பழகிக் கொண்டோம். அறையில் உள்ள சாமான்களில் எது அவருடையது, எது என்னுடையது என்று இப்போது யாராலும் கூற முடியாது. அவர் கொண்டு வந்தது என்ன, நான் கொண்டு வந்தது என்ன என்பதுகூட யாருக்கும் புரியாது.

ஒவ்வொரு இரவும் அவர் என் பக்கத்தில் உட்கார்ந்து பணிவிடை புரிந்தார். சாவு என்னை அணுகிய போதெல்லாம், தன்னுடைய ஈர வெள்ளைத் துணியால் அதைப் பயமுறுத்தி விரட்டினார். என் கண்களிலிருந்து வடிந்த சீழைத் துடைத்துச் சுத்தம் செய்தார். பிண நாற்றமாக நாறிய அதைக் கண்டு அவர் முகம் சுளிக்கவில்லை. கிழிந்த என் சட்டையைத் துவைத்து, காயவைத்து ஓட்டைகளைத் தைத்தார். ஓட்டைகள் தைக்க முடியாதவாறு இருந்தபோது, தன் சொந்தச் சட்டையை என் பேரில் போட்டு மூடினார். ஒவ்வொரு தினமும் காலையில் உடற்பயிற்சிக்காக எல்லோரும் அரை மணி நேரம் வெளியே அழைத்துச் செல்லப்படுவர். சிறைச் சுவர்களுக்கு மத்தியில் உள்ள திடலில் அது நடக்கும். ஒருநாள் எனக்காக அவர் அந்த சமயத்தில் ஒருபிடி புல்லும், ஒரு மலரும் பறித்து வந்தார். காவல்காரன் பார்த்திருந்தால் உயிரே போய்விடும். எனக்காக அவர் உயிரையும் பொருட்படுத்தவில்லை. இன்றும் 'விசாரிப்பதற்காக' என்னை இவர் இழுத்துச் செல்லும் ஒவ்வொரு தடவையும், அவருடைய காருண்யக் கண்கள் கதவைத் தாண்டும்வரை என் கூடவே வரும். திரும்பியவுடன், 'அந்த

'விசாரணை'யில் என் உடம்பில் ஏற்பட்ட புதிய புண்களை அவர் ஈரத்துணியால் துடைப்பார். அன்புடன் துணியால் கட்டுக் கட்டுவார். இரவில் என்னை அவர் இழுத்துச் சென்றால், இரவு முழுவதும் அவர் தூங்கவில்லை. நான் வந்த பிறகு என்னைப் படுக்கையில் கிடத்தி, போர்வையால் போர்த்திவிட்ட பின்பே அவர் படுப்பார்.

முதல் இரவு வேதனைக்குப் பிறகு இவ்விதம் தான் எங்கள் நட்பு ஆரம்பமாயிற்று. அன்று முதல் அது வளர்ந்து வந்தது. நான் தெம்பு பெற்று எழுந்து, என் கைம்மாறு, கடமைகளை அவருக்குச் செய்ய ஆரம்பித்த பிறகும் அது கெடாமல் வளர்ந்து வந்திருக்கிறது.

இவை எல்லாவற்றையும் ஒரே மூச்சில் எழுதிவிட முடியா. அந்த வருடம் 267-ஆம் நம்பர் அறையில் எத்தனையோ அனுபவங்கள். அப்பா அந்த அனுபவங்கள் ஒவ்வொன்றையும் தன் சொந்த வழியில் பகிர்ந்து கொண்டார். கதை முழுவதும் இன்னும் எழுதப்படவில்லை. இனித்தான் எழுதவேண்டிய விஷயங்கள் அதிகமாக இருக்கின்றன. இது அவரைப்பற்றி இன்னும் நிறையச் சொல்ல முடியும் என நம்பிக்கையூட்டுகிறது.

267-ஆம் நம்பர் அறை அனுபவம் செறிந்த வாழ்க்கையைக் கண்டது. சில சமயம் அடிக்கடி கதவு திறக்கும். மணிக்கு ஒரு தடவை நாங்கள் பார்வையிடப்படுவோம். கம்யூனிஸ்ட் குற்ற வாளியைக் கவனமாகக் கண்காணிக்க வேண்டும் என்ற மேலிடத்து உத்தரவுதான் இதற்குக் காரணம் என்றாலும், காவல்காரர்களின் வெறும் ஆவலும் ஒருவிதத்தில் இதற்குக் காரணமாகும். இங்கு யார் யார் சாகமாட்டார்கள் என்று கருதப்பட்டதோ, அவர்கள் அடிக்கடி செத்தார்கள். எவன் செத்துப்போவான் என்று கருதப்பட்டதோ, அவன் சில சமயம் அபூர்வமாகப் பிழைத்து உயிருடன் இருந்தான். இங்கு காவல் காரர்கள் அடிக்கடி வருவார்கள். அடுத்த வார்டுகளில் உள்ளவர்களும் வருவார்கள். என் பக்கத்தில் நின்று போர்வை யைத் தூக்கிப் புண்களைப் பார்ப்பார்கள். அப்போது சிலர்

மௌனமாக நிற்பர். வேறு சிலர் உரக்கப் பேசுவர். சிலர் பரிகாசம் செய்வார்கள். வேறு சிலர் கருணை காட்டுவது போல் பரிதாபப்படுவார்கள். அடிக்கடி வரும் காவல்காரர் களில் ஒருவன் ஸ்மார்டி. இது அவனுக்கு நாங்கள் வைத்த பெயர். ஒருநாள் அவன் பல்லை இளித்தவாறு, "அந்த சிவப்புப் பிசாசுக்கு ஏதாவது வேண்டியிருக்கிறதா?" என்று கேட்டான். ஒன்றும் வேண்டியிருக்கவில்லை. சில நாட்கள் கழிந்தன. சிவப்புப் பிசாசுக்கு ஒரு க்ஷவரம் அவசியம். ஆகவே அவன் ஒரு நாவிதனை அழைத்து வந்தான்.

நாவிதன் ஒரு கைதி. பெயர் தோழர் போசெக். எங்கள் அறைக்கு வெளியிலுள்ள கைதிகளில் முதலில் பரிச்சயமானவர் இவர்தான்.

நல்லெண்ணத்துடன் தான் ஸ்மார்டி அவரை அழைத்து வந்தான். ஆனால் க்ஷவரம் கொடூர சித்தரவதையாக இருந்தது. அப்பா என் தலையைப் பிடித்துக் கொண்டார். படுக்கை ஓரத்தில் போ செக் மண்டியிட்டு உட்கார்ந்தார். கூர் மங்கிய மொட்டைக் கத்தியினால் க்ஷவரம் செய்ய ஆரம்பித்தார். அவருடைய கைகள் நடுங்கின. கண்களிலிருந்து நீர் கலங்கி வழிந்தது. உயிரற்ற பிணத்துக்கு க்ஷவரம் செய்வதாகத் தீர்மானித்துவிட்டார். அப்படி எண்ணவேண்டாமென்று அவருக்கு நான் கூறினேன்.

"நடுங்காதே! தோழா! தைரியும், தைரியம்! பெட்செக் மாளிகையில் அந்தச் சித்திரவதையை நான் சகித்துக் கொண் டேன் என்றால், உன் க்ஷவரத்தை நிச்சயம் சகித்துக் கொள்வேன்."

ஆனால் எங்கள் இருவருக்குமே போதிய அளவு தெம்பு இல்லை. இதனால் சிறிது நிறுத்தி, களைப்பாற்றிக் கொள்ள வேண்டியிருந்தது.

இரண்டு நாட்களுக்குப் பிறகு வேறு இரண்டு கைதி களுடன் எனக்குப் பரிச்சயம் ஏற்பட்டது.

பெட்செக் கட்டிடத்திலுள்ள அதிகாரிக்குப் பொறுக்க முடியவில்லை. என்னை அழைத்து வரும்படி அவன் பல தடவை கட்டளை இட்டான். ஒவ்வொரு தடவையும், 'இழுத்துப் போக லாயக்கில்லை' என்று போலீஸ் மாஸ்டர் எழுதி அனுப்பினான். ஆகவே லாயக்கில்லாவிட்டாலும் தூக்கி வாருங்கள் என்ற கட்டளை பிறந்தது. என்னைத் தூக்கிப் போவதற்காக நோயாளி ஸ்ட்ரெச்சருடன் இருவர் அனுப்பப் பட்டனர். அவ்விருவரும் கைதிகள்.

மிகவும் சிரமத்துடன் அப்பா என்னைச் சில துணிகளால் போர்த்தினார். அந்தக் கைதிகள் என்னை ஸ்ட்ரெச்சரில் கிடத்தித் தூக்கிப் போனார்கள். அவர்களில் ஒருவர் தோழர் ஸ்கொரிபா. அந்த முற்றத்தில் ஏவல் வேலை செய்தவர். மற்றவர்... இவர் மாடிப்படியில் ஏறிய போது ஆட்டத்தினால் நான் ஸ்ட்ரெச்சரிலிருந்து நழுவி விடாமல் தடுத்துப் பிடித்தார். குனிந்து என்னைப் பிடித்துக் கொண்டே, "உறுதியாக இரு" என்று சொன்னார்.

பிறகு காதோடு காதாக குசுகுசுவென, "இரண்டு அர்த்தத் திலும் உறுதியாக இரு" என்றார்.

இந்தத் தடவை வரவேற்பு அறையில் நாங்கள் தாமதிக்க வில்லை. பலர் கூடியிருந்த விசாலமான ஒரு நீண்ட அறைக்கு என்னைத் தூக்கிப் போகிறார்கள். இன்று வியாழக்கிழமை. இன்றைய தினம் கைதிகளின் உறவினர்கள் வருவார்கள். வெளுத்த துணிகளைக் கொடுத்துவிட்டு, அழுக்குத் துணிகளை வாங்கிப் போவார்கள். அதனால் தான் இந்த அறையில் ஒரே கூட்டம். அவர்கள் உற்சாகமற்ற என் ஊர்வலத்தை அனுதாபத் துடன் உற்றுப் பார்க்கிறார்கள். கையைத் தலைக்கு மேல் உயர்த்தி முஷ்டியை நான் மடக்குகிறேன். இதை ஒரு வேளை அவர்கள் வணக்கம் என்று புரிந்து கொள்ளலாம். அல்லது அர்த்தமற்ற செய்கை என்று கவனிக்காமல் விட்டாலும் விட்டு விடலாம்! ஆனால் அதற்கு மேல் எதையும் செய்ய—ஒரு வார்த்தையைக்கூட வெளியிட எனக்குத் தெம்பு இல்லை. சிறை

வாசலை அடைகிறோம். ஒரு மோட்டார் லாரியில் ஸ்ட்ரெச்சரை அவர்கள் வைக்கிறார்கள். டிரைவருக்குப் பக்கத்தில் இரண்டு எஸ்.எஸ். படையினர் உட்காருகின்றனர். வேறு இருவர் என் தலைமாட்டில் நிற்கின்றனர். இவ்விருவரும் தம் கையில் துப்பாக்கியைத் தயாராக என்னைக் குறிவைத்துப் பிடித்திருந்தார்கள். வண்டி ஓடுகிறது. சக்கரங்கள் நொடியில் விழுந்து விழுந்து எழுகின்றன. மிகமிக மோசமான பாதை. இருநூறு கஜம் போவதற்குள் நான் பிரக்ஞை இழந்துவிட்டேன்.

அது ஒரு தமாஷ் பிரயாணம். அந்த ‘மோட்டார் டிரக்’ ஐந்து டன் எடையுள்ளது. முப்பது கைதிகளுக்கு மேல் அதில் இடமிருக்கிறது. ஆனால், ஒரே ஒருவனுக்காக அது பெட்ரோலைச் செலவழிக்கிறது. முன்னும் பின்னும் இரண்டு பேர் வீதம் எஸ்.எஸ். படையினர் துப்பாக்கியும் கையுமாக விழியைத் திருப்பாமல் ஒரு பிணத்தைக் காவல் புரிகின்றனர், பிணம் தப்பி ஓடிவிடும் என்று நினைத்து!

பிரக்ஞை இல்லாதபோது என்னை ‘விசாரிக்க’ முடியவில்லை. அதனால் என்னைச் சிறைக்குத் திரும்பக் கொண்டு போகிறார்கள். அதே தமாஸ் நாடகம் மறுநாளும் நடிக்கப் படுகிறது. இந்தத் தடவை ஒரே ஒரு வித்தியாசம் என்னவென்றால், பெட்செக் கட்டிடத்தை அடையும் வரையில் நான் பிரக்ஞையுடன் இருந்தேன். அங்கு சென்றவுடன், பிரடரிக் என்ற அதிகாரி என் உடம்பைச் சிறிது கவனக் குறைவாகத் ‘தொட்டான்’. உடனே என் பிரக்ஞை ஓட்டமெடுத்தது. பிரக்ஞை இல்லாமலேயே சிறைக்குத் தூக்கிப் போனார்கள்.

அதன் பிறகு அனேக நாட்கள் செத்துவிட்டதாக நினைக்கச் சந்தர்ப்பமில்லாத முறையில் வாழ்ந்தேன். வாழ்க்கையின் உடன்பிறந்த சகோதரியாகிய வலி, நொடி நேரம்கூட விடாமல் என்னைத் தொந்தரவு செய்து கொண்டிருந்தது; அதுவும் வெகு கடுமையாக. இதனால் உயிர் போய்விட்டதாக நினைக்கவே முடியவில்லை. பான்கிராட்ஸ் சிறையிலுள்ள மற்ற

கைதிகள் எல்லோரும், எப்படியோ நான் பிழைத்துக் கொண்டு விட்டதைத் தெரிந்து கொண்டார்கள். உடனே பல வழிகளில் எனக்கு வாழ்த்து அனுப்பத் தொடங்கினர். சுவரில் தட்டுவதன் மூலம் சிலர் வாழ்த்தினார்கள்; உணவு கொண்டு வந்த ஏவல் கைதிகளின் கண்கள் மூலம் சிலர் செய்திகளை அனுப்பினார்கள்.

என் மனைவிக்கு மட்டுமே என்னைப் பற்றி ஒன்றும் தெரியாமல் இருந்தது. அவள், நான் இருந்த அறைக்குக் கீழே உள்ள மாடியில் ஒரு தனி அறையில் இருந்தாள். அவள் கூட வேறு யாரும் இல்லை. தன்னந்தனியாக கவலையால் பீடிக்கப் பட்டு மனம் வெதும்பினாள். ஒரு நாள் உடற்பயிற்சி சமயத்தில் வேறு ஒரு பெண் கைதி குசு குசுவென்று என்னைப் பற்றி அவளிடம் கூறினாள். அடி தாங்க முடியாமல் நான் செத்து விட்டதாகச் சொன்னாள். இந்தச் செய்தி அவளுடைய மூளை யைக் கலக்கிவிட்டது. பயித்தியம் பிடித்தவளைப் போல் துள்ளி ஓடினாள். எதுவும், யாரும் அவள் கண்ணில் தெரிந்ததாகத் தோன்றவில்லை. ஸ்திரி காவலாளி அவளுடைய முகத்தில் பலமாகக் குத்தினாள். அதையும் அவள் கவனிக்கவில்லை. அந்தச் சிறை முற்றத்தில் சுற்றிச் சுற்றி ஓடினாள். தள்ளாடி நிற்கும் உருவங்களோடு அவளைத் தள்ளிச் சேர்த்ததுகூட அவளுக்குத் தெரியவில்லை. பகல் முழுவதும் தனியறையில் சுவரையே வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தன அவளுடைய கருணை மிகுந்த கண்கள். அழக்கூட முடியாத அளவுக்கு அவளுடைய மனம் உடைந்துவிட்டது. அப்போது அவளுடைய மனதில் என்னென்ன எண்ணங்கள் தோன்றினவோ? மறுநாள் அவள் வேறு ஒரு வதந்தியைக் கேள்விப்பட்டாள். சித்திரவதையினால் நான் சாகவில்லை என்றும், வலியிலிருந்து தப்பும் பொருட்டுத் தற்கொலை செய்து கொண்டேன் என்றும் அறிந்தாள்.

அந்தச் சமயத்தில் நான் என் படுக்கையில் கிடந்து உடலை முறித்துக் கொண்டிருந்தேன். ஒவ்வொரு மாலையிலும் சுவர்ப் பக்கம் திரும்பி, என் அருமை மனைவி குஸ்தினா

மிகவும் விரும்பிய பாட்டைப் பாடினேன். ஆனால் அது அவள் காதுக்கு எட்டவில்லை. உணர்ச்சி முழுவதையும் கொட்டி நான் பாடியிருக்கும்போது, அது எப்படி அவள் காதுக்கு எட்டாமல் போயிற்று?

பரவாயில்லை. இன்றைக்கு அவளுக்குத் தெரியும். இன்றைக்கு அந்தப் பாட்டை அவளால் கேட்க முடியும். வெகு தூரத்தில் இருந்தபோதிலும், அவள் காதுக்கு இது எட்டும். ஏனெனில், 267-ஆம் நம்பர் அறையில் தினசரி பாட்டுச் சப்தம் கேட்கிறதென்பது எல்லாக் காவலாளிகளுக்கும் தெரியும். இப்போது இது வழக்கமாகப் போய்விட்டதால், சப்தம் போடாதே என்று அவர்கள் கதவைத் தட்டி அதட்டுவதில்லை.

267-ஆம் நம்பர் அறை பாடுகிறது. நான் என் வாழ்நாள் பூராவும் பாடி இருக்கிறேன். அதன் முடிவிலே ஏன் அதை நிறுத்த வேண்டும்? அதுவும் உணர்ச்சி ததும்ப வாழ்கிறபோது? நிறுத்தக் காரணமில்லை. நான் மட்டுமா? அப்பா பேஷெக்கைப் பாருங்களேன், அவர் ஒரு அசாதாரணமானவர். பாட்டு என்றால் ரொம்ப ஆசைப்படுகிறார். ஆனால், அவருக்கு இசைக் குரல் கிடையாது. இசைக் காதும் கிடையாது. இசை நினைவும் கிடையாது. ஆனால், பாட்டு என்றால் ஆர்வத்துடன் நேசிக்கிறார். ரொம்ப குஷியாக அவர் பாட ஆரம்பித்து விட்டால், அது இசையாகவே இருக்காது. ஒரு ஸ்தாயியிலிருந்து இன்னொரு ஸ்தாயிக்குச் சட்டென்று தாவுவார். 'அ' என்று உச்சரிக்க வேண்டிய இடத்தில் 'க' என்பார். இருந்தபோதிலும், பாடுவது என்றால் மனம் மகிழ்ந்து லயித்து விடுகிறார். ஆகவே சந்தோஷமாகத் தோன்றும் போதெல்லாம் நாங்கள் பாடு கிறோம். மனக்கவலை வருகிறபோதும் பாடுகிறோம். யாராவது ஒரு தோழர் வெளியே போகும்போது, அவருக்கு வழியனுப்பப் பாடுகிறோம். போகிறவரை மீண்டும் பார்க்கவே முடியாது. கிழக்குப் போர் முனையிலிருந்து, நற்செய்தி வரும் போதெல் லாம் பாடுகிறோம். யுகயுகாந்திரங்களாக ஜனங்கள் பாடி வந்திருப்பதுபோல், அவர்கள் ஜனங்களாக இருக்கும் வரையில்

பாடப்போவதுபோல, நாங்கள் எங்கள் மகிழ்ச்சிக்காக அல்லது ஆறுதலுக்காகப் பாடுகிறோம்.

சூரியன் இல்லாமல் எப்படி வாழ்வு இல்லையோ, அதே போல் பாட்டு இல்லாமல் வாழ்க்கை இல்லை. இங்கே எங்களுக்கு இரு மடங்கு அதிகமாகப் பாட்டுத் தேவை. ஏனெனில், இங்கு எங்களைச் சூரியன் எட்டிக்கூடப் பார்ப்ப தில்லை. 267-ஆம் நம்பர் வரை, வடக்குப் பக்கம் அமைந்தி ருக்கிறது. கோடை காலத்தில் ஒரு சில நாட்களில் மட்டுமே அஸ்தமிக்கும் சூரியனுடைய ஒளிக்கிரணங்கள் சில நிமிடங்கள் கிழக்கப் பக்கத்து ஜன்னல் வழியாக அறைக்குள் பிரவேசிக்கும். அந்தச் சில நிமிடங்களில் அப்பா தன் படுக்கை மேல் ஏறி நின்று சூரியனைப் பார்ப்பார்... அவன் அவசரமாக ஓடி விடுவான். மிகவும் வருந்தத்தக்க துக்ககரமான காட்சி.

சூரியன்! அவன் எவ்வளவு தாராளமாகத் தன் அற்புத கிரணங்களை அள்ளி வீசுகிறான்? மனிதனுடைய கண் எதிரே எத்தனை அதிசயங்களைச் செய்கிறான்! ஆனால், எவ்வளவு குறைவான ஜனங்கள் சூரிய வெளிச்சத்தைப் பெற்று வாழ் கிறார்கள்! ஒருநாள், அவன் எல்லோருக்கும்—ஆமாம் எல்லோருக்கும்—வெளிச்சம் தரும் வண்ணம் பிரகாசிப்பான். அவன் வெளிச்சம் எல்லோருக்கும் கிடைக்கும். நாம் எல்லோரும் அவனுடைய இதமான கிரணங்களில் வாழ்வோம். இதைத் தெரிந்துகொள்ள எவ்வளவு ஆனந்தமாக இருக்கிறது! ஆனால் இதைவிட முக்கியத்துவம் மிகவும் குறைந்த ஒன்றைப் பற்றி நான் அறிய விரும்புகிறேன்— எங்கள் இருவருக்கும் அவன் மீண்டும் வெளிச்சம் தருவானா?

எங்கள் அறை வடக்குப் பக்கமாக இருக்கிறது. 'கோடை காலத்தில்' எப்போதாவது ஒருநாளில் மட்டும் அதிருஷ்ட வசமாகச் சூரியன் அஸ்தமனத்தை நாங்கள் பார்க்கிறோம். ஓ! அப்பா! சூரியன் உதயமாவதை மீண்டுமொரு தடவை பார்க்க எவ்வளவு ஆசையாக இருக்கிறது!

புத்துயிர் பெற்று எழுவது (புனர்ஜென்மம்) சாதாரணம ானது அல்ல. அது அலாதியானது. வர்ணிக்க முடியாத அளவுக்கு அசாதாரணமானது. நிம்மதியாக அலுப்புத்தீர தூங்கி எழுந்தவுடன், ஒரு இனிய பகலில் உலகம் மனதை மிகவும் கவர்கிறது. புத்துயிர் பெறும் தினம், மற்ற எல்லா நாட்களையும் விட அழகானது. இதற்கு முன்பு தூங்கியதைவிட நன்றாகத் தூங்கி எழுந்த தினத்தைப்போல. வாழ்க்கை நாடகமேடையை நன்றாகத் தெரிந்து கொண்டதாக நினைத்தாய். ஆனால், புனர்ஜென்மம் எல்லா விளக்குகளையும் திருப்பிவிட்டு, கண்ணாடிகளில் பிரதிபலிக்கச் செய்து, மேடையை முழு வெளிச்சத்தில் உனக்குக் காட்டுகிறது. வாழ்க்கையைப் புத்தி சாலித்தனமாகப் பார்த்து, விவேகத்துடன் புரிந்துகொண்டதாக நினைத்தாய். ஆனால், புனர்ஜென்மம் உன் கண்முன் ஒரு தூரதரிசினியையும், அதே சமயத்தில் ஒரு சூக்ஷ்மதரிசினியையும் வைக்கிறது. இது திடீரென்று ஏற்படுகிறது. மந்திரவாதியின் ஜாலவித்தையைத் தோற்கடிக்கும் அற்புதத்தை வசந்தம் திடீரெனத் தோற்றுவிப்பது போல, இது தோன்றுகிறது.

அப்படிப்பட்ட அற்புதம், ஒரு வினாடிதான் இவ்விடத்தில் நிகழும் என்பது உனக்குத் தெரியும். இருந்தாலும் இங்கே கூட அது நிகழ்கிறது. பான்கிராட்ஸ் சிறைபோன்ற கவர்ச்சிகரமான சுற்றுப்புறத்தில்கூட நிகழ்கிறது.

கடைசியாக ஒருநாள், அவர்கள் உன்னை உலகத்துக்கு அழைத்துப் போகிறார்கள். ஸ்ட்ரெச்சர் இல்லாமல் ஒருநாள் உன்னை 'விசாரணை'க்குக் கூப்பிடுகிறார்கள். அப்படிப் போக முடியாது என்று உனக்குத் தோன்றுகிறது. இருந்த போதிலும், அங்கு போவது சாத்தியமாக இருக்கிறது. தாழ்வாரத்திலும், மாடிப் படிகளிலும் ஓரத்தில் கைப்பிடிகள் இருக்கின்றன. நீ நடக்கவில்லை. அவற்றைப் பிடித்துக் கொண்டே நகர்கிறாய்.

கீழே இறங்கியவுடன், சகோதரக் கைதிகள் உன்னைத் தாங்கிக் கொள்ளுகின்றனர். மெதுவாகச் சிறை பஸ்ஸுக்கு உன்னை அழைத்துப் போகிறார்கள். பஸ்ஸில் நீ உட்காருகிறாய். அது இருட்டாக இருக்கிறது. உன்னைத் தவிரப் பத்துப் பன்னி ரெண்டு பேர் அதில் இருக்கிறார்கள். புதிய முகங்கள் உன்னைப் பார்த்துப் புன்னகை செய்கின்றன. நீயும் பதிலுக்குப் புன்னகை புரிகின்றாய். குசுகுசுவென்று காதோரமாக யாரோ என்னவோ சொல்கிறார். அவர் யார் என்று உனக்குத் தெரியாது. யாருடைய கையையோ நீ அழுத்திப் பிடித்துக் கொள்கிறாய். அது யாருடையதென்பதும் உனக்குத் தெரியாது. பெட்செக் கட்டிடத்தை அடைந்து பஸ் திரும்பி நிற்கிறது. உன்னுடைய புதிய தோழர்கள் உன்னைத் தாங்கி கீழே இறக்கி விடுகின்றனர். நீங்கள் எல்லோரும் ஒரு விசாலமான அறைக்குள் பிரவேசிக்கிறீர்கள். அந்த அறையின் சுவர்களில் ஒன்றுமே இல்லை. வெறிச்சென்று இருக்கின்றன. ஐந்து வரிசைகளில் பெஞ்சுகள் கிடக்கின்றன. அவற்றில் சில உருவங் கள் விறைப்பாக உட்கார்ந்திருக்கின்றன. அவர்களுடைய உள்ளங்கைகள், முழங்கால் மேல் படிந்து உறைந்தவை போல் விறைத்திருக்கின்றன. எதிரே உள்ள அசையாத சுவரை, அவர்கள் வெறிக்கப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்... அதுதான் உன் புதிய வாழ்க்கையின் ஒரு பகுதி. அதற்குத்தான் ‘சினிமா’ என்று பெயர். உன் வாழ்க்கை முழுவதையும், நூற்றுக் கணக்கான தடவை நீ விமர்சனம் செய்து பார்க்க உதவுகிற வெள்ளித்திரை அதுதான்.

## இடைவேளை – மே தினம், 1943

இன்று 1943-ஆம் வருட மே தினம். இதை ஒரு இடை வேளையாகக் கருதுகிறோம். இதில் எழுதுவதற்கு எனக்கு ஒரு வாய்ப்புக் கிட்டியிருக்கிறது. என்னே என் பாக்கியம். ஒரு வினாடி நேரம் திரும்பவும் கம்யூனிஸ்ட் பத்திரிகை ஆசிரிய னாக வேலை செய்யச் சந்தர்ப்பம்! புதிய உலகப் போராட்டச்

சக்தியின் மே தின அணிவகுப்பைப் பற்றி எழுத ஒரு வாய்ப்பு. எத்தகைய அதிர்ஷ்டம் இது!

மே தினத்தைப் பற்றி எழுதப் போகிறேன் என்றவுடன் பட்டொளி வீசிப் பறக்கும் கொடிகளைப் பற்றி எழுதுவேன் என்று எதிர்பார்க்காதீர்கள். அதைப் பற்றி எழுதப் போவ தில்லை. உணர்ச்சிகரமான சம்பவங்களைப் பற்றி வர்ணிப் பேன் என்று நினைக்க வேண்டாம். அப்படிப்பட்ட வர்ணனை களை மக்கள் நிரம்ப விரும்புகின்றனர் என்பது உண்மையே. ஆனால், நான் அப்படிப்பட்ட கட்டுரையையும் தீட்டவில்லை. அப்படிப்பட்ட சம்பவங்களைவிட மிகமிகச் சாதாரணமான நிகழ்ச்சிகளையே இப்போது எழுதுகிறேன். ஏனெனில், இப்போது இவ்விடத்தில், முந்திய வருடங்களில் பிரேக் நகர வீதிகளில் மே தினத்தன்று வானமதிரக் கோஷமிட்டு ஆயிரக் கணக்கான கொடிகளைப் பறக்கவிட்டு பவனி வந்த லஷோப லக்ஷ ஜனங்கள் பிரசன்னமாகி இருக்கவில்லை. மாஸ்கோவின் செஞ்சதுக்கத்தில், ஆழி அலைகளைப்போல் சாரைசாரையாக அணிவகுத்துப் போகும் லக்ஷக்கணக்கான மக்களும் இங்கு இல்லை. லக்ஷக்கணக்கான பேர் அல்ல; நூற்றுக்கணக்கான வர்கள் கூட இங்கு இல்லை. விரல் விட்டு எண்ணத்தக்க ஒரு சில தோழர்கள்தான் இருக்கிறார்கள். இருந்தாலும் முக்கியத்து வத்தில் அந்த மகத்தான அணிவகுப்புகளுக்கு இது எவ்விதத் திலும் குறைந்ததல்ல. ஏனெனில் இங்கு நாங்கள் பார்க்கும் காட்சி அலாதியானது. இங்கு புதிய உலக சக்திகள் வீதி அணி வகுப்பில் விமர்சிக்கப்படவில்லை. கொஸ்ர நெருப்பு ஆற்றிலே பரீட்சிக்கப்படுகின்றன. நெருப்பு ஆற்றில் எதிர் நீச்சு நீந்தும் போது, அவை பொசுங்கிச் சாம்பலாகிவிடவில்லை; வலு வுள்ள எஃகாக உருவாகின்றன. வீதியில் அல்ல போர்முனை அகழிகளில் நடைபெறும் விமர்சனம் இது. அகழிகளில் சாம்பல் நிறமான போர்க்கள உடையை அணிந்து நிற்கிறோம் நாங்கள்.

மிகமிகச் சிறிய காரியங்களைச் செய்வதன் மூலம் இந்தப் பரீட்சை இங்கு நடத்தப்படுகிறது. போராட்ட உலைக்களத்தில் புகுந்து வராத உங்களுக்கு இதைப் புரிந்து கொள்ள முடியுமோ, முடியாதோ சந்தேகம்தான். ஒருவேளை புரிந்து கொண்டாலும் கொள்ளலாம். நான் சொல்கிறேன். நம்புங்கள்; சக்தி இங்கு தான் பிறந்து கொண்டிருக்கிறது.

காலை, அடுத்த அறையிலுள்ள தோழர் சுவரில் தட்டு கிறார். அது பீத்தோவான் பாட்டின் தாளம். அது காலை வாழ்த்துக்கள். மற்ற நாட்களைவிடப் பலமாக இன்று அவர் தாளம் போட்டு வாழ்த்துகிறார். மற்ற நாட்களை விட இன்று அது பரவசமாக ஒலிக்கிறது. ஸ்தாயியை உயர்த்திப் பேசுகிறது சுவர்.

இருக்கிற ஆடைகளில் சிறந்ததை எடுத்து உடுத்திக் கொள் கிறோம். எல்லா அறைகளிலும் இப்படியே.

காலைச் சாப்பாடு குதூகலத்துடன் நடக்கிறது. ஏவல் கைதிகள் திறந்த அறைக்கு முன் வரிசையாகக் கறுப்புக் காப்பி, ரொட்டி, தண்ணீர் ஆகியவற்றைக் கொண்டு வந்து கொடுக் கிறார்கள். தோழர் ஸ்கொரிபா, வழக்கத்துக்கு மாறாக இரண்டுக்கு பதில் மூன்று பன் ரொட்டிகளை என்னிடம் தருகிறார். அது அவருடைய மேதின வாழ்த்து. உஷாராக இருக்கும் அவர், தன் உணர்ச்சிகளை வெளியிட ஏதாவது சாதாரணமான காரி யத்தை இவ்விதம் யோசித்துச் செய்கிறார். பன் ரொட்டிக்கு அடியில், என்னுடைய விரல்களை அவருடைய விரல்கள் இலேசாகப் பிடித்து அழுத்துகின்றன. அதில் உணர்ச்சிகள் பரிமாறிக் கொள்ளப்படுகின்றன. யாரும் பேசத் துணிவ தில்லை. கண்ஜாடை காட்டுகிறார்களோ என்று பார்க்க, காவல்காரர்கள் எங்களுடைய கண்களையும் விடாமல் கவனிக் கிறார்கள். ஆனால் ஊமைகளுக்குத் தங்களுடைய விரல் களாலேயே மிகவும் தெளிவாகப் பேசிக் கொள்ள முடியும்.

எங்கள் ஜன்னலுக்குக் கீழே பெண் கைதிகள் உடற் பயிற்சிக்காக ஓடுகிறார்கள். மேஜைமேல் ஏறி நின்று, கம்பி களில் முகத்தை வைத்து நான் அவர்களைப் பார்க்கிறேன்! அவர்கள் ஒருவேளை அண்ணாந்து பார்க்கலாமல்லவா? அவர்கள் என்னை அண்ணாந்து பார்க்கிறார்கள். முஷ்டியை மடக்கி லால் சலாம் செய்கிறர்கள். திரும்பவும் சலாம் செய்கிறார்கள். கீழே இன்றைக்கு மற்ற நாட்களைவிடக் குதூகலமாக இருக்கிறது. வாஸ்தவத்திலேயே குதூகலமாக இருக்கிறது. இதை எல்லாம் காவல்காரர்கள் பார்க்கவில்லை. ஒரு வேளை பார்க்க விரும்பவில்லையோ என்னவோ, அது கூட மே தின அணி வகுப்பில் ஒரு பகுதிதான்.

எங்கள் உடற்பயிற்சிக்கு நேரம் வருகிறது. பயிற்சியை முன் னின்று நடத்தும் பொறுப்பு என்னைச் சேர்ந்தது. இன்றைக்கு மே தினம். ஆகவே, நாம் ஏதாவது புதிய பயிற்சியை— காவல்காரர்கள் பார்த்தாலும் பொருட்படுத்தாமல்— செய்ய வேண்டும்; முதல் பயிற்சி கத்தியை ஓங்கி ஓங்கி அடிப்பது போன்ற பாவனை. ஒன்று இரண்டு. ஒன்று இரண்டு! அது முடிந்தவுடன் இரண்டாவது பயிற்சி. அறுவடை செய்வது போன்ற பாவனை, சுத்தியும் அரிவாளும்—தோழர்கள் புரிந்து கொள்கிறார்கள். வரிசை முழுவதிலும் ஒரு புன்னகை பரவுகிறது. எல்லோரும் உற்சாகத்துடன் பயிற்சியைச் செய் கிறார்கள். இதுதான் நம் மே தின அணிவகுப்பு தோழர்களே, இந்த அபிநயம்தான் நம் மே தினப் பிரதிக்ஞை. நாம் உறுதி யாக இருப்போம்; சாவை எதிர் நோக்கி நடப்பவர்களும் உறுதியாக இருப்போம்—இது தான் அபிநயத்துக்கு அர்த்தம்.

அறைக்குத் திரும்புகிறோம். மணி ஒன்பது. கிரம்ளின் மணிக் கூண்டில் பத்துமணி அடிக்கிறது. செஞ்சதுக்கத்தில் அணிவகுப்பு ஆரம்பமாகிறது. கவனியுங்கள். அவர்கள் சர்வ தேசிய கீதம் பாடுகிறார்கள். உலகம் முழுவதிலும் ஒலிக்கிறது அந்தக் கீதம். நம் அறையிலும் அது கம்பீரமாக ஒலிக்கட்டும்.

நாங்களும் அதைப் பாடுகிறோம். பிறகு ஒன்றன் பின் ஒன்றாய்ப் பல புரட்சிப் பாட்டுக்கள் தொடருகின்றன. நாங்கள் தனிமை யில் இருக்க விரும்பவில்லை— இருக்கவுமில்லை. நாம் உலகத்தில் சுதந்திரத்துடன் பாடத் துணிவு கொள்கிறவர் களைச் சேர்ந்தவர்கள். அவர்கள் யுத்த களத்தில் சமர் புரிந்து கொண்டிருக்கிறார்கள், நம்மைப் போலவே....

குளிர்ந் துறைந்த சுவர்கள் கொண்ட
கொட்டடிச் சிறைக்குள்ளே
இருந்து வாடுகின்ற என்றன்
இனிமையான தோழர்காள்
இன்று எங்கள் அணிவகுப்பில்
இல்லை நீங்கள்; ஆயினும்
என்றும் எங்களோடு நீங்கள்
இருக்கிறீர் இருக்கிறீர்!

ஆம், நாங்கள் உங்கள் அணியில்தான் இருக்கிறோம்.

1943-ம் வருட மே தினத்தைச் சிறப்பான முறையில் முடிக்க, 267-ம் நம்பர் அறையில் ஒரு காரியத்தை மேற்கொண் டோம். ஆனால் அதுவே முடிவு அல்ல. பெண்கள் வார்டில் ஏவல் வேலை செய்கின்ற பெண் கைதி, செஞ்சேனையின் வழி நடைப் பாட்டைச் சீட்டி அடித்துக் கொண்டே முற்றத்தில் நடக்கிறாள். பாண்டி ஜாங்கா என்ற பாட்டையும், மற்ற சோவியத் பாட்டுகளையும், பிறகு சீட்டியடிக்கிறாள். இவ்விதம் ஆண் கைதிகளுக்கு அதிக தைரியத்தை உண்டு பண்ணுகிறாள், அந்தந்த சமயம். செக் போலீஸ் உடுப்பு உடுத்தியுள்ள மனிதர் என் அறைக்கு வெளியே காவல் புரிகிறார். அவர்தான் எனக்கு காகிதமும், பென்சிலும் கொண்டு வந்து இரகசியமாகக் கொடுத்தவர். நான் எழுதும்போது யாரும் திடீரென்று வந்த விடாதபடி பார்த்துக் கொள்ளவே அவர் காவல் நிற்கிறார். அவரும் சீட்டி அடிக்கிறார். மேலும், என்னை இந்த எழுத்து வேலையில் ஈடுபடுத்திய செக் காவல்காரரும் சீட்டியடிக்

கிறார். இவர்தான் நான் எழுதும் உதிரிக் காகிதங்களை ஒவ்வொன்றாக வெளியே திருட்டுத் தனமாகக் கொண்டு போய், பிரசுரத்துக்கு உகந்த காலம் வரும் வரையில் மறைத்து வைப்பவர். இந்தத் துண்டுக் காகிதத்துக்காக அவருடைய தலையே போய்விடும். இருந்தாலும், சிறைப்பட்டிருக்கும் இன்றைக்கும், சுதந்திரமாக இருக்கும் நாளைக்கும் இடையே ஒரு காகிதப் பாலத்தைக் கட்டுவதில் இவர் தன் உயிருக்குத் துணிந்துவிட்டார். அவர்கள் எல்லோரும் வெவ்வேறு உடுப்பிலும், வேலையிலும் இருந்த போதிலும், எல்லோருடைய போராட்டமும் ஒன்றேயாகும். அந்தப் போராட்டத்தில் எந்த இடத்தில் நிறுத்தப்பட்ட போதிலும் எத்தகைய ஆயுதம் கையில் கிட்டிய போதிலும், அவர்கள் அதற்கு ஏற்றபடி விட்டுக் கொடுக்காமல் வீரதீரமாகப் போராடுகிறார்கள். ஜீவ—மரணப் போராட்டத்தில் ஈடுபட்டிருக்கும் அவர்களைப் பார்க்கும் போது, வாஸ்தவத்திலேயே அப்படிப்பட்ட போராட்டத்தில் ஈடுபட்டிருக்கிறார்களா என்று உங்களுக்குக் கேட்கத் தோன்றும். ஏனெனில், அவர்களிடம் எவ்வித படாடோபங் களையும் உணர்ச்சி மனோபாவங்களையும், உங்களால் பார்க்க முடியாது.

புரட்சியின் போர் வீரர்கள் மே தினத்தன்று அணி வகுத்துப் போவதை எத்தனையோ தடவை நீ பார்த்திருக் கிறாய், அது கனஜோர். ஆனால் இந்தச் சேனையின் சக்தியைப் போராட்டத்தில் மட்டுமே பார்க்க முடியும். அது வெல்லற் கரியது என்று உணரமுடியும். சாவு நீ நினைத்தபடி கனமானது அல்ல. வீரம் எந்த ஜோதியினாலும் சூழப்பட்டிருக்கவில்லை. ஆனால் போராட்டம் கொடூரமானது. நீ நினைத்ததைவிடக் கொடூரமானது. அதில் இறுதிவரை தாக்குப் பிடித்து நிற்பதற் கும், இறுதியில் வெற்றியடைவதற்கும், கணக்கிட முடியாத அளவுக்குப் பலம் வேண்டியிருக்கிறது. இந்தச் சேனை நடை போட்டுப் போவதை நீ பார்க்கிறாய். ஆனால், இதன் பலம் எத்தகையதென்பதை எப்போதுமே சரியாக உணர்கிறாய் என்று

சொல்வதற்கில்லை. இது கொடுக்கும் அடிகள் ரொம்ப சாதாரணமானவை; முறையானவை.

இன்றைக்கு இதை நீ சரியாக உணர்கிறாய்.

1943-ஆம் வருட மே தின அணிவகுப்பில் தெரிந்து கொள்கிறாய்.

1943-ஆம் வருட மே தினம், இந்தக் கதையின் நடுவே புகுந்து சிறிது நேரம் தொடர்ச்சியை அறுத்துவிட்டது. இதில் ஒன்றும் குற்றமில்லை. இப்படித்தான் இருக்க வேண்டும். ஏனெனில், திருவிழா நாட்களில் நாம் வேறு விஷயங்களைப் பற்றியே சிந்திக்கிறோம். இத்திருவிழா பற்றி நினைக்க நினைக்க என் மனம் குதூகலிக்கிறது. ஆனால் பெட்செக் கட்டிடத் திலுள்ள 'சினிமா' நிச்சயம் ஆனந்தமளிக்கக் கூடியதல்ல. அது சித்ரவதைக் கூடத்துக்குப் பிரவேச வாயில். அங்கிருக்கும்போது, சித்திரவதைக் கூடத்திலிருந்து வரும் அழுகுரல்களும், கதறல் களும் விம்மல்களும் காதில் விழுகின்றன. உனக்கு என்ன நேருமோ என்று நீ கலங்கிக் கொண்டிருக்கிறாய். அவ்வழியாக நல்ல திடகாத்திரமானவர் உள்ளே போவதைப் பார்க்கிறாய். இரண்டு அல்லது மூன்று மணி நேரம் கழித்து, அவர்கள் நொண்டி முடங்களாக, செவிடு குருடுகளாக, உடலும் உள்ள மும் உடைந்தவர்களாக வெளி வருவதைப் பார்க்கிறாய். 'போய் வருகிறேன்' என்று மிகவும் அழுத்தமாகவும் இனிமையாகவும் ஒரு குரல் உன்னிடம் விடைபெற்று அதனுள் பிரவேசிக்கிறது. ஜன்னியினால் நடுங்கி, வலியினால் துடித்து, அதே குரல் திரும்புகிறது. சில சமயம் இவற்றை விட மோசமான காட்சி களும் உன் கண்ணில் படுகின்றன. ஒருவன் மிகவும் தெளி வான, நேரான, கூரான கண்களுடன் உள்ளே போகிறான். ஆனால் அவன் திரும்புகிறபோது, உன் முகத்தைப் பார்க்கத் தைரியமில்லாமல் தலையைக் கவிழ்த்துக் கொள்கிறான். அந்த 'விசாரணை' அறையில் அவன் ஒரு நொடி நேரம் கலங்கி விட்டான். பயந்து விட்டான்; உயிரைக் காப்பாற்றிக் கொள்ள

வேண்டுமென்ற ஆசைக்குப் பலியாகிவிட்டான். அப்படி யென்றால் அவன் அநேகருடைய பெயர்களைச் சொல்லி விட்டான். அவர்களை நாளைக்கு இழுத்து வருவார்கள். அவர்கள் ஆரம்ப முதல் இந்தப் பயங்கரக் கொடுமைகளை அனுபவிப்பார்கள்.

துணிச்சலை இழந்து மனசாக்ஷியைப் பறிகொடுத்த ஒருவனுடைய நிலைமை, நொண்டி முடமாக்கப்பட்ட ஒருவனுடைய நிலைமையைவிடப் படுமோசமானதாகும். இங்கு நடமாடும் சாவுக்கு நீ பலியாகவில்லை என்றால், உன் உறுப்புகளுக்குப் புனர்ஜென்மம் உணர்வூட்டியிருக்கிறது என்றால், உனக்கு யாரும் சொல்லாமலே தெரியும் எவன் ஊசலாடினான் என்று; எவன் இன்னொருவனைக் காட்டிக் கொடுத்தான் என்று; ஒரு நொடி நேரம் கலங்கிப் போய், சரணடைய எண்ணி, எவன் தன் சக ஊழியர்களில் சாதாரண மானவர்களுடைய பெயர்களைச் சொல்லிவிடத் தீர்மானித் தான் என்று; பலஹீனர்கள் நிலை பரிதாபத்துக்கு உரியது. இன்னொரு தோழரின் உயிரை விலையாகக் கொடுத்து, தம் உயிரை வாங்கியிருக்கும் அவர்களின் வாழ்க்கை எப்படிப் பட்டதாக இருக்கும்!

நான் 'சினிமா'வில் உட்கார்ந்திருந்தபோது, இந்த எண்ணம் என் மனதில் முதல் தடவையாக உண்டாகவில்லை. ஆனால் அதன் பிறகு அடிக்கடி மனதில் தோன்றிக் கொண்டி ருந்தது. என்றாலும், முதன் முதலாக இந்த எண்ணம் வேறு ஒரு அறையில், வேறு சூழ்நிலையில் என் மனதில் உதித்தது. அந்த அறைதான் 'நம்பர் 400.'

'சினிமா'வில் உட்கார்ந்து, ஒன்று அல்லது ஒன்றரை மணி நேரம் ஆகியிருக்கும். என் பின்னாலிருந்து ஒரு குரல் என் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டது. செக் உடை அணிந்திருந்த இரு 'ஸிவிலியன்'கள், என்னை அங்கிருந்து நான்காவது மாடிக்கு அழைத்துப் போனார்கள். அங்கு 'நம்பர் 400' என்று

குறிப்பிடப்பட்டிருந்த அறைக்குள் அனுப்பினார்கள். அதுவும் ஒரு விசாலமான அறை.

அங்கு வேறு யாரும் இல்லை. சுவர் அருகில் கிடந்த ஒரு தனி நாற்காலியில் நான் மட்டும் உட்கார்ந்திருந்தேன். சுற்றும் முற்றும் பார்த்தபோது, ஏதோ ஒரு எண்ணம்—அந்த இடத்தில் ஏற்கனவே இருந்த பழகியது போல ஒரு எண்ணம் உண்டா யிற்று. இங்கு ஏற்கனவே வந்திருக்கிறேனா? இல்லை. ஒரு போதும் இல்லை. ஆனால் இந்த இடம் முழுவதும் பழக்கப் பட்ட இடம் போல் தோன்றுகிறது. ஏதோ ஒரு விதமான நினைவு. இந்த அறை எனக்குத் தெரியும்; கனவில் கண்டி ருக்கிறேன். அந்தக் கனவு பயங்கரமானது. அதை நினைத்தாலே வெறுப்பாக இருக்கிறது. இந்த அறை இப்போது... காலையில்— நிரம்ப வெளிச்சமாக இருக்கிறது. ஜன்னல் வழியாக இங்கிருந்து பார்த்தால், தொலைவில் இருக்கும் மாதா கோயில், பார்க், கோட்டை முதலியவை எல்லாம் இப்போது தெளிவாகத் தெரிகின்றன. என்னுடைய கனவில் இது இருண்டிருந்தது. இதில் ஜன்னல்களில்லை. சுவர் மஞ்சள் பூத்திருந்தது. மனிதர் கள் வெறும் நிழல்கள் போல் தோன்றினர். ஆமாம்; இங்கு நிறையப் பேர் இருந்தார்கள். இப்போது இது காலியாக இருக் கிறது. ஒன்றன் பின் ஒன்றாகக் கிடக்கும் ஆறு பெஞ்சுகள் ஏதோ ஒரு புதிர் போல் தோன்றிற்று. கனவில் இங்கு நிறைய மனிதர்கள் வெளுத்துப் போன முகத்துடன், அடுத்தடுத்து நெருக்கமாகப் பெஞ்சுகளில் உட்கார்ந்திருந்தார்கள். அதோ அங்கே, கதவு அருகில், ஒரு தொழிலாளி நின்று கொண்டி ருந்தான். அவன் கண்கள் குத்தி நாசமாக்கப்பட்டிருந்தன. தண்ணீர், தண்ணீர் என்று அவன் கேட்கிறான். அப்படியே திரை விழுவதுபோல் கீழே விழுந்தான்.

ஆமாம், அது அப்படித்தான் இருந்தது; ஆனால் அது கனவு அல்ல என்று இப்போது எனக்குப் புரிகிறது. நிகழ் புரியாத அந்தக் கனவு, வாஸ்தவத்திலேயே நடந்திருந்த சம்பவமாகும்.

அந்தச் சம்பவம் நடந்த அன்றுதான் நான் கைதானேன். அதுதான் என் முதல் 'விசாரணை'. இங்கு அவர்கள் என்னை மூன்று தடவை—பத்துத் தடவை; யாருக்குத் தெரியும் எத்தனை தடவையென்று? கொண்டு வந்தார்கள்; அதாவது எப்போது அவர்கள் சிறிது களைப்பு ஆற விரும்புகிறார்களோ, அல்லது வேறு ஒருவரை நடுவில் 'விசாரிக்க' நினைக்கிறார்களோ, அப்போதெல்லாம் அவர்கள் இந்த அறைக்கு என்னை அழைத்து வந்தார்கள். என் பாதங்களில் ஒன்றும் இல்லை. இதன் தரை என் வீங்கிய பாதங்களை எவ்வளவு இனிமை யாகக் குளிரச் செய்ததென்பது இப்போது நன்றாக ஞாபகத்தில் இருக்கிறது.

அன்று இரவு பெஞ்சுகளில் நிறையத் தொழிலாளிகள் உட்கார்ந்திருந்தனர். அவர்கள் எல்லோரும் ஜங்கர்ஸ் தொழிற் சாலையில் வேலை பார்ப்பவர்கள்; அன்றைய சாயந்திரம் கெஸ்டோபோ வலையில் அகப்பட்டவர்கள். நீல நிற உடை யில் கதவு அருகில் இருப்பவர்தான் தோழர் பார்டன். ஜங்கர்ஸ் கட்சிக் குழு உறுப்பினர். இவர்தான் நான் பிடிபட்டதற்கு மறைமுகமான மூல காரணம். இச் சந்தர்ப்பத்தில் ஒன்றைத் தெரிவித்துக் கொள்கிறேன். என் கைதுக்கு யாரும் பொறுப்பு அல்ல; எந்தத் தோழருடைய பயங்கொள்ளித் தனத்தாலோ, அல்லது துரோகத்தாலோ காட்டிக் கொடுக்கப்படவில்லை. அஜாக்கிரதையும் துரதிர்ஷ்டமும்தான் என்னைக் காட்டிக் கொடுத்தன. நாஜி எதிர்ப்பு இயக்கத்தில் மேல் கமிட்டிகளில் உள்ள தலைவர்களுடன் தன்னுடைய குழுவிற்குத் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள தோழர் பார்டன் முயற்சி செய்து கொண்டிருந்தார். அவருடைய நண்பர் ஜிலினிக், தொடர்பு ஏற்படுத்தித் தருவதாக வாக்களித்தார். இதில் ஜிலினிக் செய்த தவறு என்னவென்றால், மேல் கமிட்டியிலிருந்து நேரடியாகத் தொடர்பு கொள்ளும்படி என்னை அவர் முதலில் கேட்க வில்லை. இது இரகசிய ஸ்தாபன அமைப்பு விதிகளுக்கு விரோதமானதாகும். இந்த விதியைப் புறக்கணித்தது முதல்

தவறு. இரண்டாவது தவறு என்னவென்றால் தோழர் பார்டனின் குழுவில் டுவோரக் என்ற ஒரு உளவாளி நுழைந்து விட்டான். அவன் ஜிலினிக்குடைய பெயரைத் தெரிந்து கொண்டான். இவ்விதம் ஜிலினிக் குடும்பம் கெஸ்டாபோ பிடியில் சிக்கிற்று. பெரிய கட்சி வேலையைச் செய்வதில் தவறிவிட்டதனால் அல்ல. இரண்டு வருடங்களாகக் கட்சி வேலைகளைச் சரிவர அவர்கள் நிறைவேற்றி வருகிறார்கள். சதிவேலை பற்றிய விதிகளில் ஒன்றைப் புறக்கணித்து, ஒரு சிறிய உதவியைச் செய்ய முற்பட்டதனால்.

ஜிலினிக் வீட்டுக்கு நான் போன சமயத்தில், கெஸ்டாபோ திமுதிமுவென்று அங்கு நுழைந்தது தற்செயலாக நிகழ்ந்ததாகும். அன்று இரவே அவரைக் கைது செய்து விடுவதென்று அவர்கள் தீர்மானிக்கவில்லை. மறுநாள் கைது செய்வதென்றே திட்டமி ட்டிருந்தனர். ஆனால் ஜங்கர் குழு உறுப்பினர்களை ஒருவர் விடாமல் பிடித்தவுடன், கெஸ்டாபோவுக்குக் குஷி தாங்க முடியவில்லை. இந்த வெற்றிப் போதையில் ஜிலினிக் வீட்டுக்குப் போய் சிறிது திருவிளையாடல் ஆடிச் செல்லலாம் என்றே அவர்கள் அன்றிரவு அங்கு வந்தனர். என்னை அவர் கள் பார்த்தபோது, அவர்களுக்கு நிரம்ப ஆச்சரியமாக இருந்தது. எங்களைவிட அதிக ஆச்சரியம் அவர்களுக்குத்தான். என்னை அவர்கள் எதிர்பார்க்கவில்லை. நான் யார் என்றே அவர்களுக்குத் தெரியாது. யார் என்று தெரிந்து கொண்டி ருக்கவும் முடியாது. அந்த ஒரு...

இதைப் பற்றித் தொடர்ந்து 400ஆம் நம்பர் அறையில் சிந்திப்பதற்குள் வெகுநேரம் ஆகிவிட்டது. தனிமை கலைந்தது. பெஞ்சுகள் நிரம்பிவிட்டன. சுவர் ஓரமாக ஒரு வரிசை நின்றது. ஆச்சரியகரமான விஷயங்கள் நேரம் ஆகஆக வெளிப்பட்டன. சில விஷயங்கள் என் கருத்துக்கு எட்டாத அளவுக்கு விசித்திர மாக இருந்தன. வேறு சில வஞ்சகமானவை. அவற்றை நான் நன்கு புரிந்து கொண்டேன்.

முதல் ஆச்சரியம் விநோதமானதல்ல, வஞ்சகமானது மல்ல; காருண்யமானது; அற்பமானது, முக்கியத்துவமற்றது. எனினும், அதை நான் ஒருபோதும் மறக்கமாட்டேன். என்னைக் கவனித்துக் கொண்டிருந்த கெஸ்டாபோ ஏஜெண்ட், தன் வாயிலிருந்த பாதி சிகரெட்டை என் எதிரே விரலால் சுண்டிவிட்டான். இவன்தான் நான் கைதான போது என் சட்டைப் பையைத் தலைகீழாகத் திருப்பிச் சோதனையிட்டுக் காலியாக்கியவன்—மூன்று வாரங்களாகச் சிகரெட்டையே தொடாத எனக்கு, மறுபிறவி எடுத்து இவ்வுலகிற்கு வந்திருக்கும் ஒருவனுக்கு இதுதான் முதல் சிகரெட். இதை நான் குனிந்து எடுக்கலாமா? அப்படி எடுத்தால் ஒரு சிகரெட்டைக் கொடுத்து என்னை விலைக்கு வாங்கி விட்டதாக நினைப்பானா? ஆனால் சுண்டிவிட்ட சிகரெட்டை அவன் பார்க்கும் முறை; தெளிவாக அவனுடைய அகத்தைக் காட்டுகிறது; யாரையும் விலைக்கு வாங்க அவனுக்கு சிரத்தை இல்லை. எனினும், இதை முடிவு வரை என்னால் புகைக்க முடியாது; புதிதாய்ப் பிறந்திருக்கும் சிசுக்கள் நிறையப் புகை பிடிப்பவர்கள் அல்ல.

இரண்டாவது ஆச்சரியம்—சந்தடியில்லாமல் நான்கு பேர் உள்ளே வருகிறார்கள். செக் மொழியில் என்னை உள்ளிட்டு எல்லோருக்கும் வணக்கம் தெரிவிக்கின்றனர். மேஜைக்குப் பின்னால் அவர்கள் உட்காருகின்றனர். தம் காகிதங்களை மேஜை மேல் வைக்கின்றனர். அதிகாரிகளைப் போல் சாவதானமாகச் சிகரெட் பற்ற வைத்துப் பிடிக்கின்றனர். ஆனால் அவர்களை எனக்குத் தெரியும். நிச்சயம் மூன்று பேரைச் சரியாகத் தெரியும். அவர்கள் இப்போது கெஸ்டாபோ கூலிகளாக வேலை பார்க்கக் கூடுமோ?—ஒரு வேளை இருக்கலாம் — ஆனால் இந்த மூன்று பேரும் கூடவா? அதோ இருக்கும் அவனை டெரிங்கில் என்றும் ரனேக் என்றும் நாங்கள் அழைத்தோம். கட்சிக்கும், சங்கத்துக்கும் வெகுகாலமாகக் காரியதரிசியாக இருந்தான். கொஞ்சம் துடிதுடிப்பான இயல்பு; ஆனால் விசுவாசத்துடன் இருந்தான்; இவன் கெஸ்டாபோ ஆளா! இருக்கவே முடியாது! அதோ இருக்கும் அவள்

அன்காவிகோவா, இன்னும் நேராகவும், அழகாகவும் இருக்கிறாள். திடசங்கல்பத்துடன் கஷ்டப்பட்டுக் கட்சிக்கு உழைத்தவள்; இவளுமா கெஸ்டாபோ கைக்கூலி? ஊஹூம் இருக்கவே முடியாது! அதோ அந்த மூன்றாவது நபர்தான் வாஷெக் ரிஜெக். வடக்கு பொஹூமியா சுரங்கத்தில் ஒரு கொத்தன். கட்சியின் ஜில்லாக் கமிட்டிக் காரியதரிசியாக இருந்தவன். அவனை நன்றாக எனக்குத் தெரியும். வடக்கே நாங்கள் எவ்வளவோ கஷ்டமான போராட்டங்களில் ஈடுபட்டு இருக்கிறோம். அந்தப் போராட்டங்களில் போரிட்ட அவனுடைய முதுகுமா வளைந்துவிட்டது? இல்லை. இருக்கவே முடியாது. ஆனால் இவர்கள் இங்கு என்ன செய்கிறார்கள்? இவர்களுக்கு என்ன வேண்டும்?

மற்றவர்கள் வந்தபோது, இந்தக் கேள்விகளுக்குப் பதில் தெரியாமலே நான் விழித்துக் கொண்டிருந்தேன். மிரேக், ஜிலினிக் தம்பதிகள், பிரைடு, தம்பதிகள் ஆகியோரை அழைத்து வந்தனர்—ஆம்; இவர்கள் என்னுடன் கைதானவர்கள் என்பது எனக்குத் தெரியும். ஆனால், பாவம் குரேப செக் ஏன் இங்கு இருக்கிறார்? படிப்பாளிகளிடையில் வேலை செய்ய மிரேக்கிற்கு உதவி செய்த சரித்திர ஆசிரியர் அல்லவா அவர்? அவரைப் பற்றி, மிரேக்கையும் என்னையும் தவிர வேறு யாரும் தெரிந்திருக்கவில்லையே? இருவரையும் தவிர வேறு யாருக்காவது தெரியுமா? மேலும் அதோ நிற்கிற நெட்டை வாலிபர் ஏன் என்னை அறியாதவர் போல் பாசாங்கு செய்ய முயற்சிக்கிறார்? அவரை எனக்கு உண்மையிலேயே தெரியாது. ஆனால் அவர் யாராக இருக்கக்கூடும்? ஏன் அவர் ஸ்டிச் அல்லவா? ஆமாம் டாக்டர் ஜெடனிக் ஸ்டிச்! அடக் கடவுளே அவரும் கைதியா? அப்படியானால் அவர்கள் டாக்டர்களுடைய குழுவிலும் உடைத்து நுழைந்துவிட்டார்களா? ஆனால் அந்தக் குழுவைப் பற்றி மிரேக்கும் நானும் மட்டுமே அறிவோம். வேறு யாராவது அறிவார்களா? அது இருக்கட்டும். முதல் நாள் சித்திரவதையின் போது, படிப்பாளிகளின் குழுவைப் பற்றி என்னிடம் ஏன் அவர்கள் கேள்வி கேட்டனர்? படிப்பாளி

களிடையே நடக்கும் வேலையுடன், அவர்கள் என்னை எப்படிச் சம்பந்தப்படுத்தினர்? என்ன ஆதாரம் கிடைத்தது? அதைப்பற்றி என்னையும் மிரேக்கையும் தவிர, வேறு யாருக்கு என்ன தெரியும்? ஒன்றும் தெரியாதே!

இதற்கு விடை காண்பது மிகவும் சிரமமாக இருக்க வில்லை. ஆனால் அது மிக மிகக் கொடூரமான பேரிடியாகும். மிரேக் பேசியிருக்க வேண்டும். எங்கள் எல்லோரையும் காட்டிக் கொடுத்திருக்க வேண்டும். அவன் எல்லாவற்றையும் சொல்லாமல் இருந்திருக்கலாகாதா என்று ஒரு கணம் நான் நினைத்தேன். ஆனால் அவர்கள் இன்னும் பல கைதிகளைக் கொண்டு வந்ததைப் பார்த்து போது, அவன் எத்தகைய காரி யத்தைச் செய்துவிட்டான் என்பதைப் புரிந்து கொண்டேன்.

செக் படிப்பாளிகளின் தேசியப் புரட்சிக் கமிட்டி உறுப்பினர்களாகக் கருதப்பட்ட ஒவ்வொருவரும் இங்கு கொண்டு வரப்பட்டனர்; புத்தக ஆசிரியர் விலாடிமிர் வன்சூரா; பேராசிரியர் பெல்பெரும் அவருடைய மகனும்; அடையாளம் புரியாதவாறு மாறுவேடம் தரித்துள்ள பெட்ரிச் வாக்லா வெக்; போனா புல்பனோவா! ஜினட்ரிக் எல்பா; சைத்திரி கன்டி வோரக். படிப்பாளிகளிடையே நடக்கும் வேலையைப் பற்றி, சகல விபரங்களையும் மிரேக் கூறியிருக்க வேண்டும்.

பெட்செக் கட்டிடத்தில் நான்பட்ட அவதி இலேசானது அல்ல; ஆனால், இந்தப் பேரிடிதான் நான் சகிக்க வேண்டி யிருந்த மிகமிகப் படுமோசமான அடி. நான் சாவை எதிர்பார்த் தேன்; துரோகத்தை அல்ல. அவனைத் தீர்மானிப்பதில் நான் எவ்வளவோ தாராளமாக நடந்து கொண்ட போதிலும், அவன் எப்படிப்பட்ட சூழ்நிலையில் விஷயத்தைக் கக்கியிருப்பான் என்பது பற்றி நினைத்து இரங்கிய போதிலும் மிரேக் ஒன்றை யும் சொல்லியிருக்க மாட்டான் என்று நம்பியிருந்த போதிலும், அதை வர்ணிக்கத் துரோகம் என்ற சொல்லைத் தவிர எனக்கு வேறு வார்த்தை கிடைக்கவில்லை. இது ஊசலாட்டமோ

அல்லது பலஹீனமோ அல்ல. சவக்குழி வரையில் அடிக்கப் பட்ட மனிதனின் ஜன்னிப் பிதற்றலும் அல்ல. அப்படி இருந்தால் மன்னித்துவிடலாம். இப்போது எனக்குப் புரிகிறது எப்படி அவர்கள் முதல் இரவிலேயே என் பெயரைத் தெரிந்து கொண்டனர் என்று. இப்போது புரிகிறது. எப்படி அன்னி ஜிராஸ்கோவா அங்கு இழுத்துவரப் பட்டாள் என்பது. அவளு டைய வீட்டில் இரண்டு தடவை மிரேக்கை நான் சந்தித்தி ருந்தேன். இப்போது புரிகிறது ஏன் குரோபசெக்கும் டாக்டர் ஸ்டிச்சும் இங்கு தள்ளி வரப்பட்டனர் என்று.

அதற்குப் பிறகு அநேகமாக தினசரி நான் 400—ம் நம்பர் அறைக்கு அழைத்துச் செல்லப்பட்டேன். தினசரி புதிய விபரங்களை அங்கு கண்டுபிடித்தேன். அது துக்க கரமானது, பயங்கரமானது. இதோ துணிச்சலான ஒரு மனிதன் இருக் கிறான். இவன் ஸ்பெயினில் போரிட்ட போது துப்பாக்கித் தோட்டாக்களைக் கண்டு அஞ்சவில்லை. பிரான்ஸில் கொடூர மந்தவெளிச் சிறையில் அடைபட்டு அவதியுற்றபோது யாருக் கும் தலைவணங்கவில்லை. ஆனால் இப்போது இவன் இங்குள்ள கெஸ்டாபோ தடியனின் கையிலுள்ள சாட்டையைக் கண்டு நடுநடுங்கி, முகம் வெளுத்து, தன் பல்லைக் காப்பாற்றிக் கொள்வதற்காக எங்கள் எல்லோரையும் காட்டிக் கொடுத்து விட்டான். சில அடி உதைகளிலிருந்து தப்பும் பொருட்டு இவனுடைய துணிச்சலும் கொள்கைப் பிடிப்பும் தூள் தூளாகச் சிதறிவிட்டன என்றால், அவை எவ்வளவு போலியாக இருந்தி ருக்கின்றன! ஒரே கருத்துக்களையுடைய தோழர்கள் தன்னைச் சுற்றியிருக்கும்போது— ஒரு கோஷ்டியின் நடுவே இருக்கும் போது— இவன் வலுவுள்ளவனாக இருந்தான். அந்தத் தோழர் களைப் பற்றி நினைத்தபோது இவன் பலசாலியாக இருந்தான். ஆனால் இவன் தனிமைப் படுத்தப்பட்டபோது துன்புறுத்தும் எதிரிகளின் நடுவில் மாட்டிக் கொண்டபோது, இவன் தன் பலம் முழுவதையும் அடியோடு இழந்துவிட்டான். இவன் எல்லாவற்றையும் ஏன் இழந்துவிட்டான் என்றால், இவன்

தன்னைப் பற்றி மட்டுமே சிந்திக்க ஆரம்பித்தான். தன் தோலைக் காப்பாற்றிக் கொள்வதற்காக, தன் தோழர்களைப் பலியிட்டான். பயங்கொள்ளித் தனத்துக்கு இடமளித்து, பயங்கொள்ளித் தனத்திலே காட்டிக் கொடுத்தான்.

தன்னுடைய அறையில் அவர்கள் கண்டெடுத்தவற்றின் மர்மங்களை அவர்களுக்கு விளக்குவதைக் காட்டிலும் சாவதே மேல் என்பதை இவன் மறந்தான். அவர்களுக்கு இவன் பெயர் களைச் சொன்னான். விலாசங்களைக் கொடுத்தான். தலை மறைவாக அந்தத் தோழர்கள் எங்கு வசிக்கிறார்கள் என்பதை யும் தயாரித்தான். டாக்டர் ஸ்டிச்சுடன் ஒரு சந்திப்புக்கு ஏற்பாடு செய்து, இவன் தன்னுடன் ஒரு கெஸ்டாபோ ஆளை அழைத்துச் சென்றான். வாக்லாவெக், குரோபசெக் ஆகியோரைச் சந்திக்க, டிவோரக் வீட்டுக்கு இவன் போலீசை அனுப்பினான். அன்னியை இவன் அவர்களிடம் ஒப்படைத் தான். இவனையே காதலித்த துணிச்சலுள்ள பெண் லிடா. அவளையும் காட்டிக் கொடுத்தான். இவனுக்குத் தெரிந்த விவரங்களில் பாதியைக் கக்கவைக்க ஒரு சில உதைகளும் அடிகளுமே கெஸ்டாபோவுக்குத் தேவையாக இருந்தன. பிறகு, நான் செத்துவிட்டதாக அவன் நினைத்ததும், இனிமேல் யாருக்கும் பதில் சொல்ல வேண்டியதில்லை என்று எண்ணி, இவன் மிச்ச சொச்சத்தையும் சொல்லிவிட்டான்.

இவற்றினாலெல்லாம் இவன் எனக்கு ஒரு தீங்கையும் செய்யவில்லை. ஏனெனில், ஏற்கனவே நான் கெஸ்டாபோவின் பிடியில் இருந்தேன்—இனிமேல் எனக்கு என்ன தீங்கு செய்ய முடியும்? ஆனால் இவனுடைய பதில்கள், மேற்கொண்டு பல விசாரணைகளை நடத்த வழி கோலின. இந்த விசாரணை களில் கிடைத்த பல ஆதாரங்களும் என்னைச் சுட்டிக் காட்டின. அவர்கள் தெரிந்து கொள்வதற்கு மிகவும் விரும்பிய ரகசியங்களை இவன் வெளிப்படுத்தினான். இதற்காகத்தானா நானும் என் குழுவைச் சேர்ந்தவர்களும் இராணுவச் சட்டக்

காலத்தில் தப்பிப் பிழைத்து வாழ்ந்து வந்தோம்? இவனும், நானும் ஒழிந்திருந்தால், என் குழுவே நிலைத்திருந்திருக்காது. ஆனால் இவன் தன் வாயை மூடிக் கொண்டிருந்தால், இவனுடைய மற்ற குழுக்கள் நிலைத்திருக்கும்; இவனும் நானும் செத்த பிறகும் வேலை செய்து கொண்டிருந்திருக்கும்.

பயங்கொள்ளி, தன் உயிரையும்விட அதிகமாகப் பறி கொடுக்கிறான். அவன் அபூர்வமான சேனையை விட்டு ஓட்டம் பிடித்து, மிகமிகக் கேவலமான எதிரியிடம் சரணடைந் தான். இன்னும் இவன் உயிருடன் இருந்த போதிலும், ஏற்கனவேயே செத்த பிணமாகி விட்டான். ஏனெனில் இவன் தன் கோஷ்டியிலிருந்து தன்னை விலக்கிக் கொண்டான். பிற்பாடு பிராயச்சித்தம் செய்ய இவன் முயற்சித்தான். ஆனால் திரும்ப ஒரு போதும் ஏற்றுக் கொள்ளப்படவேயில்லை. இந்தச் சமூக பகிஷ்காரத்தை, மற்ற எந்த இடத்திலும் சகித்துக் கொள்ள முடியும்; சிறையில் முடியவே முடியாது.

சிறையில் அடைப்பட்டிருப்பதும், தனிமையில் இருப்பதும் ஒன்றே என்று பலர் நினைக்கிறார்கள். ஆனால், இது பெரிய தவறு. அவை இரண்டும் ஒன்றே அல்ல. ஒரு கைதி தன்னந் தனியாக இருக்கவில்லை. சிறைச்சாலை என்பது ஒரு சமுதாயம். மிகவும் கண்டிப்பான காவலினால்கூட, ஒருவனைத் தன் கோஷ்டியிலிருந்து— அவன் தன்னைத் தானே விலக்கிக் கொள்ளாத வரையில்— பிரித்து வைத்துவிட முடியாது. அடிமைப்பட்டவர்களுடைய சகோதரத்துவம் எப்போதுமே கடுஞ் சோதனைக்கு ஆளாக்கப்படுகிறது. இச்சோதனை அதை வலுவாக்குகிறது; ஸ்திரமாக்குகிறது; அதன் புலன்களைத் தீக்ஷண்யமாக்குகிறது. அது சுவர்களைத் துளைத்துக் கொண்டு தாளங்களாகப் போகிறது. சுவர்கள் பேசுகின்றன; சிரிக்கின்றன; வாழ்கின்றன. ஒவ்வொரு வார்டிலுமுள்ள அறைகளும் அந்தச் சகோதரத்வத்தில் சேர்ந்திருக்கின்றன. எல்லா அறைகளும் ஒரே மாதிரியான பொது வேலைகளைச் செய்வதாலும், ஒரே

மாதிரியான கவலைகளால் சூழப்பட்டிருப்பதாலும், பொது வான காவல்காரர்களைப் பெற்றிருப்பதாலும், திறந்த வெளி யில் ஒரே காலத்தில் உடற்பயிற்சி செய்வதாலும், ஒன்றோ டொன்று சம்பந்தப்பட்டுப் பின்னியிருக்கின்றன. கைதிகள் அறைகளுக்கு வெளியே சந்திக்கும்போது, ஒரு செய்தியைக் கொடுக்கவோ அல்லது சில சமயம் ஒரு உயிரைக் காப்பாற் றவோ, ஒரு வார்த்தை அல்லது ஒரு ஜாடையே போதுமான தாகும். கோஷ்டியாக விசாரணைக்குப் போய், 'சினிமா'வில் உட்கார்ந்து இருந்து விட்டு, கோஷ்டியாகத் திரும்புகிற கைதிகளைச் சகோதரத்வம் ஒன்றுபடுத்துகிறது. சகோதரத்வம் பேசுவது வெகு சில வார்த்தைகளே. செய்வதோ மகத்தான சேவை. ஒருவனின் கையைப் பிடித்து இலேசாக அழுத்துவது, அல்லது அவனுக்கு ஒரு சிகரெட்டைக் கொடுப்பது அத்தகைய மாறுதலை உண்டு பண்ணுகிறது! இந்த ஒரு சிறிய செய்கை, உன்னைச் சுற்றியிருக்கும் இரும்புக் கூண்டை உடைத்து, உன் உள்ளத்தை உடைப்பதற்காக உன்மீது திணிக்கப்பட்ட தனிமை யிலிருந்து உன்னை விடுதலை செய்யும். அறைகளுக்குக் கரங்கள் இருக்கின்றன. நீ சித்ரவதைக்கு ஆளாகித் திரும்பும்போது அவை எப்படி உன்னைத் தாங்கிப் பிடித்து அணைத்துக்கொள்கின்றன என்பது உனக்கு நன்றாகப் புரியும். மற்றவர்கள் உன்னைப் பட்டினி போட்டுச் சாகடிக்கும்போது, அவை உனக்கு உணவு ஊட்டுகின்றன. ஆதலால், நீ நிமிர்ந்து கம்பீரமாக நடக்க வேண்டும் என்று உனக்குத் தெரியும். ஏனெனில், நீ அவர் களுடைய சகோதரன்; உன்னுடைய தள்ளாடும் நடையைக் காட்டி அவர்களுடைய மனதைப் பலஹீனப் படுத்தக்கூடாது. இந்தச் சகோதரத்வம், பல உறுப்புகளில் காயமடைந்து இரத்தத்தைக் கசியவிடுகிறது. ஆனால், அதே சமயம் இது வெல்லுவதற்கரியதாகத் தலைநிமிர்ந்து நிற்கிறது. அதனுடைய ஆதரவும் அன்பும் இல்லாமல், உன் பளுவில் பத்தில் ஒரு பங்கைக்கூட உன்னால் தாங்க முடியாது. உன்னாலும் முடியாது; வேறு எவனாலும் முடியாது.

இந்தக் கதையைத் தொடர்ந்து எழுத முடியுமேயானால் (என்றைக்கு, எந்தச் சமயம் என் உயிர் வாங்கப் படுமோ) 400ஆம் நம்பர் அடிக்கடி இக்கதையில் வரும். அதை முதன் முதலில் நான் ஒரு அறை என்றே நினைத்தேன். அதில் முதன் முதலில் உட்கார்ந்திருந்தபோது என் சிந்தனைகள் சந்தோஷ கரமானதாக இல்லை. ஆனால் அது ஒரு அறை அல்ல. அது ஒரு கூட்டுப் பொறுப்புள்ள ஒரு அமைப்பு; காரியார்த்தமாகப் போராடும் கோஷ்டியின் அமைப்பு; சந்தோஷத்துடன் உழைக்கும் கோஷ்டியினது என்று கூடச் சொல்வோன்.

1940ஆம் வருடத்தில், கெஸ்டாபோவின் கம்யூனிஸ்ட் எதிர்ப்பு நடவடிக்கைகள் அதிகரித்தபோது, அது ஆரம்பமா யிற்று. இப்போது சிறைக் கம்யூனிஸ்ட்களுடைய ஒரு கிளைக் காரியாலயம். முதல் மாடியிலிருந்து நான்காவது மாடிக்கு ஒவ்வொரு தடவையும்— கெஸ்டாபோ ஆபீஸர் புதிய கேள்வி ஒன்றைக் கேட்க விரும்பியபோதெல்லாம்— கைதிகளை அழைத்துப் போக வேண்டியிருப்பதைத் தவிர்க்கும் பொருட்டு, நாலாவது மாடியிலேயே கம்யூனிஸ்ட்களுக்கு ஏற்படுத்தப்பட்ட 'வெயிட்டிங்—ரூம்' இது தங்களுடைய வேலையை எளிதாக்கும் என்று அவர்கள் நினைத்தார்கள். இதுதான் 'சினிமா'வின் இந்தக் கிளை இங்கு திறக்கப்பட்டதற்குக் காரணம்.

இரண்டு கைதிகளை நீ சேர்த்து வைத்தால்—அதுவும் அவர்கள் கம்யூனிஸ்ட்களாக இருந்துவிட்டால்— ஐந்து நிமிஷங்களில் ஒரு ஸ்தாபனத்தை அவர்கள் உருவாக்கி விடுகிறார்கள். அது உடனடியாகவே உன் திட்டங்களை முறியடிக்க வேலை செய்ய ஆரம்பிக்கிறது. 1942ல் சினிமாவின் பெயர் கம்யூனிஸ்ட் சென்டராக மாறிற்று. அப்போது பல மாறு தல்கள் ஏற்பட்டன. ஆயிரக்கணக்கான தோழர்கள் ஆண்களும் பெண்களும் — அந்தப் பெஞ்சுகளில் உட்கார்ந்திருந்து எழுந்தி ருக்கிறர்கள். ஆனால் ஒன்று மட்டும் ஒரு போதும் மாறவில்லை— அதுதான் கூட்டுப் பொறுப்பு உணர்ச்சி; போராட்ட உள்ளம். இறுதி வெற்றி பற்றிய நம்பிக்கை.

400ஆம் நம்பர் அறை போர்க்களத்தில் மிகமிக முன்னால் அமைந்திருக்கும் அகழி. அது நாலாபுறமும் விரோதிகளால் சூழப்பட்டிருக்கிறது. எல்லாத் திசைகளிலிருந்தும் அதன் மேல் பீரங்கிகள் நெருப்பைக் கக்குகின்றன. ஆனால் அது ஒரு நொடி நேரம் கூட சரணடைய எண்ணவில்லை. அங்கு செங்கொடி கம்பீரமாக உயர்ந்து பறக்கிறது. தன் சுதந்திரத்துக்காகப் போராடும் ஒரு தேசத்தின் கட்டுக் கோப்பான ஒற்றுமை இந்தக் கூட்டுப் பொறுப்பு முயற்சியில் தெளிவாக வெளியிடப் படுகிறது.

பிரதான 'சினிமா'வில் கீழ் மாடியில் எஸ்.எஸ். படைக் காவல்காரர்கள் இங்குமங்கும் நடந்து ஜபர்தஸ்து செய்கிறார் கள். நீ கண்ணைச் சிமிட்டும் போதெல்லாம் அவர்கள் உன் பேரில் எரிந்து விழுகிறார்கள். அதட்டி அட்டகாசம் செய்கிறார் கள். மேல் மாடியில், 400 ஆம் நம்பர் அறையில் சினிமாவின் கிளையில், செக் போலீஸ் அதிகாரிகளும், கெஸ்டாபோவின் செக் ஏஜெண்டுகளும் வேலை பார்க்கிறார்கள். இவர்கள் தாங்களாகவோ அல்லது தமக்கு மேலுள்ளவர்களின் உத்தர வுக்கு இணங்கியோ, கெஸ்டாபோ சர்வீசில் மொழி பெயர்ப் பாளர்களாக வேலை பார்க்கச் சேர்ந்தவர்கள். இங்கு கெஸ்டாபோ கைக்கூலியாகவோ அல்லது உண்மைச் செக்கு களாகவோ வேலை செய்தனர். சில சமயம் இரண்டின் கலவை யாகவும் இருந்தனர். இங்கு முழங்கால் மேல் கையை வைத்து, எதிரே உள்ள சுவரின் மேல் கண்ணை வைத்து, 'அட்டென்ஷன்' நிலையில் விரைப்பாக உட்கார வேண்டிய அவசியமில்லை; சாவதனமாக உட்காரலாம்; சுற்றும் முற்றும் பார்க்கலாம்; கைகளை அசைக்கலாம்! மூன்று ரக காவல்காரர்களில் எந்த ரகம் அப்போது வேலை செய்கிறது என்பதைப் புரிந்து கொண்டால், இன்னும் பல காரியங்களையும் செய்ய முடியும்.

400ஆம் நம்பர் அறையில், மனித மிருகத்தின் குண விசேஷங்களைப் பற்றி நீ மிகவும் அபூர்வமான ஆராய்ச்சியைச்

செய்கிறாய். சாவு அண்மையிலிருப்பதால், ஒவ்வொருவனையும் அவனவன் உண்மைச் சொரூபத்தில் அம்மணமாய்க் காட்டிற்று. ஆம்; கம்யூனிஸ்டுகளுடன் ஒத்துழைத்ததாக விசாரிக்கப் பட்டவர்கள், விசாரணை நடத்தியவர்கள், காவல்காரர்கள் எல்லோரையும் உனக்கு கவசமாகப் பயன்பட்டன. அல்லது ஆயுதமாக உபயோகப்பட்டன. இங்கே 400ஆம் நம்பரில், எந்த வார்த்தைக்குப் பின்னாலும் நீ மறைந்து கொள்ள முடியாது. இங்கே அவர்கள் உன் வார்த்தைகளை எடை போட்டுப் பார்க்கவில்லை; உன் உள்ளத்தில் என்ன இருக்கிறது, எந்த மாதிரிப் பொருளால் நீ ஆக்கப்பட்டிருக்கிறாய் என்பதைப் பார்க்கிறார்கள். இங்கே வருவதற்குள் உன்னிடம் மிஞ்சி இப்பது, வாழ்க்கையிலேயே மிகமிக முக்கியமான ஒன்றே யாகும். இங்கே வருவதற்குள் உன்னுடைய நிஜ உருவத்தை அலங்கரித்த அல்லது பலஹீனப்படுத்திய அல்லது பக்குவப் படுத்திய எல்லாப் புறத்தோற்றங்களும் சாவுக்கு முன் வீசுகிற கடும்புயலால் வழித்து எறியப்பட்டுவிட்டன. எழுவாயும் பயனிலையும் மட்டுமே மிஞ்சி இருக்கின்றன. விசுவாச மானவன் எதிர்க்கிறான்; துரோகி காட்டிக் கொடுக்கிறான்; வீரன் போராடுகிறான்; கோழை சரணடைகிறான். நம் ஒவ்வொருவரிடமும் பலமும் பலஹீனமும் இருக்கின்றன; துணிச்சலும் பீதியும் இருக்கின்றன. உறுதியும் ஊசலாட்டமும் இருக்கின்றன; சுத்தமும் அசுத்தமும் இருக்கின்றன. இங்கு இவ்விரண்டில் ஒன்றுதான் மிஞ்சுகிறது. உண்டு அல்லது இல்லை. இவ்விரண்டு எதிர்முனைகளுக்கு இடையே, எவனாவது சாதுர்யமாக நடிக்க முயற்சித்தால், அந்த நடிப்பு சட்டென்று எல்லோர்க்கும் விளங்கிவிடும்.

அப்படிப்பட்ட ஆசாமிகளும் இருந்தனர். கைதிகளிடை யிலும் இருந்தனர்; செக் இன்ஸ்பெக்டர்கள். போலீஸ் இடையேயும் இருந்தார்கள். விசாரணையின் போது அவர்கள் பெர்லினிலுள்ள தங்கள் கடவுளுக்கு ஒரு மெழுகுவர்த்தியைக் கொளுத்தி வைத்தனர். 400ஆம் நம்பரில், போல்ஷ்விக்

'பிசாசு'க்கும் ஒன்று ஏற்றி வைத்தார்கள். ஜெர்மன் ஆபீஸர்களின் முன்னிலையில், உன் தோழர்களின் பெயரைச் சொல்லும்படி செய்ய, உன்னுடைய முகத்தில் குத்திப் பல்லை உடைப்பார்கள். 400ஆம் நம்பரில், உன் பசியைத் தணிக்க உனக்கு ஒரு ரொட்டித் துண்டைத் தருவார்கள். உன் வீட்டிற்கு சோதனை போட வரும் போது உன் வீட்டிலுள்ள மதிப்புயர்ந்த எல்லாச் சாமான்களையும் திருடுவார்கள். 400ஆம் நம்பரில் உன் பேரில் அனுதாபப்படுவதாகக் காட்டிக்கொள்ள, திருட்டுச் சாமான்களிலிருந்து ஒரு அரை சிகரெட்டை உனக்குத் தருவார்கள். இவர்களைத் தவிர வேறு ஒரு ரகத்தினரும் உண்டு. இவர்கள் தாங்களாகவே உன்னைத் தொந்தரவு செய்வதில்லை; ஆனால் உனக்கு உதவியும் செய்வதில்லை. இவர்களுக்கு எப்போதும் தங்களுடைய தோலைப்பற்றியே கவலை. இதனால் அரசியல் வானிலையை அறிந்து கொள்வதற்கு மிகவும் ஏற்ற பாராமீட்டர்களாக விளங்கினார்கள். இவர்கள் முகத்தை 'உர்' என்று வைத்துக் கொண்டு, உத்தியோக முறையில் ஜபர் தஸ்து செய்கிறார்கள் என்றால், ஸ்டாலின் கிராட் முனையில் ஜெர்மானியர்கள் முன்னேறுகிறார்கள் என்று நீ சொல்லி விடலாம். ஒரு கைதியுடன் சம்பாஷணை செய்யும் அளவுக்குச் சிறிது தாராளமாக நடந்து கொள்கிறார்கள் என்றால் ஸ்டாலின்கிராடில் ஜெர்மானியர் முறியடிக்கப்பட்டிருக்கிறார்கள் என்று தெரிந்து கொள்ளலாம். இவர்கள் தங்களுடைய செக் முன்னோர்களைப் பற்றிப் பேசுகிறார்கள் என்றால் அல்லது நிர்ப்பந்தத்தினாலேயே கெஸ்டாபோவில் சேர்ந்ததாகச் சொல்கிறார்கள் என்றால்—ரொம்ப ஜோர்; செஞ்சேனை வெகு வேகமாக ராஸ்டாவ் நோக்கி முன்னேறுகிற என்று அர்த்தம். இவர்களன்னியில் இன்னொரு ரகமும் இருக்கிறது. இந்த ரகத்தைச் சேர்ந்த பிரகிருதி, நீ நீரில் மூழ்குகிறபோது கையைக் கட்டிக்கொண்டு சும்மா இருக்கும்; நீயாகத் தத்தளித்துக் கரையேறிவிட்டால், கை கொடுத்து உதவ முன் வரும்.

அந்த ரகத்தைச் சேர்ந்தவர்கள் 400ஆம் நம்பரின் பலத்தை உணர்ந்து கொண்டு, அத்துடன் சினேகமாக இருக்க முயற்சித் தார்கள். இதற்கு 400ஆம் நம்பர் கூட்டுப் பொறுப்பின் பலம்தான் காரணம். ஆனால் அவர்கள் ஒரு போதும் அதன் பகுதியாகிவிடவில்லை. இன்னொரு ரகமும் உண்டு. இந்த ரகம் அப்படி ஒரு கூட்டு அமைப்பு இருப்பதாக ஊகிக்கக்கூட இல்லை. இவர்களை நான் கொலைகாரர்கள் என்பேன். ஆனால் கொலைகாரர்களும் மனிதஜாதியைச் சேர்ந்தவர்கள் தான். இவர்கள் கையில் தடியையும் இரும்பையும் கொண்ட கொடிய மிருகங்கள். இவர்கள் எங்களைச் சித்ரவதை செய்த போது ஜெர்மன் அதிகாரிக்கே பல டவை பார்க்கச் சகிக்க முடியவில்லை என்றால், அதனால் அவன் முகத்தைத் திருப்பி வெளியேறினான் என்றால் இவர்களை என்னென்று சொல்வீர் கள்? தங்கடைய சொந்தச் செக் நாட்டிற்காகவோ அல்லது ஜெர்மனிக்காகவோ, தங்களுடைய இரத்த வெறியைச் சிறிதாவது கட்டுப்படுத்த வேண்டுமென்று இவர்கள் நினைக்க வில்லை. அதற்கு வேண்டிய அளவு கபடத் தனமும் இவர் களிடம் இல்லை. கொல்லுவது சித்தரவதை செய்வது என்றால் இவர்களுக்கு ரொம்ப சந்தோஷம். வேறு எதற்காக இல்லா விட்டாலும், இந்தச் சந்தோஷத்திற்காகவே இவர்கள் எங்களைச் சித்ரவதை செய்தார்கள். எங்களுடைய பற்களை உடைத்தார்கள்; காதைத் துளைத்தார்கள்; கண்ணைப் பிடுங் கினார்கள்; அடிவயிற்றில் உதைத்தார்கள்; மூளை கலங்கும்படி அடித்தார்கள். இவ்வளவும் தமக்குள் இருக்கும் வெறியைத் தணித்துக் கொள்வதற்காகத்தான். இவர்களை நீ ஒவ்வொரு நாளும் பார்த்தாய்; இவர்களுடைய பிரசன்னமே அந்த இடம் முழுவதிலும் இரத்தக் கவிச்சியை உண்டு பண்ணிற்று. இவர்களை—அதை, நீ அதை சகித்துக் கொள்ள வேண்டும். இவர்களுக்கு எதிராக உன்னிடம் இருந்த ஒரே ஒரு கேடயம், உறுதியான நம்பிக்கைதான்— இவர்கள் தங்களுடைய அக்ரமங் களைப் பற்றி அறிந்த ஒவ்வொரு சாக்ஷியையும் படுகொலை

செய்த போதிலும் சரி, இறுதியில் நீதியின் வாளிலிருந்து தப்ப முடியாது என்ற நம்பிக்கைதான்.

இந்த மனிதர்கள் உட்கார்ந்திருந்த அதே மேஜையில் உண்மையான மனிதர்கள் சிலரும் உட்கார்ந்திருந்தனர். அவர்கள்தான் கைதிகளைக் காப்பாற்ற, சிறை விதிகளைப் பயன்படுத்தியவர்கள். கைதிகளுடைய கூட்டு அமைப்பை 400 ஆம் நம்பரில் உண்டுபண்ண உதவி செய்தவர்கள். அவர்கள், அதன் பகுதியாக மனப்பூர்வமான துணிச்சலுடன் இணைந்து இருந்தனர். அவர்கள் கம்யூனிஸ்டுகள் அல்ல என்று எண்ணும் போது, அவர்களுடைய பெருமை மிகமிக உயர்கிறது. கெஸ்டாபோ ஏஜெண்டுகளாக, அவர்கள் கம்யூனிஸ்டுகளுக்கு எதிராக வேலை செய்திருக்கலாம் என்று எண்ணும்போது அவர்களுடைய பெருமையை எப்படி வர்ணிப்பதென்று தோன்றவில்லை. ஆக்கிரமிப்பாளர்களை எதிர்த்து கம்யூனிஸ்டு கள் போராடுவதைப் பார்த்தபோது, தேசம் முழுவதுக்கும் கம்யூனிஸ்டுகள் எத்தகைய முக்கியத்துவத்துடன் விளங்குகின்ற னர் என்பதை அவர்கள் புரிந்து கொண்டனர். அந்த வினாடியி லிருந்து, சிறைப் பெஞ்சுகளிலும் உறுதியாகவும் விசுவாசத்துட னும் நடந்து கொண்ட எங்கள் ஒவ்வொருவருக்கும் அவர்கள் உதவி செய்தனர்.

வெளியிலுள்ள நம் படையினரில் அநேகர், தாம் கெஸ்டா போவின் பிடியில் சிக்கினால் தமக்கு என்ன கதி நேரும் என்பதை உணர்ந்தால் ஊசலாடியிருப்பார்கள். விசுவாசமுள்ள இந்த மனிதர்கள், சிறைச்சாலையில் தங்கள் கண் எதிரே ஒவ்வொரு நாளும் அத்தனை பயங்கரங்களையும் கண்டனர். தாங்கள் கைதிகளோடு கைதிகளாக கைதிகளைவிட மோச மான முறையில் சோதிக்கப் படுவோம் என்று எதிர்பார்த்துக் கொண்டே, இவர்கள் ஒவ்வொரு மணியையும் கழித்தனர். ஆனால் இவர்கள் ஊசலாடவில்லை. மனம் கலங்கவில்லை. ஆயிரக்கணக்கான உயிர்களை இவர்கள் காப்பாற்றினர். தங்களால் காப்பாற்ற முடியாதவர்களுடைய கஷ்டத்தைக்

குறைத்து ஆறுதல் அளித்தனர். வீரன் என்ற பெயர் இவர் களுக்கே உரியது. இவர்கள் இல்லாமல் 400ஆம் நம்பர் ஒரு போதும், ஆயிரக்கணக்கான கம்யூனிஸ்டுகளுக்கு இன்றைக்கு எப்படியிருக்கிறதோ, அப்படி ஆகியிருக்காது. அதாவது இருண்ட கட்டிடத்தில் ஒளிதரும் இடமாக. எதிரியின் பின்னணியிலுள்ள ஒரு அகழியாக, ஆக்கிரமிப்பாளனின் குகையிலே சுதந்திர உரிமைப் போராட்டத்தின் கேந்திரமாக ஆகியிருக்காது.

## அத்தியாயம் ஐந்து

## குண விசேஷங்களும் துணுக்குகளும்

சரித்திரத்தில் இந்தக் கட்டத்தில் வசித்து, கடந்து செல்கிற வர்கள் எல்லோரையும் நான் ஒன்று கேட்டுக் கொள்கிறேன்; இந்தப் போராட்டத்தில் பங்கு கொள்கிறவர்களை ஒரு போதும் மறக்காதீர்கள், நல்லவர்களையும் கெட்டவர்களையும் ஞாபகத்தில் வைத்திருங்கள். உங்களுடைய நல்வாழ்வுக்கா கவும் தங்களுடைய வாழ்வுக்காகவும் உயிர்த் தியாகம் செய்த எல்லோரையும் பற்றி உங்களால் முடிந்த அளவுக்குக் குறிப்புகளைச் சேகரியுங்கள். நிகழ்காலம், கடந்த காலச் சரித்திரமாவது நிச்சயம். இது சரித்திரத்தை உருவாக்கிய ஊர் பெயர் தெரியாத வீரர்களுடைய மகத்தான சகாப்தம் என்று அப்போது அழைக்கப்படும். அவர்கள் எல்லோருக்கும் பெயர் கள் இருந்தன; முகங்கள் இருந்தன; நம்பிக்கைகள் இருந்தன; ஆசைகள் இருந்தன. இதே காரணத்தினால், நினைவிலே நிற்கும் பெயர்களை உடையவர்கள் பட்ட கஷ்டங்களைவிட, பெயர்கள் தெரியாதவர்கள் பட்ட கஷ்டங்கள் எவ்விதத்திலும் குறைந்ததாக இல்லை. நான் விரும்புவது எல்லாம், நீங்கள் அவர்களையும் உங்களுக்குத் தெரிந்தவர்களை மனதில்

வைத்துக் கௌரவிப்பது போல, உங்கள் குடும்பத்தினரை நினைப்பது போல அல்லது உங்களையே நீங்கள் நினைப்பது போல மனதில் வைத்து உங்களில் ஒருவராகப் பாவிக்க வேண்டும் என்பதுதான்.

வீரர்கள் நிறைந்த குடுமபங்கள் எத்தனையோ முழுவதும் கொல்லப்பட்டிருக்கின்றன. அவர்களில் ஒருவரை உங்களின் சொந்தப் புதல்வனை அல்லது புதல்வியை நேசிப்பது போல நேசியுங்கள். எதிர்காலத்துக்காக வாழ்ந்த ஒரு மகாபுருஷனைப் பற்றிப் பெருமைப்படுவது போல் அவர்களைப் பற்றிப் பெருமைப்படுங்கள். எதிர் காலத்தைப் பற்றிய சிந்தனை யிலேயே நாட்களைக் கழித்து எதிர்காலத்தை அழகுடைய தாக்கும் முயற்சியில் உயிரைவிட்ட ஒவ்வொருவரும், கற்சிலை யாகச் செதுக்கப்பட வேண்டிய பெருமை படைத்தவர்களாவர். இவர்களுக்கு எதிராக வேலை செய்தவர்கள், புரட்சிப் பெருவெள்ளத்தை அடைக்க இறந்த கால தூசியைக் கொண்டு அணைக்கட்ட முயற்சித்தவர்கள்—தோளில் உயர் பதவிப் பதக்கங்களைத் தரித்திருந்தாலும்—மக்கிப் போகும் மரப்பாச்சி களே யாவர். இந்த உருவங்களையும் நாம் உயிருடன் காண வேண்டும். அவர்களுடைய கேவலமான வெறியாட்டமாடும் நிலையை—பரிகசிக்கத்தக்க நிலையை, அறிய வேண்டியது அவசியம். ஏனெனில் இவர்களும் நம்முடைய எதிர்காலத்தைப் பற்றிய கண்ணோட்டத்திற்கு, விஷயங்களை அளிக்கின்றனர்.

கீழே நான் சில நபர்களைப் பற்றிய குணவிசேஷக் குறிப்பு களைத் தருகிறேன். இவை, போர்க்களத்தில் ஒரு குறுகிய முனையில் உட்கார்ந்து நான் குறித்தவை.

## ஜிலினிக் தம்பதிகள்

ஜோஸப்—மேரி, அவர் ஒரு பஸ் கண்டக்டர். அவள் ஒரு வீட்டு வேலைக்காரி. அவர்களுடைய வாசஸ்தலத்தை நீங்கள்

பார்க்க வேண்டும். வழவழப்பான, சாதாரணமான தரை; நவீன மேஜை நாற்காலி வகைகள்; ஒரு புஸ்தக அலமாரி; ஒரு சிலை; சுவரில் படங்கள்—பரிசுத்தமென்றால் பரிசுத்தம். அதைப் பார்த்தவுடன் மேரி வீட்டிலேயே அடைப்பட்டிருப்பவள் என்றும், வெளி உலகே அவளுக்குத் தெரியாது என்றும் நீ சொல்வாய். ஆனால், அவள் வெகு நாள் கம்யூனிஸ்ட் கட்சியில் வேலை செய்திருக்கிறாள்; சமூக நீதியைப் பற்றித் தன் சொந்தக் கனவுகளைக் கண்டிருக்கிறாள். அவர்கள் இருவரும் சந்தடி யில்லாமலும் நிரம்ப விசுவாசத்துடனும் வேலை செய்தனர். எதிரியின் படையெடுப்பு மிகவும் கடுமையான வேலையை அவர்கள் பேரில் திணித்தபோது, அவர்கள் சிறிது கூடப் பின் வாங்கவில்லை.

மூன்று வருடம் தலைமறைவாக இருந்த பிறகு, அவர்கள் வீட்டை உடைத்து போலீஸ் நுழைந்தது. அவர்கள் இணை பிரியாமல், கைகளைத் தலைக்கு மேல் தூக்கி, ஒருவர் பக்கத்தில் ஒருவராக நின்றனர்—மிகவும் உருக்கமான காட்சி.

## மே 19, 1943

இன்றிரவு என் அருமைக் குஸ்தினாவை அவர்கள் போலந்துக்கு 'கடின வேலைக்காக' இழுத்துப் போனார்கள். அப்படியென்றால்? கொலைக்களத்திற்கு டைபாய்டு ஜுரத்துக் குப் பலியிட இழுத்துப் போகிறார்கள். அவளுக்கு இன்னும் சில வாரங்கள் தான் ஆயுள் இருக்கும். இரண்டு அல்லது மூன்று மாதங்கள் வாழக்கூடும்.

என்னுடைய வழக்கு கோர்ட்டுக்கு அனுப்பப்பட்டுள்ளது. சிறையில் சுமார் நான்கு வாரங்கள் விசாரணை நடக்கும். அதன் பிறகு முடிவுக்கு இரண்டு அல்லது மூன்று மாதங்கள் இருக்கும். இந்தக் குறிப்புக்கள் ஒரு போதும் முற்றுப்பெறாது. அடுத்த சில நாட்களில் சந்தர்ப்பம் கிடைத்தால் முடிந்த அளவுக்கு எழுத முயற்சிக்கிறேன். ஆனால் இன்று எனக்கு

எழுத முடியாது. என் மனமும் இதயமும் குஸ்தினா பேரிலேயே லயித்து இருக்கின்றன. அவள் நற்குண மாது; அன்புள்ள மனைவி; மிகவும் ஆழமான; ஆனால் அமைதியற்ற வாழ்க்கையில் நெருங்கிய விலை மதிப்பற்ற உயரிய சினேகிதை.

ஒவ்வொரு மாலையிலும் நான் அவள் மிகவும் விரும்புகிற பாட்டைப் பாடுகிறேன். ஸ்டெபியின் நீல நிறப் புல்வெளியைப் பற்றி, பார்டிஸான் போராட்டக் கதைகளை வர்ணித்து நான் பாடுகிறேன். தன் கணவன் பக்கம் நின்று சுதந்திரத்துக்காகப் போராடிய ஒரு கோசாக் பெண்ணைப் பற்றி, அவளுடைய தைரியத்தைப் பற்றி, எப்படி ஒரு போராட்டத்துக்குப் பிறகு அவளைத் தரையிலிருந்து எழுப்ப முடியவில்லை என்பதைப் பற்றிப் பாடுகிறேன்.

ஓ! என் தைரியமிக்க தோழியே! உன் சிறிய உருவத்தில் தான் எத்தகைய பலம்! அதன் வதனத்தில் தான் எத்தகைய உறுதி! அந்த மகத்தான கண்களில் எத்தகைய கனிவு! முடிவற்ற போராட்டங்களும், அடிக்கடி நிகழ்ந்த பிரிவுகளும் நம்மை நிரந்தரக் காதலர்களாக்கிவிட்டன. புதுக் காதலர்களுக்கு முதல் சந்திப்பிலும், முதல் அணைப்பிலும் உண்டாகும் இன்பகரமான உணர்ச்சிகள், பழையவர்களான போதிலும், நம்மிடையே நூற்றுக்கணக்கான தடவை தோன்றி நம்மை மகிழ்வித்தன. நம் இதயங்கள் இரண்டாக இருந்த போதிலும் அவற்றின் துடிப்பு ஒன்றே. மகிழ்ச்சியிலும், கவலையிலும், படபடப்பிலும், துக்கத்திலும் நாம் விடுகிற மூச்சும், பார்வைக்கு இரண்டாக இருந்த போதிலும் உண்மையில் ஒன்றே.

பல ஆண்டுகளாக நாங்கள் இருவரும் சேர்ந்து வேலை செய்திருக்கிறோம். ஒரு நண்பன் இன்னொரு நண்பனுக்கு உதவுவதுபோல, ஒருவருக்கொருவர் உதவி வந்திருக்கிறோம். பல ஆண்டுகளாக நான் எழுதும் கட்டுரைகளை முதலில் வாசிப்பவளும், முதலில் விமர்சிப்பவளும் அவள் தான். அவளுடைய கண்கள் என் பேரில் இல்லாத சமயத்தில்

எழுதுவதுதென்பது, எனக்கு மிகவும் சிரமமாக இருந்தது. பல ஆண்டுகளாக நாங்கள் இருவரும் போராட்டங்களில் இணை பிரியாமல் சேர்ந்தே நின்று வந்திருக்கிறோம். பல ஆண்டுகளாக நாங்கள் நேசிக்கிற நாட்டில் கையோடு கை கோர்த்துச் சுற்றித் திரிந்திருக்கிறோம்; நாங்கள் அநேக சோதனைகளுக்கு ஆளாகியிருக்கிறோம்; அநேக இன்பங்களைக் கண்டிருக் கிறோம். ஏனெனில் நாங்கள் ஏழைகளின் செல்வத்தை நிறையப் பெற்றிருந்தோம்— எங்கள் உள்ளங்களில் பொதிந்து கிடக்கும் செல்வமே அது.

குஸ்தினாவா? இதோ பாருங்கள், இவள்தான் குஸ்தினா.

ஒரு வருடத்துக்கு முன்பு, ஜூன் மாத நடுவில் இராணுவச் சட்டம் ஆட்சி புரிந்த சமயத்தில் இது நடந்தது. நான் செத்து விட்டேன் என்ற நாசகரமான வதந்திகளைக் கேட்டு, மனம் உடைந்து, தனியறையில் தத்தளித்துப் போராடிக் கொண்டி ருந்த பிறகு, நான் கைதாகி ஆறு வாரங்கள் கழிந்த பிறகு, முதல் தடவையாக அவள் என்னைப் பார்த்தாள். என்னை இளக வைப்பதற்காக, அவர்கள் அவளை என் அறைக்கு அழைத்து வந்தார்கள்.

கெஸ்டோபோ அதிகாரி அவளை என் எதிரிலே உட்கார வைத்து, அங்குமிங்கும் உலாவியவாறு அவளிடம் கூறினான் "இவனுக்கு நீ புத்தி சொல்—ஒழுங்காக நடந்து கொள்ளும்படி எடுத்துக் கூறு. இவன் தன்னைப் பற்றி நினைக்கவில்லை என்றால், உன்னைப் பற்றியாவது நினைக்கும்படி தூண்டு. ஒரு மணி நேரம் அவகாசம் தருகிறேன். நன்றாகச் சிந்தித்துப் பார். நீங்கள் இன்னும் பிடிவாதம் பிடித்தால் இன்று இரவு இரு வரையுமே சேர்த்துச் சுட்டுக் கொன்றுவிடுவோம்."

"மிஸ்டர் கமிஸார், இப்படிப் பேசி என்னைப் பயமுறுத்தி விடலாம் என்று நினைக்காதீர். அதுதான் என் கடைசி விருப்பம்; பெரிய ஆசை. இவரைச் சுட்டுக் கொன்றால் என்னையும் சுட்டுக் கொன்றுவிடுங்கள்."

இதுதான் என் குஸ்தினா! ஆழ்ந்த அன்பு, மகத்தான உறுதி. குஸ்தினா! அவர்கள் நம் உயிரைப் பருகலாம்; இல்லையா? ஆனால் நம் காதலையோ, மானத்தையோ அவர்களால் பறிக்க முடியாது.

இவையெல்லாம் கடந்த பிறகு, நாங்கள் எப்போதாவது சந்திப்போமானால் எப்படி வாழ்வோம் என்று உங்களால் நினைத்துப் பார்க்க முடியுமா? பரிபூரண நிர்மாண உரிமை களால் பொலிவுற்று விளங்கும் சுதந்திர வாழ்க்கையில் நாங்கள் மீண்டும் கூடினால் எப்படி இருப்போம்? நாங்கள் ஆசையுடன் நேசித்த லட்சியங்களை அடைந்துவிட்ட பிறகு மிகவும் பொறுமையுடன் உழைத்து வரும் லட்சிய்ங்கள் பூர்த்தியடைந்த பிறகு. இப்போது எங்கள் உயிரைக் காணிக்கையாகக் கேட்கும் லட்சியங்கள் ஈடேறிய பிறகு, மீண்டுல் கூடினால் எப்படி வாழ்வோம்? நாங்கள் செத்துவிட்ட போதிலும், உங்களுடைய மகத்தான மகிழ்ச்சியில் துளிப் பங்கு கொள்கிறோம். ஏனெனில், அதில் நாங்கள் எங்கள் உயிர்களையே முதலீடாகப் போட்டிருக்கிறோம். விட்டுப் பிரிய மனமில்லாவிட்டாலும், அது எங்களுக்கு மகிழ்ச்சியைத் தருகிறது.

நாங்கள் விடைபெற்றுக் கொள்வதற்கோ, ஆலிங்கனம் செய்து கொள்வதற்கோ, கையைப் பிடித்துக் குலுக்குவதற்கோ கூட அவர்கள் எங்களை அனுமதிக்கவில்லை. பான்கிராட் ஸுக்கும், கார்லோவா சதுக்கத்துக்குமிடையே செய்தித் தொடர்பு வைத்துக் கொண்டிருக்கும் கூட்டு அமைப்பு மட்டுமே எங்களுக்கிடையே சில சமயம் ஒருவர் நிலைபற்றிய செய்தியை ஒருவருக்குத் தெரிவிக்கிறது. குஸ்தினா! நாம் ஒருவரை ஒருவர் இனி மீண்டும் சந்திக்கவே மாட்டோம் என்பது உனக்குத் தெரியும். இருந்தாலும், வெகு தொலைவில் நின்று, “அன்பே, போய் வாருங்கள் மீண்டும் கூடும்வரை!” என்று நீ கூறுவதை நான் கேட்கிறன்.

என் குஸ்தினா! வணக்கம்! மீண்டும் கூடும்வரை!

# எனது உயில்

என்னிடம் புஸ்தகங்களைத் தவிர வேறு ஒன்றும் இருந்த தில்லை. அவற்றையும் கெஸ்டோபோ தீக்கிரையாக்கி விட்டது.

நான் அநேக கட்டுரைகள் எழுதியிருக்கிறேன். கலைப் பிரச்னைகள், அரசியல் பிரச்னைகள், இலக்கிய—நாடக விமர்சனங்கள், ஆராய்ச்சிகள் முதலியன பிரதானமானவை. இவை பெரும்பாலும் பத்திரிகைத் தொழில்முறையில் எழுதப்பட்டவை. இவற்றில் அநேகம் அன்றாட விஷயங்களைப் பற்றியவையாதலால், சம்பந்தப்பட்ட நாட்களுக்குப் பிறகு முக்கியத்துவமில்லாது செத்தவையாகிவிட்டன. இவை அப்படியே கிடக்கட்டும். வேறு சில வாழ்க்கையைச் சித்தரிப் பவை. இவற்றை, குஸ்தினா தொகுத்துப் பிரசுரிப்பாள் என்று நான் நம்பினேன். ஆனால் இப்போது அவளுக்கும் சந்தர்ப்பம் இல்லை. ஆகவே, இவற்றில் சிறந்தவற்றை கீழ்க்கண்ட படி ஐந்து தலைப்புகளில் தொகுத்துப் பிரிசுரிக்கும்படி, என் தோழன் லாடியா ஸ்டோலை நான் கேட்டுக் கொள்கிறேன்.

1. அரசியல் கட்டுரைகளும் விவாதங்களும்.
2. உள்நாட்டு விவகாரங்களைப் பற்றிய ரிப்போர்டுகள்.
3. சோவியத் யூனியன் பிரயாணக் குறிப்புகள்.

4, 5. இலக்கிய—நாடக ஆராய்ச்சிகளும், கட்டுரைகளும்.

இவற்றில் பெரும்பாலானவை 'ட்வோபா' (சிருஷ்டிக்கலை) 'ரூடு பிரோவா' (செவ்வுரிமைகள்) ஆகிய பத்திரிகைகளிலும் மற்றவை கமென், பிரமென், புராலெட், குல்ட், டோபா, தி சோஷலிஸ்ட், அவன்ட்கார்ட் ஆகிய பத்திரிகைகளிலும் பிரசுரமாகி இருக்கின்றன.

ஜூலியஸ் ஸீஸர் பற்றிய என் ஆராய்ச்சிக் கட்டுரைகள் ஆக்கிரமிப்புக் காலத்திலேயே என் 'போஸ்ஹினா நெம் கோவாவை துணிச்சலுடன் பிரசுரித்ததற்காக நான் மிகவும்

கௌரவிக்கிற பதிப்பாளர் கிர்கால் வசம் இருக்கின்றன.' சாபினா பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரைகளில் ஒரு பகுதியும் ஜான் நெரூடா பற்றிய குறிப்புக்களும் ஜிலினிக் விசூஸ்ஹில் சூசாநெக் ஆகியவர்கள் வசித்த கட்டிடத்தில் எங்கோ ஒரு இடத்தில் மறைத்து வைக்கப் பட்டிருக்கின்றன. இந்தத் தோழர்கள் அநேகமாக இறந்துவிட்டனர்.

நம்முடைய தலைமுறை பற்றி, ஒரு நாவலை நான் எழுதத் தொடங்கினேன். அதில் இரண்டு அத்தியாயங்கள் என் பெற்றோர்களிடம் இருக்கின்றன. மற்றவை ஒரு வேளை நாசமாகியிருக்கக்கூடும். என் கதைகளின் கையெழுத்துப் பிரதிகள் பல, என்னைப் பற்றிய கெஸ்டோபோ'பைலில்' இருப்பதை நான் பார்த்தேன்.

ஜான் நெரூடா பேரில் எனக்குள்ள மோகத்தை, வருங்கால இலக்கிய சரித்திராசிரியனிடம் விட்டுச் செல்கிறேன். நெரூடா நம்முடைய மகாகவி. அவன் நம் எல்லோரையும்விட எதிர் காலத்தைத் தூரதிருஷ்டியுடன் பார்த்தான். அவனை முழு வதும் புரிந்து பாராட்டி இதுவரை ஒரு ஆராய்ச்சி நூலும் எழுதப் படவில்லை. ஒரு பாட்டாளி என்ற முறையில், நெரூடாவை உண்மை உருவத்தில் சித்தரிக்கும் படம் எதுவும் இதுவரை வரையப்படவில்லை. தொழிலாளிகள் வசித்த ஸ்மிச்சோவ் வட்டார மூலையில் அவன் பிறந்தான். 'கல்லறை மலர்கள்' என்ற இலக்கியத்திற்கு வேண்டியிருந்த விஷயங்களை அவன் சேகரித்தது ரிங்ஹோபர் ஆலை வட்டாரத்திலாகும். அந்தச் சுற்றுப் புற சூழ்நிலையில்லாமல், 'கல்லறை மலர்கள்' எழுதிய நாளிலிருந்து, '1890ம் வருட மே தினம்' எழுதிய நாள் வரை, அவனுடைய வளர்ச்சியைப் புரிந்து கொள்ள முடியாது. தெளிவாகச் சிந்திக்கும் ஆற்றலுள்ள விமர்சகர் சால்டா உள்பட பெரும்பாலோர். நெரூடாவின் பத்திரிகைத் தொழில் அவருடைய கவிதை சிருஷ்டிப்பில் குறுக்கிட்டதாகக் கருது கின்றனர். இது அபத்தம். நெரூடா பத்திரிகைக்காரராக இருந்த தனால்தான், மிகவும் சிறந்த கவிதைகளை அவரால் எழுத

முடிந்தது. பத்திரிகைத் தொழில் சாதாரணமாக அலுப்பூட்டக் கூடியது; கவனத்தைப் பல வழிகளில் திருப்பக் கூடியது. ஆனால் நெரூடா போன்ற நேர்மையான பத்திரிகைக்காரராக ஒருவன் இருந்தால் அது அவனுக்கு வாசகர்களுடன் நேரடியான தொடர்பை ஏற்படுத்திக் கொடுத்து கவிதை எழுதக்கூட ஆற்றலை உண்டு பண்கிறது. பத்திரிகை ஒன்று தன் வசம் இல்லாமல் இருந்திருந்தால், நெரூடா அநேக கவிதைப் புத்தகங்களை எழுதித் தள்ளியிருப்பான் என்பது உண்மையே. ஆனால் அவனுடைய இன்றைய சிருஷ்டிகள் பல நூற்றாண்டு காலம் நிலைத்திருப்பது போல் அவற்றில் எதுவுமே நிலைத்திருக்க மாட்டா. அவனுடைய சாபினாவை யாராவது பூர்த்தி செய்ய வேண்டும். அது முயற்சி செய்யத்தக்கது.

என் பெற்றோர்கள் என் பேரில் கொண்டுள்ள அன்புக்கும், பாசத்துக்கும் அளவில்லை! இதனாலேயே அவர்களுடைய அந்திம காலத்தில் அவர்களுக்குக் கஷ்டமற்ற வாழ்க்கையையும் நிம்மதியையும் அளிக்க நான் ஆசைப்பட்டேன். இந்த விருப்பம், என் வேலையை அர்த்த புஷ்டியுள்ளதாக்கியது. என் மறைவு அவர்களுடைய வாழ் நாட்களை இருள் சூழ்ந்தவையாக ஆக்காது என்று நான் நம்புகிறேன். உழைப்பாளி நிலைப்பவன் அல்ல; ஆனால் அவனது உழைப்பு நிலை பெற்றிருக்கும். அவர்களைச் சூழ்ந்துள்ள வெதுவெதுப்பிலும், வெளிச்சத்திலும் நான் என்றென்றும் அவர்கள் கூடவே இருப்பேன்.

என் மறைவினால் நம் குடும்பத்துக்கு ஏற்பட்டுள்ள நஷ்டத்தை, அப்பாவும் அம்மாவும் மறக்கும்படி உங்களுடைய பாடல்களாலும் சிரிப்பினாலும் முயற்சி செய்யுங்கள் என்று என் சகோதரிகள் லிபாவையும், வீராவையும் கேட்டுக் கொள்கிறேன். பெட்செக் கட்டிடத்தில் என்னைப் பார்க்க வந்த போது அவர்கள் கண்ணீர் வடித்தனர். ஆனால் அவர்கள் உள்ளத்தில் துயரத்திற்கு இடமிருந்ததில்லை. எப்போதும் உவகையே குடி கொண்டுள்ளது. அதனால் தான் நாங்கள் ஒருவரையொருவர் அவ்வளவு நேசிக்கிறோம். அவர்கள்

புன்னகையும் பூரிப்பும் மகிழ்ச்சியுமே உருவானவர்கள். அவர்களுடைய சந்தோஷத்தை எதுவும் கொள்ளை கொள்ளா திருக்கட்டும்.

இந்த இறுதிப் போராட்டத்தில் மாளாமல் வெற்றி பெற்று வாழவிருக்கும் எல்லாத் தோழர்களுக்கும் எங்களுக்குப் பிறகு இப்போராட்டத்தில் ஈடுபடப் போகும் யாவருக்கும், நான் பணிவுடன் என் வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த வணக்கம் குஸ்தினா சார்பாகவும், என் சார்பாகவும், தங்கள் கடமைகளைச் செய்தவர்கள் சார்பாகவும்!

நான் திரும்பவும் சொல்கிறேன்; நாங்கள் மகிழ்ச்சிக்காக வாழ்கிறோம்; அதற்காகவே போராட்டத்தில் ஈடுபட்டோம். அதற்காகவே சாகிறோம். எங்கள் பெயர்களைத் துக்கத்தின் சாயல் ஒரு போதும் அணுகாதிருக்கட்டும்! *(19.05.1943)*

## மே 22, 1943

கையொப்பம்—முத்திரை இரண்டும் ஆயிற்று. விசாரணை நீதிபதி நேற்றோடு என் வாழ்க்கையை ஒருவாறு தீர்த்துக் கட்டினார்.

நான் எதிர்பார்த்ததைவிட வேகமாக வழக்கு நடை பெறுகிறது. அவர்கள் ஏனோ அவசரப்படுகிறார்கள் போல் தோன்றுகிறது. என்னுடன் இவ்வழக்கில் மிரேக்கும் லிடாவும் பிரதிவாதிகள். துரோகம் செய்து ஓட்டம் பிடித்தும், அவனுக்கு யாதொரு நன்மையும் ஏற்படவில்லை.

ஜீவகளையற்ற, நிசப்தம் குடிகொண்டிருந்த விசாரணை நீதிபதி தர்பாரில். எல்லாம் 'கறாரா'க நடந்தன. கெஸ்டோபோ தலைமை காரியாலயத்தில் பயங்கரம் குடிகொண்டிருந்த போதிலும், அங்கு ஜீவன் இருப்பதாகத் தோன்றிற்று. பயங்கரம் வாழ்க்கையின் ஒரு பகுதியாதலால் அங்கு உணர்ச்சி கரை புரண்டது. போராடியவர்களின் உணர்ச்சி வெள்ளம் ஒரு புறம்; மனித வேட்டையாடும் மிருகங்களின் அல்லது சாதாரணக்

கொள்ளைக்காரர்களின் உணர்ச்சி மறுபுறம். எதிர்பக்கம் நின்ற போராட்டக்காரர்களில் அநேகருக்க ஒரு கொள்கையும் அதன் பேரில் ஒரு உறுதியும் இருந்தது. ஆனால் இங்கு, விசாரணை நீதிபதி தர்பாரில் உத்தியோக சம்பந்தப்பட்ட காரியங்களைத் தவிர வேறு ஒன்றுமே இல்லை. அந்த அதிகாரியின் அங்கியில் சங்கிலியில் பிணைக்கப்பட்ட ஒரு சிலுவை தொங்கிற்று. அது ஒரு கொள்கைப் பற்றைக் குறித்தது. ஆனால் அந்தக் கொள்கைப்பற்று அவன் உள்ளத்தில் இல்லாதது. அந்தச் சின்னங்கள் எல்லாம், இந்த சகாப்தத்தில் எப்படியாவது குடும்ப சம்பரக்ஷணை செய்து காலத்தைக் கழிக்க முயலுகிற ஒரு இரங்கத்தக்க சிறிய அதிகாரியை மறைத்துப் பாதுகாக்கும் கேடயமாகும். அவன் பிரதிவாதிகளுக்கு நல்லவனுமல்ல; கெட்டவனும் அல்ல, அவன் நகைப்பதுமில்லை; குரைப்பது மில்லை. அவன் ஒரு உத்தியோக காரியத்தை மட்டுமே செய்கிறான், இரக்கத்துக்குப் பதில், அவனுடைய உடம்பில் தண்ணீர் 'சூப்' ஓடுகிறது.

அவர்கள் சாக்ஷியங்களை நகல் எடுத்தனர்; சட்டப் 'பாயிண்ட்'களைக் குறித்தனர்; முடிவில் கையொப்பமிட்டனர். மொத்தம் ஆறு குற்றச்சாட்டுகள். ராஜத் துரோகம்; ஜெர்மன் பாராளுமன்றத்துக்கு விரோதமான சக்திகள்; ஆயுதமேந்திய எழுச்சிக்கு ஆயத்தம் செய்தது அவற்றில் சில. முழுவதும் எனக்குத் தெரியாது. இவற்றில் ஒன்றே போதும்.

என் உயிருக்காகவும், மற்றவர்களுடைய உயிர்களுக்கா கவும் கடந்த பதின்மூன்று மாதங்களாக நான் சாமர்த்தியமா கவும், உணர்ச்சியுடனும் அவர்களை எதிர்கொண்டேன். நாஜீக் கட்சி தம் நாட்டின் சூழ்ச்சித் திறனைப் புகழ்ந்து பெருமைப் படுகிறது. ஆனால் புதில் நான் அவர்களை வென்றுவிட்டேன். நான் ஏன் தோற்றேன என்றால் அவர்கள் கபடச் சூழ்ச்சிகளோடு தம் கையில் கொலை வாளையும் வைத்திருந்ததனால்தான்.

இவ்விதம் அந்த மல்யுத்தம் ஒருவாறு முடிந்தது. இப்போது காத்திருக்க வேண்டிய காலம் ஆரம்பமாகிறது. குற்றப்பத்திரிகை

தயாராகும் வரை, இரண்டு அல்லது மூன்று வாரங்கள் காத்தி ருக்க வேண்டும். பிறகு பெர்லினுக்குப் பிரயாணம். அங்கு விசாரணை தொடங்கும்வரை காத்திருக்க வேண்டும். பிறகு தண்டனை, கடைசியாகத் தூக்குமேடையில் தொங்குவதற்கு முன் நூறு நாட்கள் கழிக்க வேண்டும்— இதுதான் நான் எதிர் பார்க்கிற எதிர் காலம்; நான்கு அல்லது ஐந்து மாத வாழ்வு. இந்த இடைக்காலத்தில், எத்தனையோ சம்பவங்கள் நிகழலாம். இந்தக் காலத்தில் எல்லாவற்றையும் தலைகீழாக மாற்றி விடலாம். ஆனால் நிச்சயமில்லை. இங்கிருந்து கொண்டு என்னால் வேறு ஒரு வழியையும் எண்ண முடியவில்லை. வெளியில் விரைவாக நிகழும் சம்பவங்கள், எங்களை விடுவிப்ப தற்குப் பதில், எங்கள் முடிவை விரைவுப் படுத்தக்கூடும். ஆகவே அவையும் உதவக் கூடியவையாக இல்லை.

இது யுத்தத்துக்கும், நம்பிக்கைக்கும் இடையே நடக்கும் ஒரு ஓட்டப் பந்தயம். ஒரு விதமான மரணத்திற்கும் இன் னொரு விதமான மரணத்திற்குமிடையே நடக்கும் ஓட்டப் பந்தயம். எது முதலில் வரும்? பாஸிஸத்தின் சாவா அல்லது என் சாவா? இது என்னை மட்டும் பொறுத்த தனிப்பிரச்ச னையா? இல்லை; இல்லவே இல்லை. இந்தக் கேள்வி ஆயிரக் கணக்கான கைதிகளால் பதினாயிரக்கணக்கான, படை யினரால் கேட்கப்படுகிறது. இது ஐரோப்பாவிலும் உலகம் முழுவதிலும் உள்ள கோடிக்கணக்கான பொதுமக்களாலும் கேட்கப்படுகிறது. சிலருக்கு நம்பிக்கை அதிகம்; சிலருக்குக் குறைவு. ஆனால் அது வெறும் பிரமை; வீண் எண்ணம். முதலாளித்வம் அழுகி நாற்றமெடுப்பதால் உண்டாகி இருக்கும் பயங்கரங்கள், உலகம் முழுவதிலும் பரவி, ஒவ்வொருவரையும் அழிக்கப் பார்க்கின்றன. மிஞ்சி இருப்பவர்கள், “நான் பாஸிஸத் திற்குப் பிறகும் வாழ்கிறேன்'' என்று சொல்வதற்கு முன் ஆயிரம், பதினாயிரக்கணக்கான மக்கள்—எவ்வளவு அருமை யானவர்கள்—மடிவார்கள்.

இன்னும் சில மாதங்கள் தான் பாக்கி; விரைவில் அது வாரக்கணக்காக இருக்கும். ஆனால், அவைதான் மிக மிகக் கொடூரமான நாட்கள். யுத்தத்தில் கடைசி நாளில், வினாடியில், கடைசித் தோட்டாவினால், இதயத்தில் சுடப்பட்டு விழுகிற கடைசிச் சோல்ஜராக இருப்பது எத்தகைய துக்ககரமான விஷயம் என்று பல தடவை நான் கற்பனை செய்து பார்த்த துண்டு. ஆனால் யாராவது ஒருவன் அந்தக் கடைசிச் சோல்ஜராக இருக்கத்தான் வேண்டும். அந்தக் கடைசிச் சோல்ஜராக இருக்க எனக்கு வாய்ப்புக் கிட்டுமானால், இந்த வினாடியே நான் புறப்படுவேன்.

பான்கிராப்ட்ஸ் சிறையில், இன்னும் சில நாட்கள் தான் எனக்கு இடமுண்டு. ஆதலால் நான் விரும்பிய முறையில் இந்தக் குறிப்புகளை அமைக்க முடியாது. இருக்கிற அவகா சத்தை நன்கு பயன்படுத்திக் கொள்ள, விஷயத்தை வளர்த் தாமல் சுருக்கமாகக் கூறவேண்டும். சரித்திரத்தைவிட நபர்கள் பேரில் அதிகக் கவனம் செலுத்த வேண்டும்; அவர்கள்தான் நிரம்ப முக்கியமானவர்கள்.

நான் ஜிலினிக் தம்பதிகளைப் பற்றித்தானே கூற ஆரம்பித் தேன்? அவர்கள் நிரம்ப சாதாரணமானவர்கள். சாதாரண காலத்தில் அவர்களை வீரர்களாகக் கண்டிருக்க முடியாது. கைது செய்யப்பட்டபோது, தலைக்கு மேல் கைகளை உயர்த்தி, ஒருவர் பக்கத்தில் ஒருவராக அவர்கள் நின்றனர். அவர் களுடைய உதாரண வாசஸ்தலத்தை ஐந்து நிமிடங்களில் கெஸ்டோபோ நாசமாக்கியபோது, அவள் கண்கள் கலங்கின; சிறிது பயந்தன. பிறகு அவள் மெதுவாகத் தலையைத் திருப்பி, தன் கணவனிடம் கேட்டாள்:

“ஜோ, இப்போது நடப்பது என்ன?”

அவன் எப்போதுமே அதிகமாகப் பேசுபவன் அல்ல, அவனுக்கு வார்த்தைகளைத் தேடிப் பிடிக்க வேண்டியிருக்கும். பேச்சு, படபடப்பை உண்டாக்கும். ஒன்றும் புரியாமல்

திணறுவான். இப்போது அப்படி ஒன்றும் நடக்கவில்லை. அவன் நிதானமாக, சிரமமின்றிப் பதில் சொன்னான்:

"சாவதற்காக இங்கிருந்து போகப் போகிறோம் மேரி."

அவள் விம்மவில்லை; நடுக்கவுமில்லை. துப்பாக்கிகள் தன் எதிரே குறி பார்த்து இருக்கும்போதே, தலைக்கு மேலிருந்த வலது கையை அவள் கீழே இறக்கி அவனுடைய கையைப் பற்றினாள். இச்செய்கை, அவர்கள் இருவருக்குமே முதல் அறையை முகத்தில் வாங்கிக் கொடுத்தது. அவள் கன்னத்தைத் தடவிக்கொண்டே, ஜெர்மானியரை மேலும் கீழும் பார்த்தாள். பரிகாசமாகச் சொன்னாள்.

"எவ்வளவு ஜோரான வாலிபர்கள்!"— தொனியை இன்னும் உயர்த்தி, "எவ்வளவு ஜோரான வாலிபர்கள்? இவ்வளவு மோசமான மிருகங்கள்."

அவர்களை அவன் மதிப்பிட்டதிற் துளியும் பிசகில்லை. சில மணி நேரம் கழிந்தபின், பிரக்ஞை போகும் வரையில் அடித்து, அவளை விசாரணை அதிகாரியின் அறையிலிருந்து சுமந்து அப்புறப்படுத்தினர். எவ்வளவுதான் அடித்தாலும் அவள் வாயிலிருந்து ஒன்றையும் கறக்க முடியவில்லை. அப் போதும் சரி, அதற்குப் பிறகும் சரி, ஒரு விஷயத்தையும் அவர் களுக்கு அவள் சொல்லவில்லை.

நான் விசாரணைக்கு லாயக்கில்லாமல், மரண அவஸ்தைப்பட்டுக் கொண்டு என் அறையில் கிடந்தபோது, அவர்களுக்கு என்ன நேர்ந்தது என்று எனக்குத் தெரியாது. ஆனால் அந்தச் சமயத்தில் அவர்கள் எதையும் சொல்லி விடவில்லை என்பது மட்டும் நிச்சயம் எனக்குத் தெரியும். நான் சொல்கிறபடி செய்வதற்காக அவர்கள் என் வார்த் தையை எதிர்பார்த்துக் காத்திருந்தனர். மணிக்கட்டையும் கணுக்காலையும் சேர்த்துக் கட்டிப் போட்டு அவன் எத்த னையோ தடவை அடிக்கப்பட்டான். ஆனால் நான் அவ்விடத் திற்குப் போகும் வரையில், கண் ஜாடை காட்டும் வரையில், அவனாக எதையும் பேசவே இல்லை. விசாரணை ஒருவாறு நடக்க வேண்டும் என்பதற்காக, எதையெதை ஒப்புக்

கொள்ளலாமோ அதை எல்லாம் ஒப்புக் கொள்ளும்படி நான் ஜாடை காட்டுவேன்.

கைது ஆவதற்கு முன்பே அவனது மனைவியை எனக்கு நன்கு தெரியும். அவள் ரோஷக்காரி; இளகிய மனமுடையவள். எனினும், கெஸ்டோபோவிடமிருந்த காலம் முழுவதிலும், அவள் ஒரு நாள்கூடக் கண்ணீர் சிந்தவில்லை. அவள் பெருமைப் பட்டதெல்லாம் தன் வீடு ஒன்றைப் பற்றித்தான். ஆனால் வெளியிலுள்ள தோழர்கள் அவளுக்கு ஆறுதல் கூறும் பொருட்டு, யார் யார் அவளுடைய மரச்சாமான்களைத் திருடினார்கள் என்பது தமக்குத் தெரியும் என்றும், அவர் களைத் தாங்கள் கவனித்து வருவதாகவும் செய்தி சொல்லி அனுப்பியபோது, அவள் கீழ்க்கண்டவாறு பதில் உரைத்தாள்:

"மரச்சாமான்களா? அவை கெட்டுத் தொலையட்டும்! அதைப் பற்றிக் கவலைப்பட்டு நேரத்தை வீணாக்காதீர்கள். அதைவிட முக்கியமான வேலைகள் இருக்கின்றன. அதுவும் இப்போது எங்களுடைய வேலையையும் சேர்த்து இருமடங்கு செய்ய வேண்டியிருக்கிறது. முதலில் நாங்கள் இந்த இடத்தை விட்டு மீளவேண்டும். நான் பிழைத்திருந்தால் என் வீட்டை நானே கவனித்துக் கொள்ள முடியும்."

ஒருநாள் ஜிலினிக் தம்பதிகளை வெளியே அழைத்துப் போனார்கள். ஒவ்வொருவரையும் வெவ்வேறு இடத்துக்குத் தான். அவர்களுக்கு என்ன கதி நேர்ந்ததென்று அறிய நான் செய்த முயற்சிகள் யாவும் வீணாயின— கெஸ்டோபோ கைவசம் சிக்கிய பிறகு திடீரென்று யாரும் மறைவது சர்வ சாதாரணம். அப்படி மறைகிறவர்களை, பரவிக் கிடக்கும் ஆயிரக்கணக்கான கல்லறைகளில்தான் தேட வேண்டும். ஓ! அந்தப் பயங்கரமான விதைகளிலிருந்து ஒருநாள் எத்தகைய பயிர் தழைக்கும்!

அவளுடைய கடைசிச் செய்தி இதுதான்:

"தலைவரே! வெளியில் உள்ளவர்களிடம் எனக்காக வருந்த வேண்டாம் என்று சொல்லுங்கள். என் கதியைக் கண்டு

கலக்கமடைந்து யாரும் அஞ்சி நடுங்கக்கூடாது என்றும் கூறுங்கள். தொழிலாளி என்ற ஹோதாவில் நான் என் கடமையைச் செய்தேன்; அதே முறையில் திருப்தியுடன் சாவேன்.”

அவள் ஒரு ‘வீட்டு வேலைக்காரி’ தான். படிப்பு அதிகம் கிடையாது. நூற்றுக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் தெரிவிக்கப்பட்ட இந்தச் செய்தியை அவள் படித்து அறிந்தவள் அல்ல:—

“யாத்ரீகரே! லாசிடேமோனியரிடம் சொல்லும்— சட்டம் விரும்பியபடி நாங்கள் செத்துக் கிடக்கிறோம் என்று.”

## விருஸ்ஹில் தம்பதிகள்

இவர்கள் ஜிலினிக் தம்பதிகள் வசித்த அதே கட்டிடத்தில், அவர்களுக்கு அடுத்த பகுதியில் வசித்தனர். இவர்களும் ஜோஸப், மேரி என்றே அழைக்கப்பட்டனர். ஒரு கீழ்த்தர சர்க்கார் சிப்பந்தியின் குடும்பம். பக்கத்துக் குடும்பத்தினரை விட, சிறிது வயதில் மூத்தவர்கள். அவன் பதினேழு வயது இளைஞனாக இருந்தபோது, முதலாவது உலக யுத்தத்தில் சண்டைபோட, கட்டாய இராணுவத் திட்டப்படி பட்டாளத்தில் சேர்க்கப்பட்டு, போர்க்களத்துக்கு அனுப்பப்பட்டான். சில வாரங்கள் கழிந்த பிறகு முழங்கால் முறிந்து திரும்பினான். அந்த முறிவு சரியாக ஆக்கப்படவே இல்லை. அப்போது அவள் புல்னோவில் ஒரு நர்ஸாக இருந்தாள். இருவரும் முதலில் ஆஸ்பத்திரியில் சந்தித்தனர். அவனை விட அவள் எட்டு வயது மூத்தவள். மகிழ்வற்ற முதல் மரணத்தை ரத்துச் செய்திருந்தாள். இந்த உயரமான ரயில்வே குமாஸ்தாவும் மாதும் சாதாரணமாக நடக்கக் கூடாத ஒரு விவகாரத்தில் சிக்கிக் கொண்டனர் போலும்.

எனக்குப் பிறகு, சில நாட்களில் அவன் கைது செய்யப் பட்டான். முதல் தடவை அவனை இங்கு பார்த்த போது

எனக்குத் திகீரென்றிருந்தது. அவன் மட்டும் வாயை விட்டு விட்டால், எவ்வளவு பெரிய நஷ்டம் ஏற்படும்! ஆனால் அவன் பேசவில்லை. அவன் கைதானதற்குக் காரணம் தன் நண்பன் ஒருவனிடம் சில துண்டுப் பிரசுரங்களை வினியோகித்ததை விட அதிகமாக ஒன்றும் செய்துவிடவில்லை.

சில நாட்களுக்கு முன்பு போகர்னி, பிக்ஷோவா ஆகிய இருவருடைய முட்டாள் தனத்தினால், திருமதி விசூஸ் ஹிலோ வாவின் சகோதரி வீட்டில் ஹோன்ஜாசெர்னி வசித்த செய்தி வெளியாயிற்று. உடனே ஜோசப் விசூஸ் ஹில்லை நான் கைதாகி இரண்டு நாட்களுக்குப் பிறகு அவர்கள் விசாரித்தார்கள். அவனை அடித்து, நம் மத்தியக் கமிட்டியின் கடைசி உறுப்பின ரைப் பற்றிய விவரங்களைக் கறக்க முயற்சித்தார்கள். மூன்றாம் நாள், அவன் 400-ம் நம்பருக்கு வந்து மிகவும் ஜாக்கிரதையாக உட்கார்ந்தான்... திறந்த புண்ணுடன் உட்காருவது எப்படி வலிக் கிறது! ஆவலுடனும் ஊக்கத்துடனும் நான் அவனை நோக்கி னேன். அவன் உடனடியாகக் கலக்கமின்றிச் சொன்னான்:

“நான் மறுக்கும்போது, என் முதுகில் எவ்வளவுதான் அடித்தாலும், அவர்களால் ஒன்றையும் பெற முடியாது!”

அந்தத் தம்பதிகளை எனக்கு நன்றாகத் தெரியும்— அவர்கள் எப்படி நேசித்தனர்! ஒருநாள் பிரிந்தாலும் எப்படி தனிமையை உணர்ந்து சிரமப்பட்டனர்! இப்போது மாதங்கள் கழிந்தன. தனிமை, சாவைவிட மும்மடங்கு மோசமானதாக இருக்கக் கூடிய வயதில் அவனுடைய அந்த மனைவி தன் அழகிய வீட்டில் எப்படி வருந்திக் கஷ்டப்பட்டிருப்பாள்! தங்களுடைய சிறிய சொர்க்கத்துக்கு, தன் கணவனை மீண்டும் அழைத்துப் போக அவள் மனம் எத்தனை யோசனைகள் செய்திருக்கும்! ஆனால், அவள் காலத்தைக் கழிக்கக் கண்டு பிடித்த வழி ஒன்றே ஒன்றுதான், அதுதான் கட்சியின் இரகசிய வேலைகளைச் செய்வது; இருவர் வேலைகளை ஒருத்தியே செய்வது.

இவ்விதம், 1943ம் வருடப் பிறப்பின்போது, அவள் தன் கணவன் உட்கார்ந்திருந்த இடத்தில் அவனுடைய படத்தை வைத்துவிட்டு, மேஜையில் தன்னந்தனியாக உட்கார்ந்திருந்தாள். இரவு பன்னிரண்டு மணி அடித்தவுடன், அவள் தன் கண்ணாடி டம்ளரைக் கணவன் உட்கார்ந்திருந்த காலி இடத்தில் தட்டிவிட்டு, அவன் சுகமாக இருக்க வேண்டும் என்றும், விரைவில் வீடு வந்து சேரவேண்டும் என்றும் பிரார்த்தித்துக் குடித்தாள்— அவன் சுதந்திர நாள்வரை உயிருடன் இருக்க வேண்டும் என்பதே அவளுடைய பிரதானமான விருப்பம்.

ஒரு மாதத்துக்குப் பிறகு அவளும் கைது செய்யப் பட்டாள். 400 நம்பரில் இருந்த எங்களில் பலர் நடுங்கி விட்டோம். ஏனெனில், வெளியிலுள்ளவர்களுடன் தொடர்பு வைத்திருக்க உதவியவர்களில் அவள் ஒருத்தி.

அவள் ஒரு வார்த்தையையும் வெளியிடவில்லை.

அவர்கள் அவளை அடிக்கவில்லை. அவள் நோயுற்றிருந்த படியால், அவர்களுடைய அடிகளைத் தாங்க முடியாமல் அங்கேயே செத்திருப்பாள். ஆனால், அவளை வேறு விதத்தில் சித்திரவதை செய்தனர். எண்ணாததை யெல்லாம் எண்ணிக் கலங்கச் செய்தனர்.

அவள் கைதாவதற்குச் சில நாட்களுக்கு முன்பு, அவளுடைய கணவனை அவர்கள் கடினவேலை செய்வதற்காகப் போலந்துக்குத் தள்ளிச் சென்றனர். அப்போது அவளிடம் சொன்னார்கள்:

"சாதாரணமாக, திடகாத்திரத்துடன் இருப்பவனுக்கே அது மிகவும் கடினமான வேலை. உன் கணவனோ, நொண்டி; அவனால் ஒருநாள்கூட அதைத் தாங்க முடியாது. அவன் அங்கு செத்து மடிவான். உன்னால் அவனை இனிப்பார்க்கவே முடியாது. பிறகு நீ வேறு கணவனை எங்கு சென்று அடைய முடியும்? அதுவும் இந்த வயதில்? ஆகவே, புத்திசாலித்தனமாக

நடந்து கொள். உனக்குத் தெரிந்ததை சொல்லு. இப்போதே அவனை அழைத்து வந்து உன்னிடம் விட்டுவிடுகிறோம்."

அவர், என் அருமை ஜோ. அங்கு எங்கேயோ சாவார்! எப்படிப்பட்ட சாவு என்பது யாருக்குத் தெரியும்; அவர்கள் என் சகோதரியைக் கொன்றார்கள்? என் கணவனையும் கொல்வார்கள். நான் தன்னந்தனியாய் விடப்படுவேன்! சாகும் வரையில் தன்னந்தனியாய்! இந்த வயதில் யாரை நான் தேடி அடைய முடியும்; ஆனால் அவரை நான் காப்பாற்ற முடியும். அவரை அவர்கள் திரும்ப அழைத்து வருவார்கள். ஒரு விலைக்கு. ஊஹூம். அந்த விலையைக் கொடுக்க நான் அல்ல ஆள். அப்படி நான் அந்த விலையைக் கொடுத்து அவரை மீட்டாலும், அவர் அவராக இருக்கமாட்டார்.

அவள் ஒரு வார்த்தையைக் கூடச் சொல்லவில்லை.

கெஸ்டாபோவின் அநாமதேயப் போக்குவரத்து சாதனங்களில் ஒன்றில் அவள் மறைந்தாள். அவளுடைய ஜோ, போலந்தில் மரணமடைந்தான் என்ற செய்தியும் விரைவில் வந்தது.

## லிடா

பாக்ஸாஸ் வீட்டுக்கு நான் முதன் முதலில் போனது ஒரு மாலையில். ஜோசே மட்டும்தான் வீட்டிற்குத் திரும்பியிருந்தாள். ஜீவகளை ததும்பிய கண்களால் துருதுருவென்று பார்த்த ஒரு சின்னஞ்சிறிய பாவையும் இருந்தாள். அவளை லிடா என்று கூப்பிட்டனர். என் மீசையை அவள் ஆச்சரியத்துடன் பார்த்து, தனக்கு மகிழ்ச்சியூட்ட ஏதோ சுவாரஸ்ய மானவர் வந்திருப்பதாக நினைத்து, அச்சிறுமி அகமகிழ்ந்தாள். நாங்கள் சிறிது நேரத்திற்குள் நண்பர்களானோம். அந்தச் சிறுமி சுமார் பத்தொன்பது வயதடைந்த மங்கை என்று தெரிந்த போது, எனக்கு ஆச்சரியமாக இருந்தது. அவள் ஜோ[illegible]ான் ஒன்றுவிட்ட சகோதரி. அவளுடைய குடும்பப் பெயர் பிளாச்சா (கூச்சப்படுபவள் என்று அர்த்தம்). ஆனால் அவளிடம் அந்த

குண விசேஷம் சிறிதும் இல்லை. அவளுக்கு அமெச்சூர் நாடகங்களில் நடிக்க நிரம்பப் பிரியம்.

நான் அவளுடைய நம்பிக்கைக்கு உரியவனானேன். நான் ஒரு வயோதிகனாகிவிட்டேன் என்று என்னை இது உணரும் படி செய்தது. அவள் தன் வாலிபக் கவலைகளையும், துயரங் களையும், கனவுகளையும் என்னிடம் மனம் விட்டுக் கூறினாள். அக்காளுடனோ அல்லது அக்காள் புருஷனுடனோ ஏதேனும் தகராறு ஏற்பட்டால், என் தீர்ப்பைக் கேட்க உடனே ஓடி வருவாள். அவள் இளம் பெண்களைப் போல முன்கோபி. வெகுகாலம் பிள்ளையில்லாமல் கடைசியாகப் பிறக்கும் குழந்தைகளைப் போல, அவள் அபரிமித செல்லத்தினால் வீணானவள். அங்கு ஆறு மாதம் வசித்த பிறகு ஒருநாள், முதல் தடவையாக அவள் என்னுடன் புறப்பட்டு வெளியே வந்தாள். நொண்டிக் கிழவன். தனியாகப் போகும்போது பலர் கண்ணில் படுகிறான். தன் மகளுடன் போகும்போது அதிகக் கவனத்தைக் கவர்வதில்லை. எதிரே வந்தவர்கள் அவளைப் பார்த்துச் சென்றார்களேயொழிய என்னை அல்ல. அதனால்தான், அவள், நான் வெளியே போகும் போதெல்லாம் என்னுடன் வந்தாள். அதனால்தான் அவள் என்னுடன் என் முதல் இரகசியக் கூட்டத்திற்கு வந்தாள். அதனால்தான் என்னுடைய முதல் இரகசிய இருப்பிடத்திற்கு தன் ஜாகையையும் மாற்றி னாள். இவ்விதம் அவள்—குற்றப் பத்திரிகை கூறுவதுபோல்—என்னுடைய இரகசியத் தபால்காரியாக ஆனாள்.

அவ்வேலையை அவள் எப்படிப்பட்டது என்று கவலைப் படாமல் சந்தோஷத்துடன் செய்தாள். அது புதிய விதமானது; சுவாரஸ்யமானது; எல்லோரும் செய்யாத ஒன்று; வீரச்செயல் புரியச் சந்தர்ப்பமளிப்பது; இதுதான் அவளுக்கு வேண்டியதா யிருந்தது.

லிடா வெகு விரைவாக வளர்ச்சியடைந்தாள். ஜிலினிக் வீட்டுக்குச் சிறு செய்திகளைக் கொண்டு போய்க் கொடுக்கும்

வேலையைவிட, பொறுப்புள்ள வேலைகளை ஏற்றுச் செய்யும் அளவுக்கு வளர்ந்துவிட்டாள். இதெல்லாம் எதற்கு என்று அவளுக்கு விளக்கிச் சொல்ல நேரம் வந்துவிட்டது. ஆகவே, நான் போதிக்க ஆரம்பித்தேன். அது ஒரு பள்ளி வகுப்புப் போலவே நடந்தது. அவள் ஆவலுடனும், சந்தோஷத்துடனும் விஷயங்களைத் தெரிந்து கொண்டாள். வெளிப் பார்வைக்கு அவள் முன்னைப் போலவே கவலையற்ற சந்தோஷமான சிறுமியாகவே தோன்றினாள். ஆனால் உள்ளுக்குள் நிரம்ப மாறிவிட்டாள். அவள் வளர்ந்தாள்; ஆழ்ந்து சிந்திக்கத் தொடங்கினாள்.

இந்த வேளையில், அவளுக்கு மிரேக்குடன் பரிச்சயம் ஏற்பட்டது. ஏற்கனவேயே அவன் நிறைய வேலை செய்திருந்தான். அதைப்பற்றி அவளிடம் சாமர்த்தியமாக அவனுக்குப் பேச முடிந்தது. அவளிடம் நல்ல பெயர் வாங்க முடிந்தது. அவனுடைய அடிப்படையான குண விசேஷங்களைத் தீர்மானிப்பதில், அவள் தவறி விட்டாள். அது அவள் குற்றம் மட்டுமல்ல; நானும் அவன் விஷயத்தில் அதே தவறைச் செய்திருந்தேன். முக்கியமான விஷயம் என்னவென்றால், அவனுடைய வேலையும், கொள்கை பேரில் அவன் காட்டிய உறுதியும், மற்ற வாலிபர்களைவிட அவன்பால் அவளை மிகவும் ஆகர்ஷித்தன.

லிடா உள்ளத்தில் காதல் முளைத்து ஆழமாக வேர் விட்டுத் தழைத்தது.

1942—ம் வருட ஆரம்பத்தில், தன்னைக் கட்சி அங்கத்தினராகச் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று, அவள் தயக்கத்துடன் கேட்கத் தொடங்கினாள். அதற்கு முன்பு, அப்படி அவள் தயங்கியதை ஒரு போதும் எந்த விஷயத்திலும் நான் பார்த்ததில்லை. அவள் அதுவரை எதையுமே மிகுந்த அக்கறையுடன் யோசிப்பதில்லை. நான் ஆலோசித்தேன். எனது போதனை வகுப்பைத் தொடர்ந்து நடத்தினேன். அவளை இன்னும் சோதிக்க நான் விரும்பினேன்.

1942, பிப்ரவரியில் மத்தியக் கமிட்டியே நேரடியாக ஓட்டளித்து, அவளைக் கட்சி அங்கத்தினராகச் சேர்த்தது. நாங்கள் பனிப்படலத்தின் இடையே இருட்டில் வீட்டுக்கு நடந்து வந்தோம். சாதாரணமாகக் கலகலவென்று பேசக் கூடிய அவள், அப்போது மௌனமாக நடந்தாள். வீட்டுக்கு அருகில் ஒரு திடலைத் தாண்டியபோது அவள் சட்டென்று நின்றாள். பனிப்படிகங்கள் தரையில் விழுவதைக் கூடக் காதில் கேட்கும் அளவுக்கு நிசப்தமாக இருந்த அந்தச் சமயத்தில், அவள் நிதானமாகச் சொன்னாள்.

"என் வாழ்நாளிலேயே இதுதான் மிகமிக முக்கியமான தினம். ஏனெனில், இனி நான் எனக்கே சொந்தமானவள் அல்ல. என்ன நேர்ந்தாலும் சரி. நான் ஒரு போதும் உங்களுக்கு ஏமாற்றத்தை அளிக்கமாட்டேன், இது சத்தியம்."

அதன் பிறகு எவ்வளவோ நிகழ்ந்தது. இவள் ஒரு போதும் எங்களுக்கு ஏமாற்றமளிக்கவில்லை.

எங்களுக்கும் மேலிடத் தலைமைக்கும் இடையே மிகவும் இரகசியமான தொடர்பை வைத்திருந்தவள் அவள்தான். அவள் மிகவும் அபாயகரமான சாதுர்யமான வேலைகளைச் செய்ய வேண்டியிருந்தது. தொடர்பு துண்டிக்கப்பட்டுத் தவித்த கோஷ்டிகளைச் சந்தித்து, தொடர்பு உண்டாக்க வேண்டி யிருந்தது. அபாயத்தில் அகப்படவிருந்த தோழர்களை, அவசர மாக ஓடி எச்சரிக்க வேண்டியிருந்தது. மேல் கமிட்டிக்கு ஏதாவது கஷ்டம் நேர்ந்தால், அல்லது எங்களுடைய இரகசிய இருப்பிடத்திற்கு ஆபத்து ஏற்பட்டால் உடனே லிடா, விலாங்கு மீனைப் போல் நழுவிச் சென்று எல்லாவற்றையும் சரிப்படுத் தினாள். சிறிய காரியங்களைச் செய்தது போலவே அவள் முக்கியமான காரியங்களையும் சந்தோஷத்துடன் மனத்தை அலட்டிக் கொள்ளாமல் இலேசாகக் கருதிச் செய்து முடித் தாள். ஆனால் முன்னைப் போலில்லாமல் இப்போது ஒரு உறுதியான பொறுப்பு உணர்ச்சி அவளுடைய உள்ளத்தில் குடி கொண்டிருந்தது.

நாங்கள் கைதாகி ஒரு மாதம் கழிந்த பிறகு, அவள் கைது செய்யப்பட்டாள். மிரேக் அவளுடைய பெயரைச் சொல்லி விட்டான். அவள் தன் அக்காளும் மச்சானும் தப்பித் தலை மறைவாகப் போக உதவி செய்தாள் என்பதை அவர்கள் பிறகு கண்டுபிடித்தனர். அவள் ஒரு பாவமும் அறியாத அபலை போல, முகத்தை வைத்துக் கொண்டாள். அவளைப் பார்த்து எவனும் சந்தேகிக்க முடியாது.

அவளுக்கு நிரம்ப விவரங்கள் தெரியும். ஆனால் ஒன்றை யும் சொல்லவில்லை. முக்கியமானது என்னவென்றால், சிறை யிலும் அவள் தன் வேலையை விடாமல் செய்தாள். அவளு டைய சுற்றுப்புறமும், முறைகளும் மாறின; வேலையும் வேறு விதமானது. ஆனால், அவள் கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்து விடவில்லை! அவளுடைய கட்சிக் கடமை மாறவில்லை. சீக்கிரத்தில் முடிக்க வேண்டிய வேலைகள் அவளுக்குக் கொடுக்கப்பட்டன. அவள் சரியாகவும் குறிப் பிட்ட நேரத்திலும் அவற்றைச் செய்து முடித்தாள். வெளியில் உள்ள ஒருவரைக் காப்பாற்றுவதற்கு ஒரு குழப்பமான நிலைமையை சரிப்படுத்த வேண்டும் என்றிருந்தால் உடனே அந்த வேலையை ஒன்று மறியாதவளைப் போல் விடா மேற் கொண்டாள். பான்கிராப்ட்ஸ் சிறைப் பெண்கள் வார்டில், அவள் அதிகாரிகளின் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஏவல் கைதியாக ஆனாள்; அவள் சாமர்த்தியமாக வெளியில் அனுப்பிய செய்திகளினால், நூற்றுக் கணக்கான பேர் காப்பாற்றப் பட்டனர். ஒரு வருடம் இப்படிக் கழிந்த பிறகு, 'அவளுடைய செய்தி' ஒன்று வழியில் கண்டு பிடிக்கப்பட்டது. அத்துடன் அவளுடைய இந்தத் 'தொழிலும்' ஒருவாறு முற்றுப் பெற்றது.

இப்போது, அவள் எங்களுடன் பெர்லினில் நடக்கும் வழக்கு விசாரணைக்கு வருகிறாள். எங்கள் கோஷ்டியில் சுதந்திர நாள் வரையில் தப்பிப் பிழைக்கச் சந்தர்ப்பம் பெற்றுள்ள நபர், அவள் ஒருத்திதான். அவளை இழந்து விடாதீர்கள். அவள் இன்னும் எவ்வளவோ படிக்க வேண்டி யிருக்கிறது. அவளுக்குப் போதனை அளியுங்கள். வளராமல்

தேங்கும்படி விட்டுவிடாதீர்கள். ஆனால் தற்பெருமை கொண்டு தலைக்கனமாகும் படியோ, அல்லது தான் செய்தது போதும் என்ற திருப்தி மனப்பான்மை உண்டா கவோ அனுமதிக்காதீர்கள். அவள் உலைக்களத்தில் புகுந்து வந்துவிட்டாள்; மிகவும் அபூர்வமானவள் என்று நி(௵)பித் திருக்கிறாள்.

## என் அதிகாரி

இவன் பாத்திரங்களில் ஒருவன் அல்ல; எனினும் சுவா ரஸ்யமானவன்; மற்றவரைவிடக் கவனிக்கத் தக்கவன்.

வினோஹார்டியில் பத்து வருஷடங்களுக்கு முன்பு புளோரா கபேயில் சிற்றுண்டி அருந்திவிட்டு மேஜையில் பணத்தால் தட்டி, "ஹெட்...வெயிட்டர், பில் எங்கே?" என்று கேட்க வாயெடுப்பதற்குள், ஒரு நெட்டையான ஒல்லிப் பேர்வழி உன் பக்கத்தில் வந்து நிற்பான். அவன் நாற்காலி களுக்கு இடையே துளிகூட சந்தடியில்லாமல் புகுந்து, நீர்ச்சிலந்தி போல நகர்ந்து உன் அருகே வெகு விரைவாக வந்து மேஜை மேல் பில்லை வைத்திருப்பான். மனிதனை அடித்துச் சாப்பிடும் மிருகத்தைப்போல், மிகமிக விரைவாகவும் சந்தடியில்லாமலும் நகரக்கூடிய ஆற்றல் அவனுக்கு இருந்தது. எதையும் பார்த்த கணமே உணரும் அம்மிருகங்களின் கண் களும் அவனுக்கு இருந்தன; நீ உனக்கு என்ன வேண்டும் என்றுகூட அவனுக்குச் சொல்ல வேண்டியதில்லை. அவன் மற்ற வேலைக்காரனிடம் உன்னைப் பார்த்தவுடனேயே, "மூன்றாவது மேஜைக்குப் பால் காபி" என்று உத்தரவிடுவான். அல்லது, "இடது ஜன்னல் புறமுள்ள மேஜைக்கு ஒரு காரமும் பீப்பில்ஸ் பேப்பரும்" என்று ஆர்டர் செய்வான். அவன் வாடிக்கையாளர்களுக்கு மிகவும் சிறந்த தலைமைச் சிப்பந்தியாகவும் மற்ற சிப்பந்திகளுக்கு மிகவும் நெருங்கிய நண்பனாகவும் விளங்கினான்.

அப்போது அவனை எனக்குத் தெரியாது. வெகுகாலத் துக்குப் பிறகு, பென்ஸிலுக்குப் பதில் ஒரு துப்பாக்கியைக்

கையில் பிடித்து, ஜிலினிக் வீட்டில் என் எதிரே குறிபார்த்து, "இவன் பேரில் எனக்கு என்னவோ நிரம்ப அக்கறை ஏற்படுகிறது" என்று சொன்னபோதுதான் அவனுடன் எனக்குப் பரிச்சயம் ஏற்பட்டது.

உண்மையைச் சொல்வதென்றால், அப்போதிருந்து நாங்கள் இருவருமே ஒருவர் பேரில் ஒருவர் அக்கறையுடையவர்களானோம்.

அவன் பிறவியிலேயே புத்திசாலி. மற்றவர்களிடம் இல்லாத ஒரு விசேஷம் என்னவென்றால், அவன் ஆட்களை புரிந்து கொண்டான். இந்தக் காரணத்தினால், அவன் கிரிமினல் போலீஸ் இலாகாவில் வெற்றிமேல் வெற்றி பெற்றுக் கீர்த்தி அடைந்திருக்கலாம். சிறிய கிரிமினல் குற்றவாளிகள், கொலைக்காரர்கள், சமுதாயத்தில் வேரில்லாதவர்கள், முதலியவர்கள் தங்களுடைய தோலைக் காப்பாற்றிக் கொள்ள மட்டுமே கவலைப்படுகிறார்கள். ஆதலால் அவனிடம் மனதைத் திறந்து விஷயம் முழுவதையும் சொல்லியிருப்பார்கள். ஆனால் அப்படிப்பட்ட சுயநலமிகள், அரசியல் போலீஸிடம் அதிகமாகச் சிக்குவதில்லை. இங்கே போலீஸார், தங்கள் கையில் சிக்கிய ஒருவனுடைய யுக்தியை மட்டும் போலீஸ் யுக்தியினால் சமாளிக்கவில்லை. அதைவிடப் பெரிய ஒரு சக்தியைச் சமாளிக்க வேண்டியிருக்கிறது. ஒரு உறுதியான கொள்கைப் பிடிப்பையும், தங்கள் வசப்பட்ட நபர் சேர்ந்திருக்கும் கோஷ்டியின் புத்திசாலித்தனத்தையும் எதிர்த்து அவர்கள் சமாளிக்க வேண்டியிருக்கிறது. தந்திரமும் அடி உதைகளும் கொள்கைப் பிடிப்பை உடைக்க முடியாது.

"என் அதிகாரியின் உள்ளத்தில் எந்த ஒரு கொள்கையின் பேரிலும் உறுதியான பற்றுக் கிடையாது. அது வேறு சிலரிடம் இருக்கலாம். அதுவும்கூட வஞ்சகத்துடனோ, அறிவுடனோ, நபர்களைப் பற்றிய விஷய ஞானத்துடனோ கூடியதாக இருக்காது. முட்டாள் தனத்துடன் கூடியதாகவே இருக்கிறது. இப்படிப்பட்ட 'கொள்கைப் பிடிப்புடன்' இருக்கும்போது, அவர்கள் இதுவரை பொதுவாக வெற்றி அடைந்து இருக்கிறார்

கள் என்றால், அதற்குக் காரணம் முந்திய தலைமறைவுப் போராட்ட காலங்களைவிட மிகவும் கஷ்டமான நிலைமை களில், மிகவும் குறுகிய இடத்தில், போராட்டம் நீண்ட காலம் நடப்பதேயாகும். ரஷ்ய போல்ஷ்விக்குகள் சொல்வார்கள். தலைமறைவு ஊழியர்களில் மிகவும் சிறந்த ஒருவன் இரண்டு ஆண்டுகள் வரை அகப்படாமல் தப்பலாம் என்று... மாஸ்கோ வில் நிலைமை கடுமையானால் அவர்கள் பெட்ரோகிராடுக்கு ஓடிவிடலாம், பெட்ரோகிராடிலிருந்து ஒடெஸ்ஸாவுக்குத் தப்பலாம், இப்படியாக அவர்களை யாருமே அறியாத பெரிய நகரத்தில், லக்ஷக்கணக்கான நகரவாசிகளிடையில் மறைந்து விடலாம். இங்கே அப்படி இல்லை. இங்கே இருப்பது எல்லாம் ஒரே ஒரு பிரேக் நகரம்தான். சுற்றிச் சுற்றிப் பார்த்தாலும் பிரேக் ஒன்றுதான். இந்தப் பிரேக்கில் உன்னைப் பாதிப் பேருக்கு மேல் தெரியும். எதிரி ஏஜெண்ட்களில் பெரும் பாலோர் இங்கேயே குவிந்து கிடக்கிறார்கள். இப்படி இருந்த போதிலும், இங்கேயே நாங்கள் வருடக்கணக்கில் தாக்குப் பிடித்துச் சமாளித்து இருக்கிறோம். கெஸ்டோபோவுக்கு டிமிக்கி கொடுத்து, ஐந்து வருஷடங்களுக்கு மேல் இங்கேயே வேலை செய்திருக்கும் தோழர்களும் இருக்கிறார்கள். இதற்குக் காரணம் நாங்கள் அநேக விஷயங்களைக் கற்றுக் கொண்டது தான்! அதோடுகூட, விரோதி பலசாலியாகவும் கொடுமைக் காரனாகவும் இருந்த போதிலும் அவன் அழிவு வேலையைத் தவிர வேறு ஒன்றையும் கற்றுக் கொள்ளாததுமாகும்.

கம்யூனிஸ்ட் ஒழிப்பு இலாகாவில் முக்கியமான அதிகாரி கள் பிரடரிக், ஜாண்டர், ஜோஸப்பொஹ்ம் ஆகிய மூவரு மாவர். கம்யூனிஸத்தை ஈவிரக்கமின்றிக் கருவறுப்பவர்கள் என்று பாராட்டப்படுபவர்கள் இவர்கள். உள்நாட்டு விரோதி களுக்கு எதிரான யுத்தத்தில், தைரியத்திற்காகப் பல பதக்கங் களைப் பெற்றிருப்பவர்கள். இவர்களில் மூன்றாவது நபர்தான் 'என் அதிகாரி.'

இவர்களுக்கு, ஹிட்லருடைய தேசீய சோஷலிசத்தைப் பற்றி அக்கறையில்லை. அதை அதிகமாகத் தெரிந்திருக்க

வில்லை. ஏனெனில், இவர்கள் போராட்டத்தில் ஒரு அரசியல் தத்துவத்திற்காகக் கலக்கவில்லை. தங்களுடைய சொந்த நன்மைக்காகவே கலந்திருக்கிறார்கள். ஒவ்வொருவனும் தத்தம் சொந்த வழியில் நடக்கிறான்.

ஜாண்டர்—மண்டை பெருத்த அற்பமான குள்ளன். போலீஸ் முறைகளைப்பற்றி மற்றவர்களைவிட இவனுக்கு அதிகம் தெரியும். ஆனால், இவன் கவனமெல்லாம் பெரும் பாலும் பணத்தின் பேரில்தான். பிரேக்கிலிருந்து இவன் பெர்லி னுக்கு மாற்றப்பட்டான். ஆனால் ஏதேதோ செய்து பிரேக் குக்கே திரும்பி வந்துவிட்டான். ஏனெனில், ஜெர்மன் தலை நகரத்தில் உத்தியோகம் பார்ப்பது இவனுக்குப் பிடிக்கவில்லை. அங்கு, மேல் வருமானத்தைத் தியாகம் செய்ய வேண்டி யிருந்தது,. பெர்லினில் இருப்பதைவிட, இருண்ட ஆப்பரிக்கக் காலனியிலோ அல்லது பிரேக் போன்ற அடிமை நாட்டுத் தலைநகரிலோ காலனிய அதிகாரியாக இருப்பவன் சக்தி வாய்ந்தவனாக இருப்பதோடல்லாமல், தன் பாங்குக் கணக்கை விருத்தி செய்து கொள்ள நிரம்ப வசதியும் பெற்றிருக்கிறான். ஜாண்டர் சுறுசுறுப்பானவன். எவ்வளவு கஷ்டப்பட்டு உழைக் கிறான் என்பதை மற்றவர்கள் பார்க்க வேண்டும் என்பதற்காக இவன் சாப்பாட்டு வேளையிலேயே விசாரணை நடத்தப் பிரியப்படுகிறான். உத்தியோகத்துக்குச் சம்பந்தமில்லாத பல நலன்கள் அவனுக்கு இருப்பதாக மற்றவர்கள் பொருட்படுத்தா மல் இருக்க வேண்டும் என்பதற்காக அவன் தன் உத்தியோக காரியங்களைத் திறமையுடன் செய்து, தன் யோக்யதையை நிரூபிக்க வேண்டியிருந்தது. இவன் கையில் சிக்குபவன் நிலை பரிதாபத்துக்கு உரியது. அதுவும் அவன் பாங்கியில் பணம் போட்டிருப்பவனாக இருந்துவிட்டால், இருமடங்கு பரிதாபத் துக்கு உரியவனாவான். அவன் சிறிது நேரத்திற்கெல்லாம் செத்து மடிவான். ஏனெனில் பாங்குப் பணமும் செக்யூரிட்டி களும் தான் ஜாண்டரின் ஆசைக்கனவு. இப்படிப் பணம் பறிக்கும் கலையில், ஜெர்மன் அதிகாரிகளிடையே மிகுந்த ஆற்றல் உள்ளவன் இவன் தான் என்பது பொதுவான அபிப் பிராயம். இவனுடைய செக் 'அஸிஸ்டென்ட்' ஸ்மோலா,

இருவருக்கும் இந்தக் கலையில் ஒரே ஒரு சிறிய வித்தியாசம் தான் உண்டு. அதாவது, ஸ்மோலா திருடர்களில் கண்ணிய மான திருடன்; உன் பணம் கிடைத்துவிட்டால், ஸ்மோலா உன் உயிரை வாங்கிவிட மாட்டான்.

பிரடரிக் நெட்டை; ஒல்லி; குரூரக் கண்கள்; கெட்ட சிரிப்பு. இதுதான் இவனுடைய லக்ஷணம். செக்கோஸ் லோவே கியா குடியரசில், பல ஜெர்மன் கம்யூனிஸ்ட்கள் தஞ்சம் புகுந்தார்கள் அல்லவா? அவர்களைப் பிடித்து ஜெர்மனிக்கு அனுப்பும் பொருட்டு 1937ல் செக்கோஸ் லோவேகியாவுக்கு வந்தான், இந்த பிரடரிக். இவனுக்கு ஆசை பிணங்களின் பேரில்? யாரையும் இவன் தன் வாயினால் நிரபராதி என்று சொல்வதே இல்லை. இவன் ஆபீஸில் நுழைந்துவிட்டால், ஒவ்வொருவனும் குற்றவாளியே. பெண்களிடம், அவர்களு டைய புருஷர்கள் மந்தைச் சிறையில் மடிந்தனர் என்றோ, அல்லது தூக்கிலிடப்பட்டனர் என்றோ கூறுவதில் இவனுக்கு அபாரப் பிரியம். தன் மேசையிலிருந்து ஏழு டப்பாக்களை இவன் எடுத்து எதிரே உள்ளவர்களிடம் திறந்து காட்டுவான். அவற்றில் சாம்பலும் எலும்புத் துண்டும் இருக்கும். பிறகு சொல்வான்:

"அந்த ஏழுபேரையும் நான் என் சொந்தக் கையால் அடித்தே கொன்றேன், நீ எட்டாவது ஆளாகப் போகிறாய்."

இப்போது தன் மேஜையில் இவன் வைத்திருக்கும் டப்பாக்கள் எட்டு. ஒன்று அதிகம். ஏனெனில், ஜான்ஷிக் காவை இவன் அடித்துக் கொன்றான்.

பல்வேறு வழக்குகளின் பேப்பர்களைப் பைலில் விரலால் புரட்டிக் கொண்டே, "அவ்வளவுதான். எல்லாம் தீர்க்கப்பட்டு விட்டன. வழக்கு முடிந்தது" என்று திருப்பிச் சொல்வதும் இவனுக்குக் குஷியாக இருக்கிறது.

ஆனால் மற்றவர்களைவிடப் பெண்களைச் சித்திரவதை செய்வதில்தான் அவனுக்கு அலாதியான பிரியம்.

அலங்கார அணிபொருள்கள், சுகபோக சௌகரிய பண்டங்கள் பேரில் இவனுக்குள்ள மோகம், இவனுடைய

போலீஸ் காரியங்களுக்கு உதவிகரமாக இருக்கின்றன. நன்கு அலங்கரிக்கப்பட்ட ஒரு வீடு, அல்லது வெற்றிகரமாக நடக்கும் ஒரு வியாபாரம் உன்னிடமிருந்தால், அது இவன் கையில் உன் மரணத்தை விரைவுபடுத்தும், அவ்வளவுதான்.

இவனுடைய செக் 'அஸிஸ்டெண்ட்' பெயர் நெர்ஜர். உயரத்தில் பிரடரிக்குடைய கழுத்துக்குத்தான் வருவான். இது ஒன்றுதான் இருவருக்குமிடையே உள்ள வித்தியாசம்.

'என் அதிகாரி' ஜோசப்பொஹ்ம்—பணத்தின் பேரிலோ பிணத்தின் பேரிலோ இவனுக்கு அலாதியான ஆசை இல்லா விட்டாலும், இவன் கொன்றவர்களின் எண்ணிக்கை மற்ற இருவருடைய பட்டியல் கணக்குக்குக் குறைந்ததல்ல. கீர்த்தியும் செல்வாக்கும் உள்ள ஒருவனாக விளங்க வேண்டுமென்பதே இவனுடைய ஆசை. இதற்காக, 'வீரசாகசங்'களைச் செய்யப் பிரியப்படும் ஆசாமிகளைச் சேர்ந்தவன் இவன். அதோடு, பழைய கெஸ்டோபோ ஆளுமாவான். நெப்போலியன் அறை யில் ஹிட்லர் மிகவும் இரகசியமாகப் பெரானைச் சந்தித்த போதெல்லாம், இவன் அவ்விடத்தில் வேலை பார்த்தான். பெரான் ஹிட்லரிடம் சொல்லத் தவறிய விஷயங்களை, இவன்தான் ஹிட்லரிடம் கூறினான். இப்படி ஹிட்லரிடம் பழகக் கிடைத்த சந்தர்ப்பங்களை விட, பெரிய வாய்ப்பு பிறகு கிடைத்தது. அதுதான் மக்களை வேட்டையாடும் படி உத்தர விடுவதற்கு, அவர்களுடைய வாழ்வையும் சாவையும் நிச்சயிக்கும் கடவுளாக இருப்பதற்கு, முழுக் குடும்பங்களையும் கொல்லும்படி கட்டளை பிறப்பிப்பதற்குக் கிடைத்த வாய்ப்பு. இந்த வாய்ப்புடன் முந்தியதை ஒப்பிடவே முடியாது!

இவன் மனம் திருப்தியடைவதற்கு எப்போதுமே குடும்பம் பூராவும் மடிய வேண்டும் என்பதில்லை. ஆனால், இவன் மற்றவர்களை மிஞ்சவேண்டுமென்று நினைத்தான். இதற்காக, முழுக் குடும்பங்களையும் கொல்வதைவிடப் படுமோசமான—கொடூரமான காரியங்களைச் செய்தான்.

தூண்டிவிடும் உளவாளிகளை, இவன் எங்கும் சிருஷ்டித் திருந்தான். ஏராளமான நாய்கள் புடைசூழ வேட்டையாடும்

வேடனாக ஆனான். வேட்டையும் ஆடினான். வேட்டை யாடுவதில் உள்ள குஷிக்காகவே, பல தடவை இவன் வேட்டைக்குப் புறப்பட்டான். விசாரணை செய்வது இவனுக்கு அலுப்பாக இருந்தது. ஆட்களைப் பிடிப்பதும், தன் தீர்ப்புக்காக அவர்கள் கைகட்டிக் காத்திருப்பதைப் பார்ப்பதுமே, இவனுக்கு முக்கியமான மன ஆறுதலை அளித்தது. ஒரு சமயம் இவன் பிரேக் நகரில் இருநூறு டிராம் கண்டக்டர்களையும், மோட்டார்களையும், பல பட டிரைவர்களுடன் சேர்த்துத் திடீரென்று கைது செய்தான். எல்லோரையும் ஆட்டுமந்தை போல் நடுத்தெருவில் ஓட்டி வந்தான். போக்குவரத்துக்களை நிற்கும்படி செய்தான். எங்கும் பீதியைப் பரப்பினான். அதில் இவனுக்குப் பரமானந்தம்! பிறகு நூற்றைம்பது பேரை விடுதலை செய்தான். நூற்றைம்பது குடும்பங்கள், என்னைக் 'காருண்யவான்' என்று பேசிக் கொள்ளும் என்று சொல்லித் திருப்தியடைந்தான்.

இவன் கையில் பிடிபடும் வழக்குகள், சாதாரணமாக முக்கியமானவை அல்ல ஆனால் சிக்கலானவை. நான் மட்டுமே இதற்கு விதிவிலக்கு. காரணம், நான் தற்செயலாகவே இவனிடம் சிக்கினேன்.

'என் வழக்குகளில் உன்னுடையதுதான் மிகவும் பெரிது முக்கியமானது' என்று இவன் அடிக்கடி என்னிடம் மனப் பூர்வமாகச் சொல்வான். தன் வழக்குகளில் ஒன்று, மிகவும் முக்கியமானவையில் ஒன்று என்பதைப் பற்றி இவனுக்கு நிரம்பப் பெருமை, இந்தப் பெருமை, என் ஆயுளைச் சில நாட்கள் நீடித்திருக்கக் கூடும்.

நாங்கள் இருவரும் எப்போதுமே ஒருவரிடம் ஒருவர் பொய்யையே சொன்னோம். ஆனால் ஒரு வித்தியாசம். இவன் பேசுவதில் எது பொய் என்று எனக்கு எப்போதுமே சுலப மாகத் தெரிந்துவிடும். இவனுக்கு என் பொய் பல தடவை தெரியாது. ஒரு பொய் அம்பலமாகிவிட்டால், அதை மீண்டும் நாங்கள் இருவருமே கிளப்புவதில்லை. ஒருவரையொருவர் புரிந்துகொண்டு ஒரு உடன்பாட்டுக்கு வந்திருப்பது போல வேறு விஷயத்துக்குச் செல்வோம். உண்மையைக் கண்டு

பிடிப்பதைவிட தன் முக்கியமான பெரிய வழக்கைத் தூய்மை கெடாமல் வைத்திருப்பதிலேயே இவனுக்கு ஆவல் என்று எதனாலோ நான் நினைக்கிறேன்.

விசாரணையின்போது இவன் உபயோகித்த ஆயுதங்கள் தடியும், எஃகுக் கம்பியும் மட்டுமேயல்ல. ஆளுக்குத் தக்கபடி, இவன் மிரட்டுவதைவிடச் சாதுர்யமாகப் பேசி, தன் வழிக்கு ஆளைத் திருப்ப விரும்பினான். முதல் இரவில் மட்டுமே என்னைச் சித்திரவதை செய்தான். அதன் பிறகு ஒரு சமயத் திலும் சித்திரவதை செய்யவில்லை. ஆனால் அவசியமென்று கருதியதனால், என்னை வேறு ஒருவனிடம் ஒப்படைத்தான்.

இவன் மற்றவர்களைவிடச் சுவாரஸ்யமான பேர்வழி என்ப தில் சந்தேகமில்லை. சிக்கலானவனும்கூட. ஏனெனில் மற்றவர் களிடம் இல்லாத கற்பனாசக்தி இவனிடம் இருந்தது. அதோடு மட்டுமல்லாமல், அதை எப்படி உபயோகிப்பது என்பதும் இவனுக்குத் தெரிந்திருந்தது. அடிக்கடி நாங்கள் இருவரும் ஒரு கற்பனையில் ஈடுபடுவோம். பிரானிக் என்ற இடத்தில், ஒரு பீர்தோட்டத்தில், இருவரும் உட்கார்ந்திருக்கிறோம். நாலா புறமும் ஜனங்கள் போவதையும் வருவதையும் பார்க்கிறோம்.

அந்த ஜனங்களைப் பற்றி இவன் சிறிது நேரம் யோசிக்கிறான்:

"பார்த்தாயா? உன்னை நாங்கள் கைது செய்தோம். அதனால் இந்த ஜனங்களிடம் ஏதாவது மாறுதல் ஏற்பட்டி ருக்கிறதா? ஒன்றுமே இல்லை; முன்னைப் போலவே அவர்கள் போகிறார்கள்; வருகிறார்கள்; புன்னகை புரிகிறார்கள்; தம் அன்றாடக் கஷ்டங்களைப் பற்றிக் கவலைப்படுகிறார்கள். நீ ஒரு போதும் அவர்களிடையில் இருந்து வேலை செய்யாது போல, உலகம் நடக்கிறது. அவர்களில் சிலர், நிச்சயமாக உன் பழைய வாசகர்கள். உன்னைப் பற்றிய கவலையினால் அவர் களில் யாருடைய முகத்திலாவது ஒரு சுருக்கம் அதிகமாகி யிருக்கிறது என்று நினைக்கிறாயா?"

சில சமயம் நாள் முழுவதும் விசாரணை நடந்த பிறகு அவன் என்னைத் தன் காரில் ஏற்றிக் கொள்வான். கோட்டை வழியாக நெரூடாத் தெருவரை அழைத்துப் போவான். பிறகு சொல்வான்:

"நீ பிரேக்கை நேசிக்கிறாய் என்பது எனக்குத் தெரியும். பார் அதோ! இதனிடம் திரும்பி வந்து வாழ உனக்கு விருப்பமே இல்லையா? பிரேக் எவ்வளவு அழகாக இருக்கிறது! நீ ஒழிந்த பிறகும் அழகாகவே இருக்கும்!"

பேய், ஆசை காட்டி மோசம் பண்ணும். அதன் வேலையைத்தான் இப்போது என்னிடம் இவன் காட்டுகிறான். கோடைக்கால அந்திப் பொழுது, பிரேக்கை அழகில் குளிப் பாட்டிற்று; பனித் திவலைகள் இலேசாக விழுந்தன. பழுத்துக் குலுங்கும் திராட்க்ஷை தோட்டம் போல, ஒரே நீல நிறமாக வானமும் பனிப்படலமும் தோன்றின. திராக்ஷையைப் போலவே மனதைக் கவர்ந்து போதையை உண்டு பண்ணிற்று இந்த அழகு. பூமியின் விளிம்பு வரையில் பார்வையைச் செலுத்த என் மனம் துடித்தது... ஆனால் இவனை இடை மறித்து நான் சொன்னேன்!

".... நீங்கள் எல்லோரும் ஒழிந்த பிறகு, பிரேக் இன்னும் அதிக அழகாக இருக்கும்!"

இவன் சுருக்கமாக—கேவலமாக அல்ல; வருத்தமாக—சிரித்தான். பிறகு சொன்னான்.

"நீ ஒரு குதர்க்கப் பேர்வழி."

அந்த மாலை நேர சம்பாஷணையை இவன் அடிக்கடி நினைவூட்டுவான்.

"நாங்கள் எல்லோரும் ஒழிந்த பிறகு... அப்படியானால் நீ இன்னும் எங்கள் வெற்றியை நம்பவில்லையா?"

இவன் ஏன் இப்படிக் கேட்டான் என்றால், இவனுக்கே அது நிச்சயமாகவில்லை. நான் சோவியத் யூனியனின் பலத்தையும் வெல்லற்கரிய சக்தியையும் வர்ணித்தபோது இவன் மிகவும் கவனமாகச் செவி சாய்த்துக் கேட்டான். அது என் கடைசி 'விசாரணை'களில் ஒன்று.

## ‘பெல்ட்’களின் இடைக் காட்சி

எதிர் அறையின் வெளிச்சுவரில் கதவுக்கு அருகே பெல்ட்டும், வேறு சில பொருள்களும் தொங்குகின்றன. அவை பாமரர்களுடையவை. நான் ஒரு போதும் விரும்பாத பொருள் கள் அவை. ஆனால் இப்போது எங்கள் அறையின் கதவு திறக்கப்படும் போதெல்லாம், நான் அவற்றை ஆவலுடன் உற்று நோக்குகிறேன்—அவை சிறிது நம்பிக்கையை அளிக்கின்றன.

உன்னைக் கைது செய்கிறபோது, அவர்கள் உன்னை பிரக்ஞையற்று விழும் வரையில் அல்லது சாகும் வரையில் கூட அடிஅடியென்று அடிக்கலாம். ஆனால் அதற்கு முன்பு, நீ தற்கொலை செய்து கொள்ளாமல் தடுக்கும் பொருட்டு, முன்னெச்சரிக்கையாக உன்னுடைய நெக் டை, பெல்ட் அல்லது ‘சஸ்பெண்டர்’ ஆகியவற்றை எடுத்துப் பத்திரப்படுத்து கிறார்கள். சாவை விளைவிக்கக் கூடிய இந்த அபாயகரமான ஆயுதங்களை, நீ வேறு ஒரு இடத்திற்கு, அல்லது கடினவேலை முகாமுக்கு, அல்லது தூக்குமேடைக்கு அனுப்பப்படுவாய் என்று கெஸ்டாபோ கோர்ட் தீர்மானிக்கும் வரையில் சிறைக் காரியாலயத்தில் பத்திரமாக வைத்திருக்கிறார்கள். உன்னை அனுப்புவது என்று கெஸ்டாபோ கோர்ட் தீர்மானித்தவுடன், உன்னை உத்தியோக சம்பிரதாயங்களுடன் அழைத்து அவற்றை உன்னிடம் திருப்பிக் கொடுப்பார்கள். ஆனால் அவற்றை நீ உன் அறைக்குள் எடுத்துப் போகக் கூடாது. அறைக்கு வெளியிலுள்ள சுவரில் தொங்கவிட்டுவிட வேண்டும். நீ வண்டியில் ஏறிப் பிரயாணத்தைத் தொடங்கும் வரை அவை அங்கேயே தொங்கும். அவற்றைப் பார்த்தவுடன் அந்த அறையில் யாரோ ஒருவர் கட்டாயப் பிரயாணத்துக்கு ஆயத்தமாகிறார் என்பது எல்லோருக்கும் தெரிந்துவிடும்.

எதிர் அறைக்கு வெளியில் தொங்குகின்ற ‘சஸ்பெண்டர்’ முதலியவை, குஸ்தினாவுக்கு நேர்ந்திருந்த கதியைப் பற்றி நான் கேள்விப்பட்ட தினத்தன்றே தோன்றிற்று. அவள் போகப் போகிற அதே வண்டியில், எதிர் அறையிலுள்ள நண்பனும்

கடின வேலை முகாமுக்குப் போகப் போகிறான். அந்தக் கோஷ்டி இன்னும் புறப்படவில்லை. பிரயாணம் திடீரென்று தள்ளிப் போடப்பட்டது. இதற்குக் காரணம், அக்கோஷ்டி போகவிருந்த முகாம் விமானக் குண்டு வீச்சினால் நாசமாகி விட்டதென்று அவர்கள் சொல்கிறார்கள். (இது இன்னொரு சந்தோஷ கரமான செய்தி) எப்போது அவர்கள் புறப்படுவார் கள் என்பது யாருக்கும் தெரியாது. இன்று மாலையிலோ அல்ல நாளைக்கோ, அல்லது ஒரு வாரம் கழிந்த பிறகோ, அல்லது இரண்டு வாரங்களுக்குப் பிறகோ. இந்த 'சஸ்பெண்டர்' இன்னும் எதிரே தொங்குகிறது. குஸ்தினா, இன்னும் இங்கேயே பிரேக்கில் இருக்கிறாள். அவை அவளுக்கு உதவுகிற மனிதர்கள் என்று நினைத்தேனோ என்னவோ; அவற்றை அன்புடனும் சந்தோஷத்துடனும் உற்று நோக்குகிறேன். அவை அவளுக்கு ஒரு நாள், இரண்டு நாள் அல்லது மூன்று நாள் அவகாசத்தைப் பெற்றுக் கொடுக்கின்றன... இந்தச் சில நாட்களில் என்ன நேரும் என்று யாருக்குத் தெரியும்? ஒருவேளை இந்த நாட் களில் ஒன்று அவளுக்கு விமோசனமளிக்கலாம் அல்லவா?

இப்படித்தான் இங்கு நாங்கள் வாழ்கிறோம். சென்ற வருடம், சென்ற மாதம், நேற்று, நாளை நம்பிக்கைக்கு இருப் பிடமான 'நாளை'யின் பேரில் எங்கள் கவனம் சதா திரும்பு கிறது. உன் விதி தீர்மானிக்கப்பட்டுவிட்டது. நாளைக்கு மறுநாள் நீ சுட்டுக் கொல்லப்படலாம்! பரவாயில்லை! நாளை வரையில் உயிருடன் வாழ்! அது எல்லாவற்றையும் மாற்றினா லும் மாற்றும்! நிலவரம் நிலையற்றிருப்பதனால், நாளைக்கு என்ன நேரும் என்பது யாருக்குத் தெரியும்? 'நாளைகள்' கழிகின்றன; ஆயிரக்கணக்கான பேர் மடிகிறார்கள்; அவர் களுக்கு நாளை என்பது இனி இல்லை. ஆனால் உயிருடன் இருப்பவர்கள் இந்தக் குன்றாத நம்பிக்கையுடன்—நாளைக்கு என்ன நடக்கும் என்று யாருக்குத் தெரியும்? — வாழ்வை நீடிக்கிறார்கள்.

இப்படிப்பட்ட மனோநிலையில், மிகமிக அபத்தமான வதந்திகள் கிளம்புகின்றன. யுத்தம் முடிவுறுவதைப் பற்றி

ஒவ்வொரு வாரமும் ஒரு வசீகரமான கதை பவனி வரும். ஒவ்வொருவரும் புன்னகை செய்து அதை மற்றவரின் காதில் ஓதுவர். ஏதாவது ஒரு புதிய ஆச்சர்யமான சந்தோஷச் செய்தியை ஒவ்வொரு வாரமும் பான்கிராப்ட்ஸ் குசுகுசு வென்று பேசுகிறது. அதை உடனே எல்லோரும் நம்புகிறார்கள். அப்படிப்பட்ட செய்திகளை நம்பாமலிருக்க, நீ சிரமத்துடன் முயற்சிக்கிறாய். வீண் நம்பிக்கைகளை அடக்கப் பிரயத்தனம் செய்கிறாய். ஏனெனில், வீண் நம்பிக்கை ஒருவனுடைய மனோதிடத்தை வலுப்படுத்துவதற்குப் பதில் இறுதியில் பார்க்கப் போனால் பலஹீனப்படுத்துகிறது. வெற்றி மனப் பான்மை—வெற்றி விரைகிறதென்ற நம்பிக்கை, பொய்களைக் கொண்டு வளர்க்கப்படக்கூடாது. வளர்க்கவும் முடியாது. யுத்தம் எந்த ஒரு குறிப்பிட்ட விதத்தில் முடியப் போகிறதோ, அந்த நிலைமையைத் தெளிவாகப் பார்க்கிற உண்மையைக் கொண்டே அது வளர்க்கப்பட வேண்டும். உண்மையின் பேரில் ஒருவனுக்குள்ள அடிப்படையான பற்று அவனது உள்ளத் திலேயே இருக்கிறது. ஒருநாள் அவகாசம், விதியை நிச்சயிக்கக் கூடியதாக இருக்கும். உனக்குக் கிடைத்திருக்கும் அந்த ஒருநாள் அவகாசம் நீ விட்டுப் பிரிய மறுக்கும் உயிருக்கும், உன்னை மிரட்டுகிற சாவுக்குமிடையே உள்ள எல்லைக் கோட்டை அளிக்கக் கூடிய நாளாகவும் இருக்கலாம்— இந்த நம்பிக்கையும் மனதில் புதைந்திருக்கக் கூடியதே.

மனித வாழ்க்கையில் அநேக நாட்கள் இருக்கவில்லை எனினும், நீ அந்த நாட்களை வெகுவிரைவாக, இன்னும் வேகமாக, முடிந்த அளவு வேகமாகக் கழிக்க விரும்புகிறாய். விரையும் நேரம் நிற்காத நேரம்— ஒருவனுடைய இரத்தத்தைப் பிழிந்து வாழ்வைக் குறுக்கும் நேரமிங்கே ஒருவனுக்கு மிகவும் உற்ற நண்பனாக இருக்கிறது. என்ன விநோதம்!

நாளை நேற்றாகி விட்டது, நாளை மறுநாள் இன்றாகி யிருக்கிறது. பிறகு அதுவும் கழிகிறது. 'சஸ்பெண்டர்' முதலி யவை, இன்னும் எதிர் அறை வெளிச்சுவரில் தொங்குகின்றன.

அத்தியாயம் ஆறு:

## இராணுவச் சட்டம், 1942

## மே 27, 1943

*சரியாக ஓராண்டிற்கு முன்.*

*இன்னொரு சித்திரவதைக்குப் பிறகு, அவர்கள் என்னைச் 'சினிமா'வுக்கு அழைத்துப் போனார்கள். அது தினசரி நாங்கள் போய்வரும் பாதை, சிறையிலிருந்து அவர்கள் கொண்டு வந்திருந்த உணவை உட்கொள்ள 400-ம் நம்பரிலிருந்து கீழ் மாடிக்கும், பிறகு கீழேயிருந்து நான்காவது மாடிவரையிலும் அழைத்துச் சென்றார்கள். ஆனால் அன்றைய தினம் அவர்கள் எங்களை மத்தியானத்துக்குப் பிறகு மேலே அழைத்துப் போகவில்லை.*

*நீ உட்கார்ந்து சாப்பிடுகிறாய். பெஞ்சுகள் முழுவதும் கைதிகள். ஸ்பூனும் கையுமாக சுறுசுறுப்புடன் மெல்லுகிறார் கள். அது பார்ப்பதற்கு அநேகமாக மனிதத் தோற்றமாகவே இருந்தது. நாளை பிணமாகப் போகும் நாங்கள் எல்லோரும் திடீரென்று எலும்புக் கூடுகளாக மாறினால், மண்சட்டியில் மோதுகிற ஸ்பூன்களின் ஓசை. எலும்புகளில் உராயும் ஓசையா கவும், தாடையின் தட்டல் சப்தமாகவும் மாறும், இந்த நிலைமையை யாரும் எண்ணிப் பார்க்கவில்லை. சந்தேகங் கூடப் படவில்லை. ஒவ்வொருவரும் இன்னுமொரு வாரம், ஒரு மாதம் அல்லது பல வருடங்கள் கூட வாழ வேண்டு மென்பதற்காக, உடலுக்குள் எதையோ திணித்துக் கொண்டி ருந்தோம்.*

*ஒரு தடவை சுற்றுமுற்றும் பார்த்தவுடனே எவனும் சொல்லக்கூடும் நல்ல சீதோஷ்ண நிலைமை. பிறகு இருந்தாற் போலிருந்து, திடீரென்று ஒரு விநோதமான காற்று எங்கள் பேரில் அடித்தது. அது மனதை வாட்டும் அளவுக்கு*

நிசப்தமாக இருந்தது. காவல்காரர்களின் முகத் தோற்றத்தைக் கொண்டு மட்டுமே, ஏதோ அசாதாரணமான சம்பவம் நிகழ்ந் திருப்பதாகச் சொல்ல முடிந்தது. இதற்கு ஆதாரம் என்ன வென்றால், அவர்கள் எங்களை வெளியே அழைத்துச் சென்று, வரிசையாக நிற்க வைத்து, பான்கிராப்ட்ஸ் சிறைக்கு வண்டியில் ஏற்றி அனுப்பினார்கள். மத்தியான நேரத்தில், பான்கிராப்ட்ஸுக்குத் திரும்புவது என்றால்! அப்படி ஒரு போதும் இதற்கு முன்பு நடந்ததில்லை. சித்திரவதை எதுவும் இல்லாமல் அரைநாள், கேள்விகளுக்குப் பதில் தெரியாமல் அவதிப் பட்டு நாங்கள் களைத்துவிட்டோம். இது ஏதோ வரப் பிரஸாதம்போல் தோன்றுகிறது. ஆனால் இது அது அல்ல.

வராந்தாவில் ஜெனரல் எலியாஷ் எதிர்ப்படுகிறார். (ரட்சணை ஆட்சியின்போது பிரதம மந்திரியாக இருந்தவர்; பிற்பாடு தூக்கிலிடப்பட்டவர்) அவருடைய கண்களில் ஒரே படபடப்பு. என்னை அவர் பார்த்தவுடன், காவலாளிகளுக்குப் பக்கமாக நகர்ந்து வந்து மெதுவாகக் காதோரத்தில் சொல்கிறார்:

“இராணுவச் சட்டம்! ஊரெங்கும்!”

என் ஊமைக் கேள்விகளுக்குப் பதில் கூற, அவருக்குச் சந்தர்ப்பமில்லை. கைதிகளுக்குத் தங்களுக்குள் மிக மிக முக்கியமான செய்திகளைச் சொல்லிக் கொள்வதற்குக் கிடைக்கும் நேரம், விநாடியிலும் குறைவானதாகும்.

பெட்செக் கட்டிடத்திலிருந்து நாங்கள் வழக்கத்துக்கு மாறாக நிரம்ப நேரம் முன்னதாக வந்துவிட்டதைப் பார்க்க பான்கிராப்ட்ஸ் காவலாளிகளுக்கு ஆச்சரியமாக இருந்தது. என்னை அறைக்கு நடத்திச் சென்ற காவலாளியிடம், “இராணுவச் சட்டமாம்—வாஸ்தவமா?” என்று கேட்டேன். என்னவோ, அவன் பேரில் எனக்கு அப்படி நான் கேட்டதைச் சொல்ல நம்பிக்கை ஏற்பட்டது. அவன் யார் என்று எனக்குத் தெரியாது. ஆனால் அவன் சாதாரணமாகத் தலையை ஆட்டினான். இராணுவச் சட்டத்தைப் பற்றி அவனுக்கு ஒன்றும் தெரியாது—அல்லது ஒருவேளை அவன் என் கேள்வி

யைக் கவனிக்காமல் இருந்திருக்கக்கூடும். கவனித்திருந்தால்... இல்லை... கவனிக்கவில்லை. ஆமாம், இது ஏன் கேட்டோம் என்ற கவலையைத் தணிக்கிறது. எனினும் அன்று மாலை அவன் திரும்பி வந்தான். அறைக்குள் எட்டிப் பார்த்தான்.

"நீ சொன்னது சரிதான். ஹைட்ரிச்சைச் சுட்டுக் கொல்ல ஒரு முயற்சி நடந்தது. அவருக்குக் கடுமையான காயம். பிரேக்கில் இராணுவச் சட்டம்."

மறுநாள் அவர்கள் எங்களை வராந்தாவில் வரிசையாக நிற்க வைத்தனர். இன்னொரு 'விசாரணை'க்கு அழைத்துப் போவ தற்காகத்தான். அப்போது எங்களிடையில் தோழர் விக்டர் சைனிக் நிற்கிறார். இவர்தான் கட்சியின் மத்தியக் கமிட்டி அங்கத்தினர்களில் உயிருடன் இருந்த கடைசி நபர். 1941, பிப்ரவரியில் கைது செய்யப்பட்டவர். நெட்டைப் பனைமரம் போன்ற ஒரு எஸ்.எஸ். படை அதிகாரி அவருடைய கண்ணுக்கு எதிரே ஒரு துண்டு வெள்ளைக் காகிதத்தை ஆட்டுகிறான். அந்தக் காகிதத்தில் 'விடுதலை உத்திரவு' என்று பெரிய எழுத்துக்களில் அச்சிட்டிருப்பது எல்லோருக்கும் தெரிந்தது. அவன் குரூரமாகச் சிரித்தவாறு சொல்கிறான்.

"ஏ யூதப் பயலே! இதைப் பாரடா; இந்த உத்திரவு வரும் வரையில் தப்பிப் பிழைத்துவிட்டாய்! பாரடா, உன் விடுதலை உத்திரவு; உன்..." இத்துடன் வார்த்தையை நிறுத்தி, கை ஜாடையில் விரல்களைக் கழுத்தைச் சுற்றிக் கொண்டு வந்து விக்டருடைய தலை உருளும் என்று சொல்கிறான். 1941-ம் வருட இராணுவச் சட்டத்தின் போது முதலில் கொல்லப் பட்டவர் ஆட்டோ சைனிக் ஆவர். 1942ம் வருட இராணுவச் சட்டத்தின்போது முதலில் கொல்லப்படுபவர். அவருடைய சகோதரரான விக்டர் சைனிக், தலையைச் சீவ அவர்கள் கூறுவது போல் 'அறுவடை'க்காக—விக்டரை அவர்கள் மாதேஸனுக்குத் தள்ளிப் போகிறார்கள்.

பான்கிராப்ட்ஸிலிருந்து பெட்செக் கட்டிடத்துக்குப் போகும்போதும், அங்கிருந்து வரும்போதும், பஸ்களில் தினசரி எஸ்.எஸ். படையினர் ஹைட்ரிச் கொலைக்காக, கைதிகள்

மீது வஞ்சம் தீர்க்கிறார்கள். அந்தப் பாதை முழுவதும், ஆயிரக் கணக்கான கைதிகளுக்கு இரும்பு முள்பாதையாக இப்போது ஆகிவிட்டது. பஸ் அரை மைல் தூரம் போவதற்குள், துப்பாக்கிக் கட்டைகளால் குத்தப்பட்டு, டஜன் கணக்கான கைதிகளின் முகத்திலிருந்தும், வாயிலிருந்தும் இரத்தம் கொட்டு கிறது. என்கூடப் பஸ்ஸில் வருபவர்களுக்கு அவ்வளவு கஷ்ட மில்லை. ஏனெனில், என் மீசை அநேக தமாஷ் விளையாட்டு களுக்கு ஏற்ற சாதனமாக விளங்குகிறது. என் மீசையுடன் விளையாடுவதால், எஸ்.எஸ். படையினருக்கு மற்றவர்களை அடிக்க அதிக நேரம் கிடைப்பதில்லை. பஸ் நொடியில் குலுங்கினால், எஸ்.எஸ். முரடன் காரின் வாரைப் பிடிப்பது போல என் மீசையைப் பிடித்துத் தொங்குகிறான். இது அவர் களுடைய பொழுது போக்குக் காரியங்களில் ஒன்று. இது நான் படவிருந்த வதைக்கு முன் கூட்டியே நடக்கும் நல்ல தயாரிப்பு விசாரணை வதை. அரசியல் நிலைமைக்குத் தகுந்தபடி மாறினாலும், எப்போதுமே கீழ்க்கண்டபடி முடிவுற்றது!

"நாளைக்குள் வழிக்கு வராவிட்டால் நாளையே உன்னைச் சுட்டுக் கொன்றுவிடுவோம்."

இந்தக் கூற்றில் இப்போதெல்லாம் எவ்விதப் பயங்கரமும் இருப்பதாகத் தோன்றவில்லை. ஒவ்வொரு நாள் சாயந்திரமும் அவர்கள் வராந்தாவில் நின்று பெயர்களைக் கூப்பிடுவதை நீ கேட்கிறாய். ஒரு நொடி நேரத்திற்குள் ஐம்பது, நூறு, இருநூறு கைதிகள் கையும் காலும் கட்டுப்பட்டு, மோட்டார் காரில் கிடத்தப்பட்டு, கசாப்புக் கடையின் அறுவை இடத்திற்குப் போகும் ஆடு மாடுகளைப் போல ஒரேயடியாகக் கொல்லப் படுவதற்காக, கோபிலிஸி என்ற இடத்திற்கு அனுப்பப்படுவர். அவர்களின் பேரில் சாட்டப்பட்ட குற்றம் என்ன? முதலாவதாக, அவர்கள்மீது ஒரு குற்றமும் நிரூபிக்கப்பட வில்லை. அவர்கள் கைது செய்யப்பட்டனர். எந்தப் பெரிய வழக்கிலும் அவர்கள் சம்பந்தப்பட்டிருப்பதாகத் தெரிய வில்லை; மேற்கொண்டு விசாரிக்க அவர்கள் தேவைப்பட வில்லை; ஆகவே அவர்கள் கொலைப்பீடத்தில் உபயோகப்

படுத்தப்படலாம். ஹைடிரிச் கொலைக்கு இரண்டு மாதங் களுக்கு முன்பு ஒரு தோழர் ஒரு சிலேடையான கவிதையை ஒன்பது பேருக்கு முன்னிலையில் வாசித்துக் காட்டினார். இதற்காக அவர்கள் எல்லோருமே அப்போது கைது செய்யப் பட்டனர். இப்போது அவர்கள் சாவு அறைகளில், 'கொலையை ஆமோதித்த' குற்றத்திற்காக அடைபட்டிருக்கிறார்கள். சட்ட விரோதமான துண்டுப் பிரசுரங்களை விநியோகித்தாள் என்ற சந்தேகத்தின் பேரில் ஆறு மாதங்களுக்கு முன்பு ஒரு ஸ்திரீ கைது செய்யப்பட்டாள். அவள் ஒரு போதும் அதை ஒப்புக் கொள்ளவில்லை. அவர்களிடமும் ஒரு ஆதாரங்கூட இல்லை. இருந்தபோதிலும், அவர்கள் அவளுடைய சகோதரர்களையும், சகோதரிகளையும், சகோதரர்களின் மனைவிகளையும், சகோதரிகளின் கணவன்மார்களையும் கைது செய்து இப்போது எல்லோரையும் சேர்த்துக் கொல்லப் போகிறார்கள். ஏனெனில், சந்தேகாஸ்பதமான பேர்வழிகளின் குடும்பங்கள் முழுவதையும் கருவறுப்பது தான் இந்த ராணுவச் சட்டத்தின் லட்க்ஷியம். ஒரு தபால்காரன் தவறுதலாகக் கைது செய்யப்பட்டான். தன்னை விடுதலை செய்துவிடுவார்கள் என்று நினைத்து வராந்தாவில் நிற்கிறான், உடனே கொலைப்பீடத்திற்கு அனுப்பப்படுகிறவர்களின் வரிசையில் தள்ளப்படுகிறான். அவனையும் வண்டியில் ஏற்றிச் சென்று சுட்டுக்கொல்கிறார்கள். மறுநாள் தான் அது ஒரு தவறு என்று அவர்கள் கண்டுபிடிக் கிறார்கள். தபால்காரனுக்குப் பதில், அதே பெயருடைய வேறு ஒருவன் சுட்டுக் கொல்லப்படவிருந்தான். ஆகவே அவர்கள் அந்த மற்றவனையும் சுட்டுச் சாகடிக்கிறார்கள். இப்போது தவறு திருந்தி எல்லாம் சரியாகிவிட்டன. அவர்கள் சுட்டுக் கொல்லும் நபர்கள் எல்லோரும் தண்டிக்கப்பட்டவர்கள்தானா என்பதை நிச்சயிக்க, யாருக்கு அவகாசம் எடுத்துக் கொள்ள முடியும்? அப்படிச் சரி பார்ப்பதில்தான் என்ன பயன்? அவர்களுடைய லட்சியம் தேசம் முழுவதையும் கொன்று விடுவதென்று இருக்கும்போது?

அன்று இரவு 'விசாரணை'யை முடித்துத் திரும்பிவர வெகுநேரமாகிவிட்டது. சுவருக்குப் பக்கத்தில், ஆற்றல் மிக்க

செக் நாவலாசிரியர்களில் ஒருவரான விலாடிமிர் வான்சூரா நிற்கிறார். அவருடைய காலடியில் அவருடைய சாமான்கள் அடங்கிய சிறு மூட்டை கிடக்கிறது. அதற்கு என்ன அர்த்தம் என்பது எனக்குத் தெரியும், அவருக்குத் தெரியும். நாங்கள் ஒரு நொடி நேரம் கையைப் பிடித்துக் கொள்கிறோம். தொலை தூரத்தை, நம் உயிர்களுக்கு அப்பாலுள்ள வெகு நேரத்தைக் கண்களால் உற்றுநோக்கிக் கொண்டு தலையைச் சிறிது தாழ்த்தினாற்போல் அவர் நின்று கொண்டிருப்பதை, மாடி வராந்தாவிலிருந்து நான் பார்க்கிறேன். அரை மணிக்குப் பிறகு, அவருடைய பெயரை அவர்கள் கூப்பிட்டார்கள்....

சில நாட்களுக்குப் பிறகு அதே சுவருக்குப் பக்கத்தில் மிலொஷ் கிராஸ்னி நிற்கிறார். இவர் தைரியம் மிகுந்த புரட்சி வீரர். சென்ற வருடம் அக்டோபரில் கைது செய்யப்பட்டார். சித்திரவதையினாலோ அல்லது தனிமைக் கொடுமையினாலோ உள்ளம் உடைந்து தளரவில்லை. சுவருக்கு அப்பால் சிறிது முகத்தைத் திருப்பி, பக்கத்தில் நிற்கும் காவல்காரனிடம் எதையோ விளக்கிக் கொண்டிருக்கிறார்கள். என்னைச் சட்டென்று பார்க்கிறார், உடனே புன்னகை செய்கிறார். விடை பெற்றுக் கொள்ளும் பாவனையில் தலை வணங்குகிறார். பிறகு காவல்காரனிடம் பேச்சைத் தொடருகிறார்.

“இது உங்களுக்கு உதவவே உதவாது. இன்னும் எங்களில் அநேகர் மடியப் போகிறோம், ஆனால் இறுதியில் நீங்கள் முறியடிக்கப்படுவீர்....”

பிறகு மீண்டும் ஒருநாள் மத்தியானம் பெட்செக் கட்டிடத்தில், கீழ்த்தரையில் சாப்பாட்டுக்காகக் காத்து நிற்கிறோம். அவர்கள் ஜெனரல் எலியாஷைக் கொண்டு வருகிறார்கள். அவர், தன் கட்கத்தில் ஒரு பத்திரிகையை வைத்திருக்கிறார். அவர் அதைச் சுட்டிக்காட்டிப் புன்னகை செய்கிறார். ஏனெனில், (அவர் கடந்த எட்டு மாதமாகச் சிறையில் இருந்த போதிலும்) அவருக்கும் ஹைட்ரிச் கொலைக்கும் சம்பந்தமிருப்பதாக அவர்கள் நிரூபித்திருக்கும் செய்தியை இப்போது தான் அவர் படித்திருந்தார்.

"அபத்தம்!" என்றார் அவர். உடனே உணவை உட் கொள்ளத் தொடங்கினார்.

பான்கிராப்ட்ஸுக்கு எங்களுடன் அன்று மாலை திரும்பியபோது, அதைப் பற்றிப் பரிகாசமாக அவர் பேசினார். ஆனால் ஒரு மணி நேரம் கழிந்த பிறகு, அவர்கள் அவரை அறையிலிருந்து கிளப்பி, கோபிலிஸுக்கு வண்டியில் கிடத்தி அனுப்புகிறார்கள்.

பிணங்கள் மலைபோல் குவிகின்றன. அவர்கள் அவற்றை இப்போதெல்லாம் பத்துக் கணக்கிலோ, நூற்றுக்கணக்கிலோ எண்ணுவதில்லை. ஆயிரக்கணக்கில் எண்ணுகிறார்கள். புதிய இரத்தத்தின் வாசனை, மிருகங்களின் மூக்கைத் துளைக்கின்றது. அவர்கள் இரவு வெகு நேரம் வரையிலும், ஞாயிற்றுக் கிழமை களிலும்கூட ஓய்வில்லாமல் 'உழைக்கிறார்கள்.' இப்போது அவர்கள் எல்லோருமே எஸ்.எஸ். உடுப்பு அணிந்திருக் கிறார்கள். இது அவர்களுடைய திருவிழா, நரபலி விழா. அவர்கள் தொழிலாளிகளை, உபாத்தியாயர்களை, உழவர் களை, எழுத்தாளர்களை, அதிகாரிகளை—எல்லோரையுமே கொல்லுகிறார்கள். ஆண்களை, பெண்களை, குழந்தைகளைச் சாகடிக்கிறார்கள். முழுக் குடும்பங்களையும் வெட்டிச் சாய்க் கிறார்கள். முழுக்கிராமங்களையும் வேரோடு அழித்து, எரித்துச் சாம்பலாக்குகிறார்கள். தோட்டாச்சாவு பிளேக் நோயைப் போல நாட்டில் எங்கும் பரவி வித்தியாசம் எதுவும் பாராட்டாமல், எல்லோரையும் அணைத்துக் கொள்கிறது.

ஆனால் இந்தப் பயங்கரத்திலேயும், ஜனங்கள் இன்னும் வாழ்கிறார்கள்.

இது நம்ப முடியாததுதான்; ஆனால் உண்மை. ஜனங்கள் இன்னும் வாழ்கிறார்கள்; உண்கிறார்கள்; உறங்குகிறார்கள்; அன்பு செலுத்துகிறார்கள்; உழைக்கிறார்கள்; சாவுடன் சம்பந்தப்படாத ஆயிரத்தெட்டு விஷயங்களைப் பற்றிச் சிந்திக் கிறார்கள். அவர்களுடைய மனதை, பயங்கர உணர்ச்சி அழுத்து கின்றது. ஆனால் அதை அவர்கள் பொறுத்துக்கொள்கிறார்கள். அவர்கள் தலைவணங்கவில்லை; அடி பணியவுமில்லை.

இராணுவச் சட்டம் அமுல் நடக்கும்போதே ஒரு நாள் 'என் அதிகாரி' என்னைப் பிரானிக்கிற்கு அழைத்துப் போனான். பலவிதமான மலர்கள் பூத்துக் குலுங்க ஜூன் மாதம் மிகவும் பொலிவுடன் ரம்மியமாக இருந்தது. அது ஒரு ஞாயிற்றுக்கிழமை. மாலை நேரம். எதிரே ஞாயிறு விடு முறையை உல்லாசமாகக் கழித்துவிட்டு ஏராளமானவர்கள் வீடு திரும்பிக் கொண்டிருந்தனர். அவர்கள் சூரியனின் வெத வெதப்பிலும், நீரிலும், காதலரின் கரங்களிலும் நாள் முழு வதையும் கழித்து, களிப்புடன் களைத்துப் போய் திரும்பினரா தலால் சிரித்து விளையாடிக் கொண்டு வந்தனர். சாவு மட்டுமே, அவர்களுடைய முகங்களில் தென்படவில்லை; அது அவர்களிடையில் நடமாடிய போதிலும், அது சமயம் வாய்க்கும்போது அவர்களில் ஒருவரைக் குறிபார்த்து அம்பு எய்தபோது, அதைப்பற்றி அவர்கள் நினைப்பதாகத் தோன்ற வில்லை. அவர்கள் முயல்களைப் போல துள்ளிக் குதிக்கிறார் கள். அவற்றைப் போலவே மிரண்டு திகைக்கின்றனர். முயல் களைப்போல அவகைளிடையில் போ; ஒன்றை உன் சாப்பாட் டுக்குப் பிடித்துக் கொள். அவை ஒரு விநாடி மிரண்டு மூலை யில் ஒதுங்கிப் பதுங்குகின்றன. ஆனால் சிறிது நேரத்திற்குள், அவை தம் இன்பங்களுடனும் கவலைகளுடனும் வெளியில் வந்து வாழ்க்கையின் இன்பத்தை நுகரச் சுற்றித் திரிகின்றன.

இருந்தாற்போலிருந்து, நான் சுவருக்குள் அடைபட்ட சிறை வாழ்க்கையை விட்டு, களிப்புடன் கரைபுரளும் இந்த மனித வெள்ளத்தின் நடுவே நீந்துகிறேன். இதன் முதல் இன்பச்சுவை எனக்குக் கசப்பாக இருந்தது. எனினும் நான் கசந்திருக்கக் கூடாது.

இங்கு நான் பார்ப்பது வாழ்வு; நான் தற்போது விட்டு வந்திருப்பது வாழ்வுதான். எவ்வளவுதான் பலமாக நசுக்கப் பட்டாலும், வாழ்வு அழிக்க முடியாதது. ஒரு இடத்தில் அது நசுக்கப்படலாம். ஆனால் நூறு இடங்களில் அது வெடிக்கிறது. அது வாழ்வு. சாவைவிட உறுதியாக நிலைக்கிறது. அது கசக்க வேண்டுமா?

மேலும், சிறை அறைகளில் வசிக்கும் நாங்கள்— பயங்கரத்தின் நடுவில் வாழும் நாங்கள்—தேசத்தின் ஏனையோரை விட, சிறப்பான விசேஷ அச்சில் வார்க்கப்பட்டவர்களா?

எப்போதாவது சில சமயம் நான் என் ‘விசாரணை’க்கு ஒரு போலீஸ் காரில் சென்றேன். அதில் காவல்காரன் நல்ல முறையில் நடந்து கொண்டான். ஜன்னல் வழியாகத் தெருவை, கடைகளை, மலர்க்கூடைகளை, நடமாடும் கூட்டத்தை, பெண்களை என்னால் பார்க்க முடிந்தது. என்றைக்கு ஒன்பது ஜோடி அழகிய கால்களை எனக்கு எண்ண முடிகிறதோ, அன்றைக்கு நான் கொல்லப்பட மாட்டேன் என்று ஒரு சமயம் நான் எனக்குள் கூறிக் கொண்டேன். பிறகு நான் அவற்றைத் தேட ஆரம்பித்தேன். அவற்றின் ரேகைகளைக் கவனமாக ஒப்பிட்டேன். அழகியதாகப் பொறுக்கினேன். வெறுப்படைந்து அவற்றை உதறித்தள்ளினேன்— அப்போது என் வாழ்க்கை, அதைப் பொறுத்திருக்கிறதென்பது என் கவனத்தில் இல்லை! வெறும் ரேகைகள் தான் கவனத்தில் நின்றன!

அவர்கள் வழக்கமாக என்னை வெகுநேரம் கழித்தே அறைக்குத் திருப்பி அழைத்து வந்தனர். ஒவ்வொரு நாளும் நான் வரும் வரையில், ‘வருவேனோ வரமாட்டேனோ’ என்று கவலைப்பட்டுக் கொண்டிருப்பார் அப்பா. போஷக் என்னைக் கண்டதும் கட்டி அணைத்துக் கொள்வார். நான் கேள்விப் பட்ட விஷயங்களை அவருக்குச் சொல்வேன். முந்திய நாள், கோபிலிஸியில் கொல்லப்பட்டவர்கள் யார் யார் என்பதையும் தெரிவிப்பேன். பிறகு வற்றல் குழம்புச் சாப்பாட்டை மூக்கைப் பிடித்துக் கொண்டே பசியின் கொடுமையினால் ஒருவாறு புசிப்போம். மகிழ்ச்சிகரமாக ஒரு பாட்டுப் பாடுவோம். அல்லது கோபமாகவோ, துயரமாகவோ இருந்தால், பதினைந்தாம் புள்ளி விளையாடுவோம். அந்த ஆட்டம் எங்கள் கவனத்தைச் சிறிது நேரம் கவர்ந்திருக்கும். எந்த விநாடியிலும் கதவு திறக்கப்பட்டு, எங்களில் ஒருவரைச் சாவின் குரல் கூப்பிடும் என்று எதிர்பார்த்திருந்த நிலைமையில், இப்படித் தான் மாலை நேரத்தைக் கழித்தோம்.

*சாவின் குரல் எந்த விநாடியும் கூப்பிடக்கூடும்; "ஏய் நீ, அல்லது நீ புறப்படு. சாமான்களை மூட்டை கட்டிக்கொள். ஜல்தி!"*

*ஆனால் எங்கள் இருவரில் ஒருவரையும் அந்தக் காலத்தில் அது கூப்பிடவே இல்லை. அந்தப் பயங்கரக் காலம் எங்களை உயிருடன் விட்டுக் கடந்தது. இப்போது அதைப் பற்றி நினைத்தால் எங்களுக்கே ஆச்சரியமாக இருக்கிறது. ஜனங்கள் எவ்வளவு விநோதமாக ஆக்கப்பட்டிருக்கிறார்கள்? சகிக்க முடியாததை எங்களால் சகிக்க முடியும்! எனினும், அத்தகைய கொடூர காலம் தன் ஆழமான சுவடுகளை எங்கள் வாழ்க்கையில் விட்டுச் செல்வதைத் தவிர்க்க முடியாது. சினிமாப் பிலிமில் பதியும் காட்சிகளைப்போல், நாங்கள் கண்டவை எங்களுடைய மூளையில் பதிந்திருக்கின்றன. அவை சில காலம் கழித்து நிஜவாழ்க்கையில்—அவ்வளவு காலம் நாங்கள் வாழ்ந்தால்—பயித்தியத்தின் உருவத்தில் வெளிப்பட லாம்; அல்லது, ஒருவேளை மகத்தான கல்லறைகளில் அரை படலாம்; அல்லது மிகவும் அபூர்வமான மனித விதைகளி லிருந்து முளைத்துத் தழைக்கும் பசுமையான தோட்டங்களின் உருவத்தில் காட்சியளிக்கக் கூடும்.*

*மிகவும் அபூர்வமான மனித விதை, ஒருநாள் அது முளைவிட்டு வாழ்வு பெறும்.*

---

அத்தியாயம் ஏழு:

## குணை விசேஷங்களும் துணுக்குகளும்-2

---

*சிறையில் இருவித வாழ்க்கைகள் உண்டு. ஒன்று அறை களில் பூட்டப்பட்டு, உலகத்திலிருந்து பிரிக்கப்பட்டு, தனிமை யில் வைக்கப்பட்டிருக்கிறது. எனினும், அரசியல் கைதிகளைப் பொறுத்தவரையில், அது உலகத்துடன் மிகவும் நெருங்கிய உறவு கொண்டுள்ளது. உலகத்துடன் இணைத்துப் பிணைந் துள்ளது. மற்றது— அறைகளுக்கு வெளியே, நீண்ட தாழ்வாரத்*

தில், ஒரே உடுப்பணிந்து இயங்கும் காவலாளிகளின் வாழ்க்கை. இது அறைகளில் உள்ளதைவிட அதிகமாகத் தனிமைப் பட்டிருக்கிறது. இந்த வாழ்க்கையைப் பற்றித்தான் இப்போது விவரிக்க விரும்புகிறேன்.

அதற்கு அங்க அடையாளங்கள் உண்டு. ஒரு சரித்திர ம்ம் உண்டு. இவையில்லாவிட்டால், நாடக மேடையின் மு புறச் காட்சி மட்டுமே எங்களுக்குத் தெரிந்திருக்கும். அறைவாசி ளை நிரந்தரப் பளுவைப் போல நசுக்கும். அதனுடைய கடினயான —தளராத—புறப்பரப்பை மட்டுமே அறிந்து கொண்டிருப் போம். அப்படித்தான் ஒரு வருடத்திற்கு முன்பு, ஆறு மாதங் களுக்கு முன்பு கூட அது தோன்றிற்று. ஆனால் இப்போது, புறப்பரப்பில் பல ஓட்டைகள்—உள்ளேயுள்ள ஆனால் ததும்பும் முகங்களையும், கவலை தோய்ந்த முகங்களையும் எட்டிப் பார்க்கப் போதுமான அளவுக்கு விரிந்துள்ள ஓட்டை கள்—வெடித்து இருக்கின்றன என்பது எனக்குத் தெரியும். முகங்கள் பல ரகமானவை. ஆனால் ஒவ்வொன்றும் ஒவ்வொரு மனிதப் பிறவிக்குச் சொந்தம். இந்த இருண்ட உலகத்தைச் சேர்ந்த ஒவ்வொருவரையும், பாப மூட்டையைப் போல் அந்த ஆட்சியின் பளு அமுக்குகிறது. இதனால் அவனிடம் ஏதாவது மனித உணர்ச்சிகள் இருந்தால், அவை வெளியாகின்றன. அதிக மாக அல்ல; நிரம்பக் குறைவாகத்தான், சிலரிடம் மட்டுமே மற்றவர்களைவிடக் கொஞ்சம் அதிகமான மனிதாபிமானம் காணப்படுகிறது. ஒவ்வொருவரிடமும் அது எந்த அளவுக்கு இருக்கிறது என்பதுதான் அவர்களிடையில் வித்தியாசங்களை உண்டு பண்ணி, வெவ்வேறு ரகமாக அவர்களைப் புரிந்து கொள்ள உதவுகிறது. இங்கு ஒரு சில முழு மனிதர்களைக்கூடக் காண்கிறோம். ஆனால் மற்றவர்களுக்கு உதவி செய்ய அந்த ஒரு சிலருக்கு இந்த ஆட்சியின் பயங்கர வற்புறுத்தல் தேவை யில்லை.

மகிழ்ச்சி நடமாடும் இடமல்ல சிறை. ஆனால் அறைகளில் இருப்பதைவிட, அவற்றிற்கு எதிரேயுள்ள உலகம் இருண்டதாக இருக்கிறது. அறைகளில் நட்பு குடி கொண்டுள்ளது— எத்தகைய நட்பு அது! அந்த மாதிரி நட்பை, போர்க்களத்தில்

நீண்டகால அபாயத்தின் நடுவே, என் உயிர் இன்று உன் கையிலும்; நாளை உன் உயிர் என் கையிலும் இருக்கும் படியான ஒரு நிலைமையில் நீ காண்கிறாய். இந்த ஆட்சியின் காவலாளிகளிடையில் உள்ள நட்பை, உமி அளவு என்பதா அல்லது அதிலும் குறைவானது என்பதா புரியவில்லை. அவர் களிடையில் அது இல்லை, இருக்கவும் முடியாது. அவர் களுடைய சுற்றுப் புறச் சூழ்நிலையே அலாதி. அவர்கள் ஒருவரையொருவர் உளவறிவதால், எப்போதுமே அந்த நினைப்பிலேயே நடமாடுகிறார்கள். அவர்கள் ஒருவரை ஒருவர் ஏமாற்ற முயல்கிறார்கள் உத்தியோக முறையில் யார் யாரை அவர்கள் 'தோழர்களே!' என்று அழைக்கிறார்களோ, அவர் களில் சிறந்தவர்கள்—நட்பு இல்லாமல் வாழ முடியாமல் தவிப்பவர்கள்—அறைகளில் நட்பை ஏற்படுத்திக் கொள் கின்றனர்.

வெகுநாட்கள் வரையில் எங்கள் பெயர் அவர்களுக்குத் தெரியாது. அவர்கள் பெயர் எங்களுக்குத் தெரியாது. இது ஒரு பிரமாதம் அல்ல; ஏனெனில், நாங்கள் அவர்களுக்குச் சில பரிகாசப் பெயர்களை யோசித்து வைத்தோம். சில பெயர்களை நாங்களே கொடுத்தோம். மற்றவை எங்களுக்கு முன் இங்கு வாழ்ந்தவர்கள் கொடுத்திருந்தனர். அவர்களில் சிலர் வெவ்வேறு அறையில் வெவ்வேறு பரிகாசப் பெயர் களால் அழைக்கப்பட்டனர். அவர்கள்தான் இரண்டும் கெட்ட பேர்வழிகள்; மீனுமல்லாமல் கோழியுமல்லாமல் இருப்பவர்கள்; ஒரு அறையில் சிறிது 'எக்ஸ்ட்ரா' உணவு தருபவர்கள்; இன் னொரு அறையில் உள்ளதுக்கே மோசம் செய்து முகத்திலடிப்ப வர்கள். கைதிகளுடன் நேரடியாக அவர்களுக்குச் சில விநாடி களில் மட்டுமே தொடர்பு ஏற்பட்டாலும், அந்தச் சில விநாடி களில் அவர்கள் நடந்து கொள்கிற முறைதான், அவர்களைப் பற்றி நிரந்தரமான ஒருதலை அபிப்பிராயங்களை உண்டு பண்ணுகிறது. அந்த அபிப்பிராயந்தான், கேலிப் பெயர்களைக் கண்டு பிடிக்கத் தூண்டுகிறது; சில சமயம் ஒரே ஆளுக்கு எல்லா அறைகளும் ஒரே பெயரைக் கண்டுபிடிக்கின்றன. அந்த 'பாக்கியம்' பெற்றவர்கள் நல்லதோ கெட்டதோ, மற்றவர்களை

விடப் பிடிவாதமான குணங்களையும் பாவனைகளையும், நடத்தையையும் உடையவர்கள்.

இந்த நபர்களைச் சற்று கவனிப்போம். இந்தச் சின்னஞ் சிறிய உருவங்களை உற்றுப் பாருங்கள்! இவர்கள் ஏதோ தற் செயலாக சேகரிக்கப்பட்டவர்கள் அல்ல. இவர்கள் எல்லோ ரும் நாஜிஸத்தின் அரசியல் இராணுவத்தினுடைய ஒரு பகுதி; இவர்கள் வெகு கவனமாகப் பொறுக்கி எடுக்கப்பட்டிருக் கிறார்கள். இந்த ஆட்சியின் தூண்கள்; அவர்களுடைய சமுதாயத்தைத் தாங்கி நிற்கும் முட்டுக்கால்கள்.

## "முதலுதவி ஆசாமி"

பெயர் ரீயஸ்—நெட்டையன்! தடியன், எஸ்.எஸ். படையில் 'ரிசர்வ்' ஞங்ஞா மிங்ஞா குரல். ரைன் பிரதேசத்தில், கோலோன் நகரில் பள்ளிக்கூடம் ஒன்றில் வாயில் காப்போன். ஜெர்மன் பள்ளிக்கூடக் காவலாளிகள் எல்லோரையும் போல, இவனும் முதல் உதவிப் பயிற்சி பெற்றிருந்தான். அடிக்கடி சிறை வைத்தியனுக்குப் பதில் இவன்தான் அனுப்பப்பட்டான். இந்த இடத்தில் நான் முதல் முதலில் சந்தித்த ஆசாமி இவன்தான். என்னை இவன் அறைக்குள் பரபரவென்று இழுத்துப் போனான். படுக்கையில் கிடத்தினான். என் காயங்களுக்கு மருந்து போட்டான். வீக்கத்தை வடிய வைக்க முதல் பற்றுக்களைப் போட்டான். என் உயிரைக் காப்பாற்ற வாஸ்தவத்திலேயே இவன் உதவியிருக்கக் கூடும்; இது எதைக் குறிக்கிறது? இவனுடைய மனிதாபிமானத்தையா அல்லது முதல் உதவிப் பயிற்சியையா? எனக்குத் தெரியாது. ஆனால் இவன் யூதக் கைதிகளின் பல்லை உடைத்த போது, அல்லது அவர்களுக்கு இவன் சர்வரோக சஞ்சீவியாகக் கருதும் சாதாரண உப்பையும் மணலையும் மருந்தாகக் கொடுத்த போது, நிச்சயமாக இவன் நாஜிஸத்தின் சொரூபத்தையே வெளிப்படுத்தினான்.

## "ஸ்மார்டி"

ஜெஸ்கா புட்ஜோவிட்டு என்னுமிடத்திலிருந்து வந்திருக்கும் ஒரு டிரைவர் இவன். சளசளவென்று பேசிக் கொண்டே இருப்பவன். இளகிய மனது. எங்களுக்குச் சோறு கொண்டு வந்தபோது, பல்லை இளித்தவாறே அறையில் நுழைவான். ஒரு போதும் இவனால் எங்களுக்குத் தொந்தரவு இல்லை. ஒரு அற்ப விஷயத்தைத் தன் எஜமானவர்களிடம் ஓடிப் போய்த் தெரிவிப்பதற்காக, இவன் மணிக்கணக்கில் அறைக்கு வெளியில், கதவில் காதை வைத்து ஒட்டுக் கேட்டுக் கொண்டு நிற்பான் என்பதை நீங்கள் நம்பமாட்டீர்கள்.

## "கோக்லர்"

இவனும் அதே ஊரிலிருந்து வந்திருக்கும் ஒரு தொழிலாளி தான். இங்கு, சுடேடன் பிரதேசத்திலிருந்து இவனைப் போல் வந்திருக்கும் ஜெர்மன் தொழிலாளிகள் ஏராளமாக இருக்கிறார்கள். காரல்மார்க்ஸ் ஓர் இடத்தில் சொல்கிறார், "தொழிலாளி தனிப்பட்ட முறையில் என்ன நினைக்கிறான்; என்ன செய்கிறான் என்பது அல்ல முக்கியம். ஒரு தனி வர்க்கம் என்ற முறையில், தன்னுடைய சரித்திரப் பூர்வமான காரியத்தை நிறை வேற்றத் தொழிலாளிகள் என்ன செய்ய வேண்டுமென்பது தான் முக்கியம்." இங்கு நாம் கவனிக்கிற ஆசாமிகளுக்கு, தங்களுடைய வர்க்கக் கடமையைப் பற்றி இம்மி கூடத் தெரியாது. தங்களுடைய வர்க்கத்தை விட்டுப் பலவந்தமாகப் பிரிக்கப்பட்டு, தம் வர்க்கத்திற்கு எதிராக நிறுத்தப்பட்டிருக்கும் இவர்கள் தத்துவரீதியில் ஆகாயத்தில் தான் தொங்குகிறார்கள்—யதார்த்தத்திலும் ஒரு வேளை அப்படி ஆகாயத்தில் தொங்கி வாழ்க்கையை முடித்துக் கொள்வார்கள்.

இவன், சுலபமாகப் பிழைக்கும் பொருட்டு நாஜிகளுடன் சேர்ந்தான். ஆனால் அது, இவன் நினைத்ததை விடச்

சிக்கலாகிவிட்டது. அன்றையிலிருந்து இவன் தன் புன்னகையை இழந்தான். நாஜி வெற்றியின் பேரில் இவன் பந்தயம் கட்டினான். ஆனால் அது செத்த குதிரை மேல் கட்டிய பந்தயமாக ஆகும் போலிருக்கிறது. இவனுக்கு நாடி தளர்ந்து விட்டது. சந்தடி செய்யாத செருப்புக் கால்களால், அடி மேல் அடி வைத்து இரவு நேரத்தில் இவன் தாழ்வாரத்தில் காவல் புரிகிறபோது, தன்னுடைய துயர எண்ணங்களைத் தன்னையறி யாமலேயே, விளக்கின் மேலுள்ள தூசி படிந்து மூடியில் பதிய வைத்துவிட்டான். அவற்றில் ஒன்றில், "எல்லாம் நாற்றம்!" என்று கவிதைத் தொனியில் எழுதிவிட்டு தற்கொலை செய்து கொள்ளலாமா என்ற சிந்தித்தான். பகலில் கைதிகளையும் காவலாளிகளையும் ஏற்றிக் கொண்டு இவன் காரை ஓட்டிச் செல்கிறபோது, காச்மூச் சென்று கூச்சம் போடுகிறான். மனோதிடத்துக்கு முட்டுக் கொடுக்கத்தான்.

## "ரோஸ்லர்"

மனதில் களங்கமில்லாமல் சிரிக்கும் சிலரில் ஒருவன் ரோஸ்லர். நெட்டையான மெலிந்த சரீரம். துருத்தி ஓசைபோல் குரல். ஊர் ஜாப்லோனெட்ஸ். ஒரு பஞ்சாலை தொழிலாளி. அறைக்குள் வந்து, மணிக்கணக்கில் பேசிக் கொண்டிருப்பான். பேச்சைக் கவனியுங்கள்:

"எப்படி இங்கு நான் வந்து சேர்ந்தேன்? பத்து வருடங் களுக்குமேல் எனக்கு உருப்படியான வேலை ஒன்றும் கிடைக்க வில்லை. ஒரு குடும்பம் முழுவதும், வாரத்துக்கு இருபது வெள்ளிக் காசுகளைக் கொண்டு ஜீவிக்க வேண்டுமென்றால், வாழ்க்கை எப்படிப்பட்டதாக இருக்கும் என்பது உனக்கே தெரியும். பிறகு அவர்கள் ஒருநாள் வருகிறார்கள். 'உனக்கு நாங்கள் வேலை தருகிறோம்; எங்களுடன் வா' என்ற சொல்கிறார்கள். நான் போகிறேன். அவர்கள் எனக்கு வேலை தருகிறார்கள். மற்றவர்களுக்கும் கொடுக்கிறார்கள். குறைந்த பக்ஷம் எங்களால் சாப்பிட முடியும். வீடு என்று ஒன்றை

வைத்திருக்க முடியும். நாங்கள் திரும்ப உயிர்வாழ முடிகிறது. சோஷலிஸமா? என்னவோ, அது அவ்வளவு நல்லதல்ல. நான் அதைப் பற்றி நினைத்திருந்தது வேறு. ஆனால் இப்போதைய நிலைமை, முனபிருந்ததைவிட எவ்வளவோ தேவலை.

"இல்லையா? யுத்தமா? ஓ, நான் யுத்தத்தை விரும்ப வில்லை. மற்ற ஜனங்கள் சாக வேண்டும் என்று எனக்கு விருப்பமில்லை. நான் விரும்பியதெல்லாம், நான் வாழ வேண்டும் என்பதுதான்.

"என்ன? விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் நான் யுத்தத்திற்கு உதவி பண்ணுகிறேனா? நான் என்ன செய்வேன்? இங்கு யாருக்காவது தீங்கிழைத்திருக்கிறேனா? நான் போய் விட்டால், என் இடத்திற்கு வேறு ஆட்கள் வருவார்கள். என்னைவிட மோசமானவர்களாக அவர்கள் இருக்கலாம். அதனால் இங்கு யாருக்காவது நன்மை ஏற்படுமா? யுத்தம் முடிந்த பிறகு, நான் தொழிற்சாலைக்குப் போய் விடுவேன்..."

"வெற்றியடையப் போவது யார் என்று நினைக்கிறாய்? நாங்கள் இல்லையா? நீங்களா? பிறகு எங்கள் கதி?"

"அதோடு நாங்கள் மடிவோமா? அது ரொம்ப மோசம். நான் வேறு விதமாக எண்ணியிருந்தேன்."

பிறகு இவன் யோசனை செய்தவாறு எழுந்து அறையை விட்டு மெதுவாக நகர்கிறான். அரை மணி நேரம் கழித்துத் திரும்பி வந்து, "சோவியத் யூனியன் உண்மையில் எப்படிப் பட்ட நாடு?" என்று ஒரு கேள்வியைக் கேட்கிறான்.

## "அது"

ஒரு நாள் காலையில் பெட்செக் கட்டிடத்திற்குப் போக அவர்கள் எங்களை அழைத்துச் செல்லுவதற்கு முன்பு பான்கிராப்ட்ஸில் கீழ் தாழ்வாரத்தில் நாங்கள் காத்திருந்தோம். ஒவ்வொரு நாளும் இங்கு நிற்கும் போது, பின்னால் என்ன நடக்கிறதென்பதைத் தெரிந்து கொள்ளாமல் இருக்கும்

பொருட்டு, நெற்றியை சுவரோடு ஒட்டினாற்போல் வைத்து நிற்கவேண்டும். அப்படி நிற்கும்போது, அன்று காலை நான் ஒரு புதிய குரலைக் கேட்டேன்.

"நான் ஒன்றையும் பார்க்க விரும்பவில்லை. எதையும் கேட்கவும் விரும்பவில்லை. என்னை உனக்குத் தெரியாது. ஆனால் விரைவில் தெரிந்து கொள்வாய் நான் யார் என்று?"

எனக்குச் சிரிப்பு வந்துவிட்டது. 'குட்—சோல்ஜர் ஸ்கிவிக்' என்ற நாவலில் வரும் முட்டாள் லெப்டினன்ட் டூப் பேசுகிற பேச்சு என் நினைவுக்கு வந்தது. இந்த இடத்துக்கு அது முற்றிலும் பொருத்தமாக இருக்கிறது. இதுவரையில் அந்தக் கிண்டல் சம்பாஷணையை இவ்வளவு உரக்க உபயோகிக்க யாருக்குமே தைரியம் வந்ததில்லை. என்னைவிட அனுபவம் வாய்ந்த என் பக்கத்துத் தோழர், மெதுவாக இடித்து சிரிப்பை நிறுத்தும்படி கூறினார். நான் நினைத்தது தவறாக இருக்கலாம். அது கிண்டலுக்காக எடுத்தாளப்பட்ட மேற்கோள் அல்ல. ஆமாம், அது கிண்டல் அல்ல.

எங்களுக்குப் பின்புறம், கேட்ட அந்தக் குரல், எஸ்.எஸ். உடுப்புக்குள் புகுந்திருக்கும் ஒரு அற்ப, குள்ள ஜந்துவினுடையது. அதற்கு ஸ்கிவிக்கைப் பற்றி ஒன்றுமே தெரியாது. அது லெப்டினன்ட் டூப்போல ஏன் பேசிற்று என்றால், அடிப்படையில் அது அவனையே ஒத்திருந்தது. அது வித்தான் என்று கூப்பிட்டால் ஏன் என்று கேட்டது. வித்தான் என்ற பெயரில் வெகுநாட்கள் அது செக்கோஸ் லோவேகியா சேனையில் உயர்தர சார்ஜெண்டாக வேலை பார்த்தது. அவன் கூறியது சரிதான். அவனை நாங்கள் தெரிந்து கொள்ளவில்லை. இனிமேல்தான் முழுதும் தெரிந்து கொள்ளவேண்டும். நாங்கள் அவனைப் பற்றிப் பேசும் போதெல்லாம் அஃறிணை ஒருமையிலேயே— "அது" என்றே—குறிப்பிட்டோம். உண்மை என்னவென்றால், பான்கிராப்ட்ஸ் ஆட்சியின் பிரதம தூண்களில் ஒன்றாகிய அவனுடைய குணாதிசயங்களுக்குப் பொருத்தமான ஒரு பரிகாசப் பெயரைக் கண்டு பிடிக்க பல தடவை முயற்சித்தும் எங்களால் முடியவில்லை. முட்டாள் தனம்,

ஈனபுத்தி, ஆணவம், அற்பத்தனம், அயோக்கியத்தனம், முதலிய வற்றின் ஒரு கதம்பத்திற்கு என்ன பெயரிட முடியும்?

"பன்றியின் முழங்கால் உயரங்கூட இல்லை!'— இது தான் அவனையொத்த குள்ளர்களை மட்டந்தட்ட, நாங்கள் உபயோகித்த வாக்கியம். இது அவர்களுடைய இதயத்திலே தைத்தது. தன் குள்ள உருவத்தை நினைத்து ஒருவன் எவ்வளவு மனக்கிலேசமடைகிறான்! வித்தானும் நிரம்ப வருந்தினான். அது சரிதான். ஆனால் தன்னைவிடப் புத்தியிலும், உருவத் திலும் பெரியவர்களாக இருப்பவர்கள் பேரில் வஞ்சம் தீர்த்தான். அதாவது, ஒவ்வொருவர் பேரிலும், அடியுதைகளைக் கொண்டு அல்ல; அதற்குப் போதிய துணிச்சல் அவனுக்கு இல்லை. ஒட்டுக்கேட்டல், உளவறிதல், காட்டிக் கொடுத்தல்— இவையே அவன் வஞ்சம் தீர்க்கக் கையாண்ட முறைகள்— வித்தான் கட்டிய கதைகளினால் எத்தனையோ கைதிகள் உடல் உருக்குலைந்தனர். எத்தனையோ பேர் உயிரிழந்தனர். ஏனெனில், நீ பான்கிராப்ட்ஸை விட்டுப் போகாமல் இருப்ப தும், போக நேரிடுவதும், அங்கிருந்து மந்தை வெளிச் சிறைக் குள் நுழைகிறபோது உன் சீட்டில் என்ன எழுதியிருக்கிறது என்பதைப் பொறுத்திருக்கிறது.

தன் பதவியையும், அந்தஸ்தையும் பற்றிப் பெருமைப் பட்டு, தலைக்கனத்துடன் அவன் தாழ்வாரத்தில் நடைபோட் டுத் தன்னந்தனியாக வருவதைப் பார்க்கப் பார்க்க, எல்லோ ருக்கும் சிரிப்புப் பொத்துக் கொண்டு வரும். அவன் நடையைப் பார்க்க அங்கு ஒருவரும் இல்லாதபோது கூட, அவன் நடை போடுகிறான். அவன் யாரையாவது சந்திக்கும் போது, எதன் பேரிலாவது ஏறி நிற்க வேண்டுமென்று அவனுக்குத் தோன்று கிறது. எங்களில் ஒருவரை விசாரிக்கும் போது, அதன் நாற்காலியின் கைப்பிடியில் உட்கார்ந்து கொள்கிறான். அது அசௌகரியமாக இருந்தாலும், மணிக்கணக்கில் அப்படியே உட்கார்ந்திருப்பான். வேறு எதற்காகவும் அல்ல. அந்த நிலை யில் அவன் உன்னைவிட உயரமாக இருப்பதால்தான். நாங்கள் க்ஷவரம் செய்து கொள்கிறபோது அவன் 'ட்யூட்டி'யில் இருந் தால், ஒரு படியில் ஏறி நின்று கொள்வான். இல்லாவிட்டால்,

ஒரு பெஞ்சின் மேல் ஏறி இங்குமங்கும் நடந்தவாறு, தன்னு டைய ஆசைச் சொற்றொடரை திரும்பத் திரும்ப முணு முணுப்பான்.

"நான் ஒன்றையும் பார்க்க விரும்பவில்லை. எதையும் கேட்கவும் விரும்பவில்லை. என்னை உனககுத் தெரியாது..."

காலையில் உடற்பயிற்சி செய்யும்போது, புல்மேட்டில் அவன் ஏறி நின்று கொள்கிறான். அந்த மேடு அவனைக் கால் அடி உயர்த்தும். அறைக்குள், மாக்ஷிமை தங்கிய மகாராஜா போல் கம்பீரமாக நுழைகிறான். உடனே சரியான உயரத்தி லிருந்து அறையைப் பார்வையிட ஒரு நாற்காலி மேல் ஏறி நிற்கிறான்.

அவன் பரிகசிக்கத் தக்க கோமாளிதான். ஆனால் சர்க்கார் வேலை பார்க்கும் ஒவ்வொரு முட்டாளையும் போல மனித உயிர்களைப் பொறுத்தவரையில் மிகமிக அபாயகரமான ஆசாமி. அவனுடைய முட்டாள் தனத்திலேயே ஒரு ஆற்றலும் மறைந்திருக்கிறது. அதுதான் கொசுவை யானையாக்கும் திறமை. காவல் நாயின் வேலையைத் தவிர அவனுக்கு வேறு ஒன்றும் தெரியாது. ஆகவே சிறைச் சட்டங்களிலிருந்து சிறிது பிறழ்ந்து நடந்தாலும் போதும்; அது மிகப்பெரிய குற்றமாக—அவனுடைய தற்பெருமைக்கு ஏற்ற முக்கியத்துவமுள்ள குற்றமாக—ஆகிவிடும். சிறைச் சட்டங்களை இவன் தனக்கு ஒரு பெரிய ஆளாக மற்றவர்கள் நினைக்கும்படி செய்வதற்கு ஏற்ற முறையில், தற்பெருமை உணர்வுக்குத் திருப்தியளித்து, கட்டளைகளைப் பிறப்பிக்கிறான். இவனுடைய குற்றச் சாட்டுகள் எந்த அளவுக்கு உண்மை என்று ஆராய்ந்து பார்க்க இங்கு யார் இருக்கிறார்கள்?

## "ஸ்மெடோன்ஸ்"

குரோஸ் தீட்டியிருக்கும் கார்டூன் படங்களில், நாஜி சூறாவளிப் படையினரின் உருவங்களை நாம் அடிக்கடி பார்த்திருக்கிறோம். இந்த ஸ்மெடோன்ஸைப் பார்த்துத்தான் அவர் அந்த உருவங்களை வரைந்திருக்க வேண்டும். அவ்வளவு

பொருத்தம்; பருத்த சரீரம்; ப்ரேத முகம்; ஜீவனற்ற கண்கள்; இவைதான் நாம் கார்டூன்களில் கண்டது. இவையேதான் ஸ்மெடோன்ஸ் தோற்றம். கிழக்குப் பிரஷ்யாவில், லிதுவேனியா எல்லைப் புறத்திலிருந்து வருகிறான் இவன். பசுமாடுகளை மேய்த்துப் பால் கறந்து வந்தான். ஆனால் அந்தச் சாதுப் பிராணியின் குணங்களில் ஒன்றுகூட இவனிடம் படியாதது ஆச்சரியம்தான். மாடியில், மேல் அதிகாரிகளால், இவன் ஜெர்மன் பண்பாடுகளின் உருவம் என்று கருதப்படுகிறான்—சுறுசுறுப்பானவன்; கஷ்டப்பட்டு வேலை செய்பவன்; லஞ்சம் வாங்காதவன். தாழ்வாரத்தில் இவனைக் கடந்து செல்லும் ஏவல் கைதிகளிடம், தனக்கு 'எக்ஸ்ட்ரா' உணவு வேண்டுமென்று கேட்டு வாங்காத சிலரில் ஒருவன் இவன். ஆனால்...

ஒவ்வொரு பிராணிக்கும் எவ்வளவு அறிவுண்டு என்பதை, அது எத்தனை 'வார்த்தை'களை ஆக்கும் ஆற்றல் பெற்றிருக்கிறது என்பதைக் கொண்டு, யாரோ ஒரு ஜெர்மன் விஞ்ஞானி —யார் என்ற ஞாபகமில்லை—ஒரு சமயம் அளவிட்டார். இந்த ஆதாரத்தின் பேரில், பிராணிகளிலே மிகவும் குறைவான அறிவுள்ள பிராணி வீட்டுப் பூனைதான் என்று அவர் தீர்மானித்தார். ஏனெனில், அதன் ஆக்கும் ஆற்றல் 128 வார்த்தைகளே. அடடா! ஸ்மெடோன்ஸுடன் ஒப்பிட்டால் வீட்டுப் பூனை எத்தகைய மேதையாகப் பிரகாசிக்கிறது! அவன் வாயிலிருந்து, பான்கிராப்ட்ஸ் கீழ்க்கண்ட நான்கு வார்த்தைகளைத் தவிர வேறு ஒன்றையும் ஒரு போதும் கேட்டதில்லை.

"ஏய்! நீ ஜாக்கிரதை! உஷார்!"

வாரத்தில் இரண்டு அல்லது மூன்று தடவை இவனுக்கு 'டியூட்டி' இல்லை. ஒவ்வொரு தடவையும், இவனுக்கு இந்த ஓய்வு வேதனையளித்தது. எப்படியோ ஒருவாறு மோசமாக அந்தச் சிறு சடங்கைச் செய்து முடிப்பான். ஒருநாள் ஜன்னல் கதவுகள் திறக்கப்படாததற்காகச் சிறை சூப்பிரன்டென்டன்ட் இவனைக் கடிந்து கொண்டார். அப்போது இவனைப் பார்க்க வேண்டுமே! அந்த வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அந்தச் சதைக்குன்று பருத்த கால்களால் இங்குமங்கும் ஆடி அசைந்து

நகர்ந்தது. அவனுடைய களிமண் தலை முன்புறம் சிறிது நீண்டது. சற்றுமுன் காதுகள் கேட்ட உத்தரவைத் திருப்பிச் சொல்ல, உதடுகளும் நாக்கும் பகீரதப் பிரயத்தனம் செய்தன... திடீரென்று அந்த மாமிசமலை, தாழ்வாரம் முழுதும் பயந்து நடுங்கும் வண்ணம், கர்ஜனை செய்தது. இந்தக் காட்டுச் சப்தம் எதற்காக என்று சிலருக்குத்தான் தெரியும். ஜன்னல்கள் இன்னும் மூடியே கிடந்தன. ஸ்மெடோன்ஸ் அருகில் நின்றிருந்த இரு கைதிகளின் மூக்கு உடைந்து இரத்தம் கொட்ட ஆரம்பித்தது. அதுதான் அவன் பிரச்னைக்குக் காணும் வழி. அதுதான் அவன் சுபாவம். சந்திப்பவர்களை எல்லாம் அவன் அடித்தான்; சாகும்வரை கூட அவன் புரிந்து கொண்டது அவ்வளவுதான். வேறு ஒன்றும் இல்லை. ஒரு சமயம் ஒரு அறைக்குள் புகுந்து, கைதிகளில் ஒருவரை அடித்தான். அந்தக் கைதி நோயாளி. அவர் ஒரே அடியில் துடித்துத் தரையில் விழுந்தார். உடனே அவருக்கு வலிப்புக் கண்டு விட்டது. கையும் காலும் இழுத்தன. அந்த வலிப்பின் இழுப்புக்குப் பொருத்தமாக, மற்றவர்களுக்கு ஸ்மெடோன்ஸ் ஒரு உடற் பயிற்சியைக் கொடுத்தான். எல்லோரும் தோப்புக்கரணம் போடும்படி உத்தரவிட்டான். நோயாளி தெம்பு முழுவதையும் இழந்து களைத்தவுடன், வலிப்பும் நின்றது. ஸ்மெடோன்ஸ் இடுப்பில் கைகளை வைத்துக் கொண்டு, அப்படிப்பட்ட ஒரு சிக்கலான பிரச்சனையைத் தீர்ப்பதில் தனக்கு ஏற்பட்ட வெற்றியை எண்ணியபோது. அவன் முகத்தில் ஒரு குரூரச் சிரிப்புத் தோன்றியது.

அவன் நிஜக் காட்டுமிராண்டி. அவர்கள் போதித்த பாடங்களில் ஒன்றே ஒன்றை மட்டுமே, அவன் ஞாபகத்தில் வைத்திருந்தான் அடியுதைதான். அனைத்திற்கும் மருந்து என்பதே அது.

இறுதியில் இந்த ஜந்துவுக்கும் ஏதோ நேர்ந்துவிட்டது. ஒரு மாதத்திற்கு பின்பு, சிறையின் வரவேற்பு அறையில் இவனும் கே—யும் உட்கார்ந்திருந்தனர். அவர் கூறியது ஸ்மெடோன்ஸ் மண்டையில் ஏற வெகு நேரம் பிடித்தது. அவர் நிலைமையை

வெகுநேரம் சிரமப்பட்டு விளக்கிக் கொண்டிருந்தார். மண்டையில் விஷயம் ஏறியவுடன், இவன் எழுந்து நின்றான். ஆபீஸ் கதவைத் திறந்து, தாழ்வாரத்தில் எட்டிப் பார்த்தான். யாரும் இல்லை. துளி சந்தடி இல்லை. சிறை நள்ளிரவில் தூங்கிக் கொண்டிருந்தது. கதவை மூடினான். கவனமாகப் பூட்டினான். மெதுவாக ஒரு நாற்காலியில் சாய்ந்தான்.

"அப்படியானால் நீ நினைப்பது....?"

கன்னத்தில் கையை ஊன்றிக் கொண்டான். அந்த மிகப் பெரிய சரீரத்தின் உள்ளே இருக்கும் மிகச் சிறிய ஆத்மாவின் பேரில் மலை போன்ற பளு சென்று அமர்ந்தது. வெகுநேரம் தலையைத் தூக்காமல் உட்கார்ந்திருந்தான்; பிறகு நம்பிக்கை இழந்து சொன்னான்...

'நீ சொல்வது சரிதான். நம்மால் ஜெயிக்க முடியாது...'

கடந்த ஒரு மாதமாக பான்கிராப்ட்ஸில் ஸ்மெடோன் ஸுடைய யுத்த முழக்கம் கேட்கவில்லை. அவனுடைய முஷ்டியின் பலத்தைப் புதிய கைதிகள் அறியவில்லை.

## சிறை டைரக்டர்

இவன் ஒரு குட்டிச் சர்வாதிகாரி. யூனிபாரம் உடுத்தியிருந்தாலும் இல்லாவிட்டாலும், எப்போதும் கனஜோராக ஆடை அணிந்திருக்கிறான். பெரிய சீமான் போலத்தான் தோற்றம். தன்னைப்பற்றிப் பரமதிருப்தி. நாய்கள் வேட்டையாடுதல், பெண்கள்—இவற்றில் இவனுக்கு நிரம்ப மோகம். ஆனால் இவையெல்லாம் நமக்குச் சம்பந்தமில்லாத விஷயங்கள்.

இவனுடைய குணாதிசயங்களின் மறுபகுதி பான்கிராப்ட் ஸுடன் நிச்சயம் சம்பந்தமுள்ளது. அது தான் குரூர சுபாவம்; அநாகரிகத் திமிர். தான் தோன்றி நாஜூக்கு உதாரண புருஷன். தன் சொந்தப் பதவியைக் காப்பாற்றிக் கொள்ள, யாரையும்

பலியிடத் தயாராக இருக்கிறான். போலந்து இவன் பிறந்த தேசம். சோப்பா என்று பெயர். அதற்கு என்ன அர்த்தமோ! ஒரு கொல்லனிடம் சிற்றாளாக வேலை பார்த்தான் என் கிறார்கள். ஆனால் அந்த நேர்மையான தொழில் இவனிடம் எவ்வித அடையாளத்தையும் விட்டிருக்கவில்லை. ஹிட்லரின் சேவகத்தில், நிரம்ப நாட்களுக்கு முன்பே சேர்ந்தான். இன்றையப் பதவியையும் அந்தஸ்தையும், முகஸ்துதியினாலும், சூழ்ச்சியினாலும் பெற்றான். சகலவிதமான தில்லு முல்லு களையும் செய்து, தன் உத்தியோகத்தைக் காப்பாற்றிக் கொள் கிறான். கைதிகள் தன்னுடைய காரியஸ்தர்கள், குழந்தைகள், வயோதிகர் யாரிடமும்— இவனுக்கு எவ்வித அபிமான உணர்ச்சியோ அல்லது மரியாதையோ தயவு தாட்சண்யமோ கிடையாது. பான்கிராப்ட்ஸ் சிறையில் உள்ள நாஜிஸத்தின் ஆட்களிடம் அதிக உணர்ச்சிகள் இல்லை என்றாலும், யாரும் சோப்பாவைப் போல் இம்மிகூட உணர்ச்சி இல்லாமல் இருக்க மாட்டார்கள். இவன் மதிப்புக் கொடுக்கிற ஒரே மனிதன். இவன் அடிக்க பேசுகிற சிறை வைத்தியனாகி போலீஸ் மாஸ்டர்ஸ் வீஸ்னர்தான் ஆனால் அநத் உறவுகூட பரஸ் பரமானதாகத் தோன்றவில்லை.

சோப்பா தன்னைப் பற்றி மட்டுமே சிந்திக்கிறான். இந்த அதிகாரப் பதவியைத் தனக்காக மட்டுமே பிரயத்தனம் செய்து பெற்றான். தனக்காக மட்டுமே இவன் இந்த ஆட்சியிடம் இறுதிவரை விசுவாசமாக இருப்பான். தனக்காக மட்டுமே இவன் விமோசனத்திற்கு வேறு வழிகள் உண்டா என்று எண்ணுகிறான். ஆனால் வேறு வழி இல்லை என்பது இப்போது இவனுக்குத் தெரியும். நாஜிஸத்தின் வீழ்ச்சி இவனுடைய சொந்த வீழ்ச்சியாகவும் இருக்கும். இவனுடைய சுகபோக வாழ்க்கைக்கு முற்றுப்புள்ளி வைக்கும். இவனுடைய அழகான இருப்பிடத்தையும் பறிக்கும். கொல்லப்படும் சக கைதிகளின் ஆடைகளையும், உபயோகிக்கத் தயங்காத இவனுடைய டாம்பீக அலங்காரத்தையும் ஒழித்துக் கட்டும். ஆமாம் அதுதான் அவனுடைய முடிவு.

## சிறை வைத்தியர்

போலீஸ் மாஸ்டர் வீஸ்னர்—பான்கிராப்ட்ஸ் நாடக மேடையில் எத்தகைய விநோதமான பேர்வழி! இவன் இவ்விடத்திற்குப் பொருத்தமானவன் அல்ல என்று பல தடவை நீ நினைக்கிறாய்—ஆனால், இவன் இல்லாமல் பான்கிராப்ட்ஸை உன்னால் கற்பனைக் கூடச் செய்து பார்க்க முடியாது. சிறை ஆஸ்பத்திரியில் இல்லையென்றால், இவன் சிறைத்தாழ்வாரத்தில் தன் குறுகிய கால்களால் மெல்ல அடிவைத்து, தனக்குள் எதையோ பேசிக் கொண்டு தன்னைப் பற்றிய ஒவ்வொரு சமாச்சாரத்தையும் கூர்ந்து கவனித்துக் கொண்டு நடந்து வருவதைப் பார்க்கலாம். இவ்விடத்தில் சுற்றித் திரிந்து முடிந்த அளவுக்குக் கிடைக்கிற விவரங்களைச் சேகரித்துச் செல்லும் பொருட்டு வந்திருக்கும் ஒரு அந்நிய நாட்டானைப் போல் இவன் தோன்றுகிறான். ஆனால், இவனுக்குப் பழகிய காவல்காரனைப்போல் சந்தடியில்லா மலும், வெகு வேகமாகவும் அறையின் பூட்டுக்குள் சாவியை நுழைத்துத் திறக்க முடிகிறது. இவனுடைய சுவாரஸ்யமற்ற ஹாஸ்யப் பேச்சு, இரண்டு அர்த்தத்தில் பேச இவனுக்கு வசதியாக இருக்கிறது. ஆனால் நீ புரிந்து கொண்டு இவனைக் கிட்ட நெருங்க உதவியாக எதையும் அப்பேச்சில் இவன் வெளி யிட்டு விடுவதில்லை. இவன் மற்றவர்களிடம் நெருங்குகிறான். ஆனால் மற்றவர்கள் தன்னை நெருங்க விடுவதில்லை. இவன் எவ்வளவோ விஷயங்களைப் பார்க்கிறன். ஆனால் கோள் சொல்வதில்லை. மற்றவர்கள் பேரில் குற்றம் சாட்டுவதில்லை. புகை மயமாக இருக்கும் ஒரு அறைக்குள் இவன் நுழைந்தால், மூக்கை உரக்க உறிஞ்சி சொல்வான்:

"சரிதான்"—உதட்டை நாக்கினால் தடவுகிறான்— "அறை யில் புகை பிடித்திருக்கிறீர்கள்" — திரும்பவும் உதட்டைத் தடவுகிறான்— "அது கூடாது. கண்டிப்பாகப் புகை பிடிக்கக் கூடாது."

ஆனால் அதைப் பற்றிப் புகார் கூறமாட்டான். ஏதோ ஒரு பெரிய கவலை எப்போதுமே மனதை வாட்டுவதுபோல

இவனுடைய முகம் சுருக்கம் விழுந்திருக்கிறது. இவன் சேவை செய்கிற ஆட்சியின் பேரில், இவனுக்கு எவ்விதப் பற்றும் இருப்பதாகத் தோன்றவில்லை. இப்போதும் சரி, முன்னேயும் சரி, இவன் இந்த ஆட்சியின் பேரில் நம்பிக்கை வைக்கவில்லை. அதனால்தான், பிரஸ்லாவிலிருந்து பிரேக்கிற்கு இவன் தன் குடும்பத்தின் ஜாகையை மாற்றவில்லை. அநேகமாக எல்லா ஜெர்மன் அதிகாரிகளும், அடிமைப்பட்ட நாட்டைச் சுவீகரிக்க இத்தகைய சந்தர்ப்பத்தை நழுவ விடுவதில்லை. ஆனால் இவன் இந்த ஆட்சியை எதிர்த்து மல்லாடுகிறவர்களுடன் எவ்விதத்திலும் சேர்ந்திருக்கவில்லை. இரண்டில் எந்தப் பக்கமும் இவன் சாயவில்லை.

என்னைக் கடமை உள்ளத்தோடும் கண்ணியமாகவும் இவன் கவனித்தான். இவனிடம் வரும் பெரும்பாலான நோயாளிகளிடமும் இப்படித்தான் நடத்து கொள்கிறான். நிரம்ப அதிகமாகச் சித்ரவதைக்கு ஆளான கைதிகளை, திரும்பவும் 'விசாரணை'க்கு இழுத்துப் போகாமல் அநேக சமயம் தடுக்கிறான். ஒருவேளை, அது இவனுடைய மனச்சாட்சிக்கு நிம்மதியளிக்கக் கூடும். எனினும், சில சமயம் உதவி மிகமிக அவசியமாக இருக்கும்போது, இவன் உதவி செய்ய மறுக்கிறான். அந்தச் சமயம், அவன் பீதியடைந்திருக்கக் கூடும்.

ஆட்சி புரியும் சர்க்கார் பேரில் ஒரு புறம் பயம். அடுத்து என்ன நடக்குமோ என்று மறுபுறம் கிலி. இவ்விரண்டு பயங்களுக்குமிடையே தன்னந்தனியாக நிற்கும் பிரஜைகளுக்கும் இவனை உதாரணமாகக் கூறலாம். ஏதாவது ஒரு வழியைக் காண இவன் நாலாபுறமும் பார்க்கிறான். ஆனால் ஒன்றும் இவனுக்கும் புலப்படவில்லை. எலி அல்ல; பொறியில் சிக்கிய நிஜமான சுண்டெலி. இவன் தப்புவதற்கு நம்பிக்கை இல்லாத வகையில் சிக்கிக் கொண்டுள்ள சுண்டெலி.

## பிளிங்க்

இவன் வெறும் உருவம் அல்ல; பண்பு பூர்த்தியான மனிதனுமல்ல. இவ்விரண்டிற்கு இடையில் உள்ள ஒரு பிராணி.

இவனை நிஜ மனிதனாக ஆக்கக்கூடிய தெளிந்த திருஷ்டி இவனிடம் இல்லை.

இந்த ரகத்தைச் சார்ந்தவர்கள் இங்கு இருவர் உண்டு. சாதாரணமான பிரஜைகள் தங்கள் நிலையை உணர்த்தும் வகை தெரியாது. தத்தளிப்பவர்கள், தாங்கள் தவறிப் பிரவேசித்த இடத்தின் பயங்கரங்களைக் கண்டு கிலி அடைந்து விட்டார்கள். பிறகு அங்கிருந்து மீள வழி இல்லையா என்று கலங்குகிறார்கள். தன்னம்பிக்கை இல்லாதவர்கள், இதனால், யாராவது ஆலோசனை கூறி நம்பிக்கையூட்ட மாட்டார்களா என்று அங்குமிங்கும் பார்க்கின்றனர்; காணும் காட்சிகளைக் கொண்டு அல்ல; மனதில் உள்ள உணர்ச்சியைக் கொண்டே ஆதரவைத் தேடுகின்றனர். உன்னிடமிருந்து உதவி பெறலாம் என்ற ஒரே நம்பிக்கையினால்தான், இவர்கள் உனக்கு உதவு கிறார்கள். இவர்களுக்கு இப்போதும் சரி, எதிர்காலத்திலும் சரி. உதவி செய்வது சரியே.

பான்கிராப்ட்ஸில் இருக்கும் ஜெர்மன் அதிகாரிகளில் இவர்கள் இருவர் மட்டுமே போர்முனைக்குச் சென்று நேரடியாகப் போரில் ஈடுபட்டவர்கள்.

ஹனுயர் ஒரு தையற்காரன். நோஸ்மோ வாசி. கிழக்குப் போர்முனையிலிருந்து யுத்தம் மூண்ட சில காலத்திற்குள் இவன் திரும்பிவிட்டான். காரணம், இவனுக்குப் பனி நோய் கண்டது. வாஸ்தவத்தில் அந்த நோயை இவனே உண்டு பண்ணிக் கொண்டான். ஸ்கிவிக் பாணியில், 'ஜனங்கள் ஈடு படக்கூடியது அல்ல யுத்தம்' என்ற இவன் தத்துவம் பேசு கிறான். 'அதில் நான் செய்வதற்கு ஒன்றமில்லை' என்கிறான்.

ஹோபர் ஒரு செருப்புத் தொழிலாளி. பாட்டாத் தொழிற் சாலையில் வேலை பார்த்தான். பிரான்சில் நடந்த சண்டை களில் போரிட்டான். பதவி உயர்த்தப் படும் என்று வாக்களிக்கப்பட்ட போதிலும், அதன் பிறகு இவன் இராணுவ சேவையை விட்டுவிட்டான். தினம் இவன் எத்தனையோ சிக்கல்களில் 'மாட்டிக் கொள்கிறான். ஒவ்வொரு தடவையும் கையை வீசி, 'ஓ! ஸ்ஸு' என்று அலுத்துக் கொள்வதோடு சரி.

இவ்விருவரும், உணர்ச்சியிலும் தலைவிதியிலும் ஒருவரே போல் இருக்கிறார்கள். ஆனால் ஹோபர்தான் மற்றவனை விடப் பயமில்லாதவன்! உள்ளத்தை வெளியிடுபவன்; பூர்த்தியான பண்புடைய நிஜமனிதன் 'பிளிங்க்' (Flink) என்பது இவனுக்கு எல்லா அறைகளிலும் வழங்கும் பொதுவான பரிகாசப் பெயர்.

இவன் 'டியூட்டி' பார்க்கும் தினம், அறைகளில் அமைதி நிலவும் தினமாகும். நீ விரும்புவதையெல்லாம் செய்யலாம். உன் பேரில் இவன் எரிந்து விழுந்தால் அப்போதே 'உன்னையல்ல' என்று இவன் கண்டித்துத் தெரிவிக்கின்றான்.. கீழே இருக்கும் இன்ஸ்பெக்டர் காதில் தன் சப்தம் விழுந்து தான் கடுமையாக இருப்பதாக அவன் நினைத்துக் கொள்ள வேண்டும் என்பதற்காகவே, சப்தமிட்டு அதட்டுவதாகக் கூறுகிறான். கடுமையாக இருக்க இவன் முயற்சி செய்தால், அது பலிக்காது. இவன் கூறும் காரணங்களை யாரும் ஒப்புக் கொள்வதில்லை. இதனால் இவன் தண்டனை பெறாத வாரமே இல்லை.

"ஓ! ஸ்ஸோ!"— கையை வீசி, இவன் தன் வழியே போகிறான். இவன் காவலாளியாக இருப்பதற்குப் பதில் இன்றும் ஒரு செருப்புத் தைக்கும் தொழிலாளி போலவே நடந்து கொள்கிறான். சுவர் எதிரே காசை விட்டெறிந்து இவன் கைதிகளுடன் அறையில் 'காசு ஆட்டம்' ஆடுவதை நீங்கள் பார்க்கலாம். ஒரு நிமிஷத்துக்குப் பிறகு, அறையை சோதிக்கும் பொருட்டுக் கைதிகளைத் தாழ்வாரத்திற்கு விரட்டுவான். சோதனை வெகுநேரம் நடந்தால், நீ ஆவலுடன் இவன் என்ன செய்கிறான் என்று எட்டிப் பார்த்தால் அறையில் நாற்காலியில் உட்கார்ந்து ஆசாமி தூங்குவதைப் பார்ப்பாய். நிரம்ப அமைதியாகவும், சௌகரியமாகவும் தூங்குவான். இந்த இடத்தில் இவனுக்கு ஆபத்து இல்லை. ஏனெனில் யாராவது மேல் அதிகாரி வந்தால், உடனே தாழ்வாரத்தில் நிற்கும் கைதிகள் இவனை எச்சரித்து காப்பாற்றுவார்கள். பகல்வேலை நேரத்தில், இவனுக்குத் தூக்கம் அவசியமாகிறது. ஏனெனில்,

எதையும்விட மேலாக இவன் காதலிக்கிற பெண், இவனுடைய இரவுத் தூக்கத்தைக் கெடுத்து விடுகிறாள்.

நாஜிஸம் வெற்றி பெறுமா? அல்லது முறியடிக்கப் படுமா?

"ஓ! ஸ்ஸூ!" — இந்த சர்க்கஸ் ரொம்ப காலத்துக்கு நடக்குமென்று நினைக்கிறாயா?

அவர்களில் ஒருவனாக இவன் தன்னைக் கருதுவதில்லை. அதுதான் இவனைச் சுவாரஸ்யமான ஆசாமியாக்குகிறது. இன்னும் என்னவென்றால் அவர்களில் ஒருவனாக இருக்க இவன் விரும்பவில்லை. அப்படி இருக்கவுமில்லை. வேறு ஒரு அறைக்கு நீ ஒரு ரகசியக் குறிப்பை அனுப்ப விரும்பினால் அதை பிளிங்க் எடுத்துச் சென்று சேர்ப்பிப்பான். வெளியிலுள்ள ஒருவருக்கு ஏதாவது நீ தெரிவிக்க விரும்பினால், பிளிங்க் அப்பொறுப்பை ஏற்றுக் கொள்வான். யாருடனாவது நீ பேசி, வேறு அநேக உயிரைக் காப்பாற்றும் பொருட்டு அவனை உன் வழிக்குத் திருப்ப வேண்டியிருந்தால் உன்னை அந்த ஆசாமியின் அறைக்கு அழைத்துச் சென்று, நீ பேசி முடிக்கும் வரையில் பிளிங்க் வெளியே காவல் புரிவான். ஜாக்கிரதையாக இருக்கும்படி, இவனை நீதான் அடிக்கடி வற்புறுத்த வேண்டியிருக்கிறது. ஏனெனில் ஆபத்துக்களுக்கு நடுவே இருக்கும்போது, இவன் அதைப்பற்றி அதிகமாக உணர்வதே இல்லை; இவன் செய்கிற நல்ல காரியங்கள் எப்படிப்பட்ட முக்கியத்துவமுள்ளவை என்பது பற்றி இவனுக்கு ஒன்றுமே தெரியவில்லை. தன்னால் முடிந்த அளவுக்கு நல்ல காரியத்தைச் செய்வது இவனுக்கு மன நிம்மதியைத் தருகிறது. ஆனால் இது இவனுடைய உண்மையான வளர்ச்சியில் குறுக்கிடுகிறது.

இவன் பண்பு பூர்த்தியாகவுள்ள மனிதன் அல்ல; ஆனால் அப்படிப்பட்டவனாக வளர்கிறான்.

## 'கோலின்'

இராணுவச் சட்டம் அமுல் நடந்தபோது ஒருநாள் மாலையில் நடந்தது இந்தச் சம்பவம்; எஸ்.எஸ். உடுப்பு

உடுத்தியிருந்த ஒரு காவல்காரன், என் அறைக்கு வெளியே நின்றான். என்னை அறைக்குள் நுழையவிட்டவுடன் அவன் என் சட்டைப் பைக்குள் அலட்சியமாகக் கையை விட்டான். சோதித்தவாறு, ‘எப்படி இருக்கிறாய்?’ என்று காதோரமாக மெதுவாகக் கேட்டான்.

“எனக்குத் தெரியாது. நாளைக்கு என்னைச் சுட்டுக் கொல்லப் போவதாக அவர்கள் சொன்னார்கள்?”

“அதைக் கேட்டுப் பயந்து விட்டாயா?”

“அதை நான் பல நாட்களாக எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்.”

ஒரு விநாடி அவன் என் கோட் பைக்குள் கையை விட்டான்.

“அப்படிச் செய்தாலும் செய்வார்கள். நாளைக்கு என்பது என்னவோ இருக்காது. சில நாட்களுக்குப் பிறகு ஒருவேளை சுடலாம். சுடாமலிருந்தாலும் இருக்கலாம். ஆனால் இது போன்ற காலத்தில்.... எதற்கும் தயாராயிருப்பது நல்லது.”

பிறகு அவன் பேசவில்லை. சிறிது நேரம் மௌனம்.

“ஆனால் அவர்கள் சொன்னபடி செய்துவிட்டால்... யாருக்காவது ஏதாவது சொல்லியனுப்ப விரும்புவாயா? அல்லது ஏதாவது எழுத விரும்புவாயா; இப்போது உடனடியாகப் பிரசுரிப்பதற்கு அல்ல; வருங்காலத்தில் பிரசுரிப்பதற்குத் தான்— புரிகிறதா? நீ எப்படி இங்கு இழுத்துவரப் பட்டாய்? யாராவது உன்னைக் காட்டிக் கொடுத்தார்களா? எப்படி எப்படி யார் யார் நடந்து கொண்டனர் என்பதைப் பற்றித் தான் — உனக்குத் தெரிந்தது. உன்னோடு அழியாமல் இருப்பதற்காகத்தான்.”

உனக்கு எழுதப் பிரியமா? அடேயப்பா! என்ன கேள்வி, ஆசைப்படாதவனிடம் கேட்பதைப் போல்!

ஒரு நொடியில் அவன் காகிதமும் பென்ஸிலும் கொண்டு வந்தான். அவற்றை நான் ஜாக்கிரதையாக ஒரு இடத்தில்— சோதனையில் கண்டுபிடிக்க முடியாதவாறு ஒளித்து வைத்தேன்.

ஆனால் அவற்றை நிரம்ப நாட்கள்வரை தொடவே இல்லை.

எனக்கு நம்பவே முடியவில்லை. நல்ல காரியத்திலேயே நம்ப முடியாத அளவுக்குச் சிறந்த சேவை! இந்த இருண்ட கட்டிடத்தில், கைதாகிச் சில வாரங்கள் கழிந்த பிறகு உன்னை அதட்டியும் அடித்து, சித்திரவதை செய்வது ஒன்றையே தொழிலாகக் கொண்டுள்ள ஆசாமிகளின் உடுப்பில், ஒரு மனிதனை—நிஜமனிதனைப் பார்ப்பதைவிட அதியற்புத ஆச்சரியம் ஒன்று இருக்க முடியுமா? உனக்குத் தன் கரத்தைக் கொடுத்து, இந்தக் கொடுமைகளுக்குப் பிறகும் வாழக் கூடியவர்களுடன் ஒரு நொடி நேரம் பேசுவதற்கு உதவி செய்யும் மனிதனைக் காண்பது என்றால்! அதுவும் சுடப்படு வதற்காக அவர்கள் பெயர்களைக் கூப்பிட்டுக் கொண்டி ருக்கும் சமயத்தில், இரத்தத்தைக் குடித்து வெறி கொண்டி ருக்கும் மிருகங்களின் நடுவில் விரும்பினாலும் கூச்சல் போட்டு அழமுடியாதவாறு பயத்தினால் தொண்டை அடைத்து நிற்கும் ஆட்களுக்கு இடையில், அப்படிப்பட்ட ஒருவனைக் காண்பது என்றால்! அப்படிப்பட்ட நேரத்தில் ஒரு நண்பனைப் பார்ப்பது — ஊஹூம், நம்ப முடியாது. இது உண்மையல்ல வென்றால், நிச்சயம் ஒரு எச்சரிக்கையாக இருக்க வேண்டும். ஆனால் என் நிலையில் இருக்கும் ஒருவனிடம், தானாக வலிய வந்து ஒருவன் நட்புப் பாராட்டி, உதவி செய்ய முன் வருகிறான் என்றால், அவன் மனோ தைரியம் எத்தகையதாக இருக்க வேண்டும்! எத்தகைய துணிச்சல்!

சுமார் ஒரு மாதம் கழிந்தது. இராணுவச் சட்டம் ரத்துச் செய்யப்பட்டது. கூச்சல் ஓய்ந்தது. கொடூரமான நேரங்கள், நினைவுகளாக மாறின. மீண்டும் ஒருநாள் மாலை. நான் அதே காவலாளியுடன் 'விசாரணை' முடிந்து திரும்பி வந்தேன்.

"நீ தாக்குப் பிடித்துத் தப்பிப் பிழைத்துவிட்டாய். இல்லையா? எல்லாம் சரிதானே?" — உபசரிப்பது போலப் பேசினான்.

அவன் குறித்தது என்ன என்பது எனக்குத் தெரியும். அந்தக் கேள்வி என் மனதில் ஆழப் பதிந்தது. அது மற்ற எதையும் விடத் தெளிவாக அவனுடைய நேர்மையை எனக்கு உணர்த்திற்று. அந்தக் கேள்வியைக் கேட்க, தார்மீக உரிமை யுள்ள ஒருவனே அதைக் கேட்டிருப்பான். அந்த விநாடியி லிருந்து நான் அவனை நம்பினேன். அவன் எங்களில் ஒருவன்.

முதல் பார்வையில் அவன் விநோதமான ஆசாமியாகத் தோன்றினான். தாழ்வாரத்தில் தனியாக நடந்தான். நிதான மாக, மௌனமாக, உஷாராக, கவனமாக நடந்தான். அவன் எரிந்து விழுந்து கூச்சல் போடுவதே இல்லை. அவன் யாரையும் ஓங்கி அடிப்பதுமில்லை.

"ஸ்மெடோன்ஸ் இந்தப் பக்கமாக வரும்போது, அவன் பார்க்கும் வண்ணம் என்னை ஒரு தடவை அடியப்பா!" அடுத்த அறையிலுள்ளவர்கள் இவ்விதம் அவனிடம், அவனு டைய நன்மையை உத்தேசித்துச் சொல்லிக் கொண்டி ருந்தார்கள்.

தலையை ஆட்டிக்கொண்டே, "அது அவசியமில்லை" என்றான் அவன்.

அவன் செக் மொழியைத் தவிர, வேறு எந்தப் பாஷை யிலும் பேசுவதில்லை. அவனைப் பற்றிய ஒவ்வொரு அம்சமும், மற்றவர்களுக்கு அவன் மாறுபட்டவன் என்பதை உணர்த்தின. ஆனால் அதற்குக் காரணம் என்ன என்பது இலேசில் புலப்பட வில்லை. அவர்கள் கூட இதை உணர்ந்தார்கள். ஆனால் காரணத்தை அவர்களாலேயும் அறிய முடியவில்லை.

எங்கு அவன் தேவையோ, அங்கு சாமர்த்தியமாகப் போய்விடுகிறான். எங்கு எல்லோரும் படபடத்துக் குழப்ப மடைகிறார்களோ, அங்கு அவன் அமைதியை உண்டு பண்ணு

கிறான். தலையைத் தொங்கவிட்டுக் கவலைப்படுகிறவர்களுக்கு அவன் உற்சாகமூட்டுகிறான். வெளியில் புதிய உயிர்களுக்கு அபாயம் என்றால், அந்த அபாயத்தைத் தவிர்க்கக் கூடிய நபர்களுடன் எங்களுக்குத் தொடர்பு அறுந்துவிட்டது என்றால், உடனே அவன் புதிய தொடர்பை வெளியில் ஏற்படுத்தித் தருகிறான். அவன் விவரங்களில் மூழ்கிவிடாமல், விரிவான அளவில் ஒரு திட்டப்படி வேலை செய்கிறான்.

இது ஒன்றும் புதிதல்ல. நாஜி சர்வீஸில் சேர்ந்த போதே, அவன் இந்தக் கருத்தை மனதில் வைத்துத்தான் சேர்ந்தான்.

நாம் இவ்வளவு தூரம் பேசுகிற இந்தச் செக் காவலாளி பெயர் அடால்ப் கோலின்ஸ்கி. மொரோவியாவில் ஒரு பழைய செக் குடும்பத்தில் பிறந்தவன். செக் கைதிகளுக்குக் காவல் புரியும் பொருட்டு, காலாளி வேலைக்கு மனுச் செய்தபோது, ஒரு ஜெர்மானியன் போல் நடித்தான். முதலில் ஹிராடிக் கிரார்லாவ் என்னுமிடத்திலும் பிறகு பான்கிராப்ட்ஸிலும் இவ்வேலையைச் செய்து வருகிறான். அவனை அறிந்திருப்பவர் களில் பலர் அவன் பேரில் குரோதம் பாராட்டியிருக்க வேண்டும்.

நான்கு வருடங்கள் கழிந்த பிறகு, ஜெர்மன் சிறைச் சூப்பிரன்டென்டன்ட் ஒருநாள் கோலின்ஸ்கியின் முகத்தருகே கையை வீசி, "அந்தச் செக் குணத்தை உன்னிடமிருந்து விரட்டியடிப்பேன்" என்று மிரட்டுகிறான்.

அதற்குக் காலம் கடந்துவிட்டது. சூப்பிரன்டென்டன்ட் தவறாக நினைத்து விட்டான். அவன் கோலின்ஸ்கியுடைய செக் குணத்தை மட்டுமல்ல; அவனிடமுள்ள மனிதத் தன்மை யையே அழிக்க வேண்டியிருக்கும். கோலின்ஸ்கி மனமறிந்து, தானாகவே எதிரியிடம் கையெழுத்திட்டுச் சேவகத்தில் சேர்ந்தான். எதற்காக? எதிரியை அவன் அணியிலேயே நின்று எதிர்க்க! அவனை எதிர்த்துப் போராடுகிறவர்களுக்கு உதவ! நிரந்தரமான அபாயம், அவனுடைய காரியார்த்த மனதை உறுதியாக்கியிருக்கிறது.

# ‘நம்மவர்கள்’

*1943, பிப்ரவரி 11—ம் தேதியன்று காலையில் கருப்புக் காப்பிக்குப் பதில் அவர்கள் கோக்கோ கொடுத்திருந்தால் அந்த ஆச்சரியம் என் கவனத்தில் பட்டிருக்காது. ஏனெனில் அன்று காலை வேறு ஒரு அதிசயம் என் கவனம் முழுவதையும் ஈர்த்திருந்தது. அதுதான் ஒரு செக் போலீஸ்காரனின் வருகை.*

*முதலில் அவனுடைய உடுப்பு மட்டும்தான் தெரிந்தது. நாங்கள் பார்த்தது எல்லாம் ஒரு காலின் சட்டையும், உயர்ந்த பூட்ஸூம்தான். ஒரு கருநீலக் கால் சட்டையும், ஒரு கையும் பூட்டைத் திறந்தன. பிறகு அறைக் கதவை மூடின; மறைந்தன. அது எல்லாம் ஒரு நொடி நேரத்தில் நடந்ததால், அரை மணிக்குப் பிறகு, அப்படி ஒன்றையும் பார்க்கவில்லை என்று நம்பக்கூட நாங்கள் தயாராக இருந்தோம்.*

*பான்கிராப்ட்ஸில் ஒரு செக் போலீஸ்காரன்! அந்த ஒரு விஷயத்திலிருந்து எத்தகைய முடிவுகளுக்கு ஒருவன் வரக்கூடும்.*

*இரண்டு மணி நேரத்திற்குள் நாங்கள் அந்த முடிவுகளுக்கு வந்து கொண்டிருந்தோம்; அறையின் கதவு மீண்டும் திறந்தது. ஒரு செக் போலீஸ் தொப்பி உள்ளே எட்டிப் பார்த்தது. நாங்கள் வைத்த கண் வாங்காமல் பார்க்க, பல்லை இளித்த வாறு, உதடுகள் சொல்லிற்று.*

*“ஓய்வு!”*

*இப்போது சந்தேகத்திற்கு இடமில்லை. தாழ்வாரத்தில் பசுங்காவி உடையில் நிற்கும் எஸ்.எஸ். காவலாளிகளிடை யில் அநேக கரும்புள்ளிகள்—செக் போலீஸ் அதிகாரிகள் காணப்பட்டனர். அவர்களுடைய வருகை எங்களை ஆகர்ஷித்தது.*

*இதற்கு என்ன அர்த்தம்? எங்களுக்கு என்ன நேரும்? அவர்கள் எப்படிப்பட்டவர்கள்? அவர்கள் எப்படிப்பட்ட வர்களாக இருந்த போதிலும், அவர்கள் இவ்விடத்திற்கு வந்தி*

ருக்கின்றனர் என்ற ஒரு செய்தியே, அநேக விஷயங்களைத் தெளிவாக உணர்த்துகின்றது. ஒரு ஆட்சி தன்னுடைய மிக மிக முக்கியமான நுண்ணிய கருவியிலேயே— தன்னைத் தாங்கி நிறுத்துவதற்காக இருக்கும் சிறை ஸ்தாபனத்திலேயே அது அடக்கி ஒடுக்க விரும்புகிற தேசத்தின் ஆசாமிகளையே சேர்த்துக் கொள்ள வேண்டிய அவசிய நிர்ப்பந்தம் அதற்கு ஏற்பட்டிருக்கிறது என்றால், அது முடிவை எவ்வளவு தூரம் நெருங்கியிருக்க வேண்டும்? ஒரு சில சோல்ஜர்களைப் போர் முனைக்குக் கொண்டு போவதற்காக, அது தன் போலீஸ் படையை பலவீனப்படுத்திக் கொள்ளத் தயாராக இருக்கிறது என்றால், போர்முனையில் அதற்கு எத்தகைய ஆள் பஞ்சம் ஏற்பட்டிருக்க வேண்டும்! இதே மாதிரி நடந்தால் இன்னும் எத்தனை நாட்களுக்கு அந்த ஆட்சி நீடிக்க முடியும்?

அவர்கள் நிரம்ப ஜாக்கிரதையாகப் பொறுக்கிய ஆட்களையே இங்கு அனுப்புவார்கள் என்பது உண்மைதான். ஜெர்மன் காவலாளிகளைவிட மோசமாக மாறக்கூடியவர்களை, வெற்றியில் நம்பிக்கையிழந்தவர்களை, விழிப்பற்றவர்களைத்தான் பொறுக்குவார்கள் என்பதும் சரியே. ஆனால் எஸ்.எஸ்.காரர்களுக்குப் பதிலாக, செக் போலீஸ்காரர்கள் நியமிக்கப்படுகின்றனர் என்ற ஒரு உண்மையே—செய்தியே முடிவு நிரம்ப நெருங்கிவிட்டதென்பதற்கு மறுக்க முடியாத ஆதாரம்.

இப்படித்தான் நாங்கள் விவாதித்தோம்.

முதலில் நாங்கள் நினைத்ததைவிட அவர்கள் அதிகமாக இருந்தனர். உண்மை இதுதான். ஆட்சி யந்திரத்திற்கு வேறு வழி இல்லை. தன்னைக் காப்பாற்றிக் கொள்ள என்னென்ன காரியங்களை இந்த ஆட்சி செய்ய வேண்டுமோ, அந்தக் காரியங்கள் அனைத்தையும் செய்வதற்குப் போதிய ஆட்கள் இந்த ஆட்சியிடம் இல்லை.

முதல் தடவையாக, பான்கிராப்ட்ஸில் செக் உடுப்புகளைப் பார்த்தது பிப்ரவரி 11ல் ஆகும். மறுநாள் அவற்றினுள் இருந்த ஆசாமிகளைத் தெரிந்து கொள்ள ஆரம்பித்தோம்.

ஒருவன் அப்படியே வருவான்; அறைக்குள் எட்டிப் பார்ப்பான். அவன் அடி எடுத்து வைப்பதைப் பார்த்தால் ஏதோ செய்யக் கூடாத காரியத்தை அவன் செய்வதாக நினைக் கிறான் என்று தோன்றும். பிறகு திடீரென்று தைரியத்தை வர வழைத்துக் கொண்டு, எங்களுடைய பார்வைக்குப் பதிலளிப் பான். அதைப் பார்த்தால் சின்னஞ்சிறிய குழந்தை ஊர்ந்து வரும்போதே உற்சாகத்துடன் நான்கு கால்களாலும் திடீரென்று துள்ளிக் குதிப்பதுபோல இருக்கும்.

"கனவான்களே, எப்படி இருக்கிறீர்கள்?" நாங்கள் புன்கை மூலம் பதிலளிக்கிறோம். அவனும் புன்னகை செய்கிறான். பிறகு திடீரென்று கூறுகிறான்.

"எங்கள் பேரில் ஆத்திரப்படாதீர்கள். நான் சொல்வது உண்மை. இங்கே உங்களைப் பார்ப்பதைவிட, நாங்கள் வெளியே நடைபோட்டுக் கொண்டிருக்கவே விரும்புவோம். ஆனால் உள்ளே எட்டிப் பார்க்க வேண்டியிருக்கிறது. அதைத் தவிர்க்க முடியாது. ஒருவேளை இதனால் ஏதாவது நன்மை ஏற்படலாம்... ஆமாம், ஒருவேளை..."

நாங்கள் அவர்களுடைய வருகையைப் பற்றி என்ன நினைத்தோம். அவர்களைப் பற்றி என்ன நினைத்தோம் என்பதை அவனுக்குச் சொன்னபோது, அவன் நிரம்பச் சந்தோஷப்பட்டான். இவ்விதம் முதலிலேயே நாங்கள் நண்பர் களானோம். அவன்தான் விடெக். நல்ல மனதுள்ள இளைஞன். அவன்தான் காலையில் அறைக்குள் தலையை நீட்டிய முதல் ஆசாமி.

இரண்டாவது ஆசாமி பெயர் டூமா. பழைய செக் கான்ஸ் டேபிள். கெடுபிடியும் சப்தமும் அதிகம். ஆனால் அடிப்படை யில் நல்லவன்தான், இவனைப் போன்றவர்களைத்தான், குடியரசுச் சிறைகளில் நாங்கள் 'பாப்' என்று கூப்பிட்டோம். இவன், தன் நிலைமையில் அசாதாரணமானது எதுவும் இருப்ப தாக நினைக்கவில்லை. அதற்கு மாறாக இவன் தன் பரம்பரை வேலையைச் செய்வது போலவே நடந்து கொண்டான்.

அமைதியைக் கெடுத்தாலும் சரி, காத்தாலும் சரி, இவன் தன் வழக்கமான ஹாஸ்யப் பேச்சுகளைப் பேசி, தன் சொந்த வழியில் நடந்து கொண்டான். இவன் ஒரு அறையில் கைதிக்கு ஒரு ரொட்டியோ அல்லது சிகரெட்டோ கொடுத்துவிட்டு, யாருடனாவது எதைப் பற்றியாவது அரசியல் நிலைமையைத் தவிர—பேசி நேரத்தைப் போக்குவான். அவையெல்லாம் சகஜமான முறையில் திறமையாகச் செய்தான். இதுதான் காவல் வேலை செய்யும் முறை என்பது இவன் அபிப்பிராயம். இந்த அபிப்ராயத்தை இவன் மறைக்க முயற்சிக்கவில்லை. முதல் தடவை இது சம்பந்தமாக இவனுக்கு மேல் அதிகாரியிடமிருந்து கிடைத்த 'டோஸ்' இவனை உஷாராக ஆக்கிற்றேயொழிய, அடியோடு மாற்றிவிடவில்லை. இவன் இன்னும் பழைய 'பாப்' ஆகவே, கான்ஸ்டேபிள் ஆகவே இருக்கிறான். இவனிடம் பெரிய உதவி எதையும் கேட்க உனக்குத் துணிவு வராது. ஆனால் இவன் இருக்கும் போது சகஜமாகப் பழக முடியும்.

மூன்றாவது செக் போலீஸ்காரன், தாழ்வாரத்தில் மௌனமாக, எதையும் கவனிக்காமல் நடந்தான். அவனை அணுகி ஏதாவது கேட்க நினைக்கிறவர்களையும், கவனிப்பதில்லை.

ஒரு வாரம் அவனைக் கவனமாகப் பார்த்த பிறகு, அப்பா சொன்னார். "அவனைப் பொறுக்கியெடுத்தவர்களுக்கு அவனால் எவ்விதப் பயனும் இல்லை; அவர்களில் அவன்தான் துளியும் உருப்படாதவன், உதவாக்கரை."

"இல்லை அவர்களில் அழகன்" என்றேன் நான். வெறும் வாதத்திற்காகத்தான் இப்படிச் சொன்னேன். இதுபோன்ற சிறு விவகாரங்களில், முரண்பட்ட கருத்துக்கள்தான் சிறை வாழ்க்கைக்குச் சுவையளிக்கக் கூடியவை.

இரண்டு வாரங்களுக்குப் பிறகு ஒருநாள், அந்த மௌனப் பேர்வழி என்னைப் பார்த்து, கண்ணைச் சிமிட்டியதுபோல் எனக்குத் தோன்றிற்று. நானும் அதே ஜாடை காட்டிப் பதிலளித்தேன். சிறையில் அந்த ஜாடைக்கு எத்தனையோ அர்த்தம். ஆனால் ஒன்றும் நடக்கவில்லை. ஒருவேளை நான்

நினைத்தது தவறாக இருக்கக்கூடும். எனினும் ஒரு மாதம் கழிந்த பிறகு, எல்லாம் தெளிவாக எனக்குத் தெரிய ஆரம்பித்தது. இது ஒரு வண்ணாத்திப்பூச்சி முட்டைக்கூட்டை உடைத்து வெளி வருவது போல, திடீரென்று நிகழ்ந்தது; மௌனக்கூடு உடைந்தது. அதிலிருந்து ஒரு ஜீவன் வெளிப்பட்டது. அது வண்ணாத்திப்பூச்சி அல்ல; ஒரு மனிதன்.

இந்தக் குண விசேஷக் குறிப்புகளில் பலவற்றைப் பற்றி "நீ சாஸ்வத நினைவுச் சின்னங்களை எழுப்புகிறாய்" என்று அப்பா சொன்னார்.

இங்கேயும் வெளியேயும், வீரத்துடனும் உண்மையுடனும் போராடி உயிர்விட்ட தோழர்களைப் பற்றிய நினைவுகள் அழியாமல் காப்பாற்றும் பொருட்டு அவர் சொல்வது போல் நினைவுச் சின்னங்களை எழுப்பவே நான் விரும்புகிறேன். ஆனால் நான் அத்துடன் நிற்க விரும்பவில்லை. அவர்களுக்கு எவ்விதத்திலும் தைரியத்திலும், விசுவாசத்திலும் குறையாமல், மிகவும் கஷ்டமான சந்தர்ப்பங்களில் எங்களுக்கு உதவி செய்த சாகாமல் வாழ்கிற—தோழர்களைப் பற்றியும் நான் நினைவுச் சித்திரங்களைத் தீட்ட விரும்புகிறேன்.

பான்கிராப்ட்ஸின் பைசாச சுற்றுப்புறத்திலிருந்து மீட்டு, கோலின்ஸ்கி, இந்த செக் போலீஸ்காரன் போன்றவர்களை வாழ்க்கையின் வெளிச்சத்திற்குக் கொண்டு வந்து எல்லோருக்கும் காட்ட ஆசைப்படுகிறேன். இது அவர் களுடைய புகழுக்காக அல்ல; மற்றவர்களுக்கு ஒரு உதாரணமாக இருக்க வேண்டுமென்பதற்காகத்தான். ஏனெனில், இந்தப் போராட்டத்துடன் மனிதக் கடமை முடிந்து விடாது; மக்கள் எல்லோரும் உண்மையிலேயே மனித உணர்ச்சியுடையவர்களாக ஆகும் வரையில், மனிதர் களாக இருப்பதற்கு வீரத்தனம் மிகவும் அவசியமாகத் தேவைப்படும்.

போலீஸ்காரன் ஜரோஸ்லாவ் ஹொராவின் கதை மிகவும் சுருக்கமானது. ஆனால் அதில் ஒரு முழு மனிதனின் வாழ்க்கைக் கதை பூராவையும் பார்க்கிறோம்.

நாட்டின் ஒரு மூலையில் இருக்கிறது ராட்னிகோ. அழகான பிரதேசம். ஆனால் வறுமை மிகுந்த பகுதி. அவனு டைய தந்தை கண்ணாடி செய்யும் தொழிலாளி. அவருடைய வாழ்க்கை வறுமையில் அடிபட்டது. வேலையிருந்த போதும் மனச்சாந்தியில்லை. வேலையில்லாத் திண்டாட்டம் நாட்டில் குடியேறியபோது படுபட்டினி. அவற்றில் ஒன்று ஒருவனை அடி பணிய வைத்தது; இல்லையேல் எதிர்காலத்தைப் பற்றிக் கனவு காணச் செய்தது; அடிபணியாமல் தலை நிமிர்ந்து நிற்கச் செய்தது; சுபீட்ச உலகைச் சிருஷ்டிக்க முடியும் என்ற நம்பிக்கை இடமளித்து, அதற்காகப் போராடத் துணிந்த தினால், அவனுடைய தந்தை ஒரு கம்யூனிஸ்டானார்.

மே தின அணிவகுப்பில் இளைஞன் ஜார்டர், சைக்கிள் கோஷ்டியில் சேர்ந்து, ஒரு சைக்கிளை விட்டுச் சென்றான். அவனுடைய சைக்கிளின் சக்கரங்கள், ஒரு சிவப்பு நாடா வினால் அலங்கரிக்கப்பட்டிருந்தன. அந்த சிவப்பு நாடாவை அவன் அங்கேயே விட்டுவிடவில்லை. ஸ்கோடா தொழிற் சாலையில் அவனுக்குக் கிடைத்த முதல் வேலையை ஒப்புக் கொள்ளச் சென்றபோது, அந்த நாடாவைத் தன் மனதில் எங்கேயோ மறைத்து வைத்து கூடவே எடுத்துச் சென்றான்.

வேலையில்லா நெருக்கடி ஏற்பட்டது. பிறகு அவன் இராணுவத்தில் சேர்க்கப்பட்டான். அதன் பிறகு போலீஸ் படையில் சேவகம் செய்ய ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது. அந்த நாட்களில் அவன் மனதில் மறைந்த சிவப்பு நாடா என்ன செய்து கொண்டிருந்ததோ, எனக்குத் தெரியாது, ஒரு வேளை அது எங்கேயோ சுற்றி மடக்கி வைக்கப்பட்டு, மறைக்கப்பட்டி ருக்கக் கூடும். ஆனால் அது பறிபோய் விடவில்லை என்பது மட்டும் நிச்சயம். ஒரு நாள், பான்கிராப்ட்ஸில் வேலை பார்க்க அவர்கள் அவனைப் பொறுக்கி அனுப்பினார்கள். அவன் கோலின்ஸ்கியைப் போல முன் கூட்டியே திட்டமிட்டுத் தானாகவே வரவில்லை. ஆனால் முதல் தடவையாக ஒரு அறையை அவன் எட்டிப் பார்த்தபோது, அவனுக்கு இங்கு தான் செய்ய வேண்டிய காரியங்கள் நிறைய இருக்கின்றன

என்ற உணர்வு உண்டாயிற்று. நாடாச் சுருள் விரிய ஆரம்பித்தது.

முதலில் போர்க்களத்தை நன்கு புரிந்து கொண்டு தன் பலத்தை அவன் அளந்து தெரிந்து கொள்ள வேண்டியிருந்தது. எங்கு ஆரம்பிப்பது, எப்படி ஆரம்பிப்பது என்ற ஒரே சிந்தனையினால் அவனுடைய முகம் சுருங்கி தலை கவிழ்ந்தது. அவன் போலீஸ் வேலையையே தொழிலாகக் கொண்டவன் அல்ல. சாதாரண ஜனங்களிடையில் பிறந்த ஒரு மகன். எனினும் அவனுக்கு அவனுடைய தந்தையின் அனுபவம் தெரியும். அந்த அனுபவத்தை அஸ்திவாரமாகக் கொண்டு, அவன் தன் சிந்தனைகளை உபயோகித்து, ஒரு தீர்க்கமான முடிவுக்கு வந்தான். என்ன செய்வதென்று தீர்மானித்தவுடன், அவனுடைய மௌனக் கூட்டை உடைத்துக் கொண்டு புறப்பட்டான் ஒரு மனிதன்.

உள்ளத்தில் மிகவும் அபூர்வமானவன்; சுத்தமானவன். சங்கோஜி. ஆனால் தைரியசாலி. அவசியமான போதெல்லாம் அவன் எதற்கும் துணிந்தான். சிறியதும் பெரியதும் அவசியமாதலால், அவன் சிறிய காரியங்களையும் பெரிய காரியங்களையும் செய்கிறான். மிகவும் சாந்தமாக சந்தடியில்லாமல், கருத்தாக, பயமின்றிக் காரியங்களைச் செய்கிறான். அது எல்லாம் அவனுக்கு சகஜமாக இருக்கிறது. உள்ளுக்குள்ளேயே அவனிடமிருக்கும் குணம் இதுதான் செய்யப்பட வேண்டும் என்றால், ஏன் இதைப் பற்றி வெளியே பேசவேண்டும்?

அவ்வளவுதான். இதுதான், தன் முயற்சியால் எத்தனையோ உயிர்களைக் காப்பாற்றியிருக்கும் ஒரு மனிதனின் முழுக் குணவிசேஷம்! உயிர் தப்பிப் பிழைத்த அந்த மனிதர்கள், இன்னும் வெளியில் உயிருடன் வாழ்ந்து வேலை செய்கிறார்கள் என்றால், அதற்குக் காரணம் பான்கிராப்ட்ஸில் ஒரு மனிதன் தன்னுடைய மனிதக் கடமையைச் செய்தான் என்பதுதான். அவர்களை அவனுக்கு நேரில் தெரியாது. அவர்களுக்கும் அவனைத் தெரியாது. கோலின்ஸ்கியையும் அவர்களுக்குத் தெரியாது. ஆனால் பிற்காலத்தில் அவர்கள் ஒருவரை

யொருவர் தெரிந்து கொள்வார்கள் என்று நம்புகிறேன். இந்த இரண்டு ஊழியர்களும் ஒருவரையொருவர் விரைவில் கண்டு கொண்டனர். தங்கள் வேலையில் கிடைத்த சந்தர்ப்பங்களை, முழுக்க முழுக்கச் சிறப்பாகப் பயன்படுத்தினார்கள்.

அவர்களுடைய உதாரணத்தை மறக்காதீர்கள். உணர்வு பூர்வமாகத் தேர்ந்து தெளிந்த கருத்தைக் கொண்டு தங்கள் இதயங்களை இருக்க வேண்டிய இடத்தில் வைத்து இரண்டையும் முழுக்க முழுக்கப் பயன்படுத்தியவர்கள் அவ்விருவரும்.

## "அப்பாஸ் கொரிபா"

எஸ்.எஸ். காவலாளியான கோலின்ஸ்கியின் பசுங்காக்கி உடை, செக் போலீஸ்காரனாகிய ஹோராவின் கருநீல உடை, ஏவல் கைதியாகிய அப்பாஸ்கொரிபாவின் வெளுத்த வர்ண மற்ற உடை இம்மூன்றையும் சேர்த்து எப்போதாவது பார்க்க நேர்ந்தால், சகோதரத்துவத்தின் உயிரோவியத்தைப் பார்க்கலாம். இவர்களைச் சேர்ந்தாற்போல் பார்க்க முடியாது. எப்போதாவது அபூர்வமாகவே அப்படிப் பார்க்க முடியும். இதற்கு ஒரே காரணம்— அவர்கள் மூவரும் ஒன்றாக இருப்பதுதான்.

சுத்தம் செய்வது, உணவு பரிமாறுவது முதலிய வேலைகளைத் தாழ்வாரத்தின் வழியே போய் வந்து செய்வதற்கு "மிகவும் நம்பிக்கைக்குப் பாத்திரமான, கட்டுப்பாட்டுக்கு உட்பட்ட, மற்றவர்களிலிருந்து பிரிக்கப்பட்ட கைதிகளை மட்டுமே" அனுமதிக்க வேண்டும் என்று சிறை விதிகளில் ஒன்று சொல்கிறது. அதுதான் விதியின் சொற்கள்! செத்து மடிந்த சொற்கள்! அப்படிப் பட்ட ஏவல் கைதிகள் ஒருவரும் இல்லை. ஒரு போதும் இருந்ததுமில்லை. நிச்சயமாக எந்தக் கெஸ்டாபோச் சிறையிலும் இல்லை. இங்கு அவர்களுடைய நம்பிக்கைக்குப் பாத்திரமான ஆசாமிகள், அறைகளில் அடைபட்டிருக்கும் கூட்டு அமைப்பினால் வெளியில் அனுப்பப்

பட்டிருப்பவர்கள் ஆவர். மற்றவர்களுடன் தொடர்பு கொள்ள வும் வாழவும் உதவி புரிவதற்காகவே, அவர்கள் அனுப்பப் பட்டிருக்கிறார்கள். இரகசியக் குறிப்புடன் கையில் எடுத்துச் சென்ற செய்தி, இடையில் மறிக்கப்பட்டுப் பிடுங்கப்பட்டதால், எத்தனையோ ஏவல் கைதிகள் தங்கள உயிரையே இழந்திருக் கிறார்கள்! ஆனால் சிறைக்கூட்டு அமைப்பின் விதிகள், அவர் களுக்குப் பிறகு அவ்வேலையை ஒப்புக் கொள்கிறவர் களையும் அந்த அபாயகரமான வேலையைச் செய்யும்படி தாக்ஷண்யமின்றி வற்புறுத்துகின்றன. அவர்கள் துணிந்தாலும் சரி. பயந்தாலும் சரி, கூட்டு அமைப்புக்கு அவ்வேலையைக் கண்டிப்பாகச் செய்துதான் தீரவேண்டும். ஒருவன் பயந்தால் தான் அதிகமாக நஷ்டமடைகிறான். எல்லா ரகசிய வேலை களிலும் இப்படித்தான். பயப்படுகிறவன் சீக்கிரமே மாட்டிக் கொள்வான்.

இது இரகசிய வேலையிலேயே மிகமிகக் கடுமையான வேலை. எதிர்ப்பை நசுக்கி அழிக்க, ஏவி விடப்பட்டிருப்பவர் களின் கண் எதிரேயே செய்யும் இரகசிய வேலை. காவல் காரர்களின் பார்வையில் அவர்கள் சொல்கிற வேலையைச் செய்கிறபோது, எதிரி ஏற்படுத்தியிருக்கும் கடுமையான திட்டத்தின் நடுவே, மிகமிகக் கஷ்டமான நிலைமைகளில் இவ்வேலை நடக்கிறது. இரகசிய வேலையைப் பற்றி நீ வெளி யில் கற்றுக் கொண்ட பாடங்கள் எல்லாம், இவ்விடத்தில் போதுவதில்லை. ஆனால் வெளியில் செய்த அளவுக்கு, சில சமயம் அதைவிட அதிகமாக இங்கு நீ செய்ய வேண்டும்.

வெளியில் இரகசிய வேலை நிபுணர் பலர் இருக் கிறார்கள். இங்கு ஏவல் கைதிகளிலும் நிபுணர்கள் இருக்கிறார்கள். அப்பாஸ்கொரிபா, நிபுணர்களுக்கெல்லாம் நிபுணன், பார்த்தால் பரம சாது. அடக்கத்தின் உருவம். ஆனால், நரியைவிடத் தந்திரசாலி. மீனைப்போல் வழுக்கி நழுவக் கூடியவன். நெளிவு சுளிவில் தேர்ந்தவன். அவனைக் காவல்காரர்கள் போற்றுகிறார்கள். அடடா, அவனைப் பாருங்கள்! கடமையிலேயே கண்ணாக இருக்கிறான். நம்பிக்கைக்கு உரியவன்; விதிகளுக்குத் துளியும் புறம்பாக

நடப்பதில்லை. அவனுடைய உதாரணத்தைப் பின் பற்றும்படி, மற்ற ஏவல் கைதிகளுக்கு அவர்கள் சொல்கிறார்கள்.

ஆமாம். நம்பிக்கைக்குப் பாத்திரமான ஏவல் கைதிகளே! அவர் உதாரணத்தைப் பின் பற்றுங்கள்! அவர் உண்மையிலேயே கைதிகள் விரும்புவது போல, ஏவல் கைதிகளிலேயே ஈடு இணையற்றவர். வலுவானவர். கூட்டு அமைப்பின் ஊழியர்களிலேயே எதையும் சட்டென்று உணரும் ஆற்றல் படைத்தவர்.

ஒவ்வொரு அறையிலும் இருப்பது யார் யார் என்பது அவருக்குத் தெரியும். புதிதாக வருபவர் ஒவ்வொருவரையும் அந்த வினாடியே தெரிந்து கொண்டு விடுவார். அந்தப் புதிய பேர்வழி ஏன் இங்கு வந்தான்? அவனுடைய தொடர்புகள் யார் யார்? வெளியில் அவன் எப்படி நடந்து கொண்டான்—என்பதையெல்லாம் தெரிந்து கொண்டு விடுவார். அவர் 'வழக்கு'களை ஆராய்ந்து, மர்மங்களை வெளிப்படுத்த முயற்சிக்கிறார். அது, அவருக்கு மிகவும் முக்கியம். அப்படிப் பரிசீலனை செய்து உணர்ந்தால்தான், அவருக்கு வெளியுலகத் தொடர்புகளை ஜாக்கிரதையாக வைத்திருக்கவும், சமயம் நேரும்போது சிறந்த ஆலோசனையைக் கூறவும் முடியும்.

அவர் விரோதியையும் நன்கு தெரிந்து வைத்திருக்கிறார். ஒவ்வொரு காவல்காரனையும் கவனமாகப் பார்க்கிறார். அவனுடைய பழக்கங்கள் என்னென்ன, அவனுடைய பலாபலம் என்ன, அவனிடம் எதெதை எதிர்பார்க்கலாம், எதெதெற்கு அவனைப் பயன்படுத்தலாம், எப்படி அவனை ஏமாற்றலாம், எப்படி அவனை வழி மாற்றிவிடலாம் என்பதையெல்லாம் கவனமாகப் புரிந்து கொள்கிறார். காவல்காரர்களைப் பற்றி நான் இங்கு எழுதியிருக்கும் அநேக குண விசேஷங்கள், ஸ்கொரிபா என்னிடம் சொன்னவையேயாகும். அவர்கள் எல்லோரையும் அவருக்குத் தெரியும்; அவர்களைச் சரியாக அவருக்கு வரையறுக்க முடியும். வராந்தாவில் சுயேச்சையாகத் திரிந்து தன் வேலையைச் செம்மையாகச் செய்ய விரும்புகிறவனுக்கு அது முக்கியமாகும்.

இவை எல்லாவற்றையும்விட, ஸ்கொரிபா தன் கடமையை நன்கு உணர்ந்திருக்கிறார். அவர் ஒரு கம்யூனிஸ்ட். ஒவ்வொரு விநாடியும் கம்யூனிஸ்டாக இருக்க வேண்டும் என்பது அவருக்குத் தெரியும். 'கையைக் கட்டிக் கொண்டு சும்மா உட்கார்ந்து, வேலை நடக்கிறபடி நடக்கட்டும்' என்று எந்த இடத்திலும், எந்த நேரத்திலும் கம்யூனிஸ்ட் சொல்லக் கூடாது என்பதும் அவருக்குத் தெரியும்! அவர் தன் திறமைக்கு உகந்த மிகவும் பொருத்தமான இடத்தை மிகவும் அபாய கரமான சமயத்தில், மிகவும் கடுமையான நெருக்கடியில் அடைந்திருக்கிறார் என்றுகூட நான் சொல்வேன். இங்கு இருந்தபோது அவர் வளர்ச்சிகூட அடைந்திருக்கிறார்.

அவர் ரப்பர்போல் நீண்டு சுருங்கும் ஆற்றல் படைத்தவர். ஒவ்வொரு நாளிலும் அல்லது மணியிலும் புதிய நிலைமைகள் தோன்றும். அவற்றைச் சமாளிக்கப் புதிய முறைகள் தேவைப் படும். அவர் அவற்றை வெகு விரைவில், நொடி நேரத்தில் கண்டுபிடித்துவிடுவார். ஒரு நிமிஷத்தில் துளிதான் அவருக்கு அவகாசம் இருக்கும். அது போதும் அவருக்கு. அதற்குள் அவர் ஒரு அறையின் கதவைத் தட்டி, துவாரத்தின் வழியாகக் காதில் செய்தியை வாங்கிக் கொண்டு விடுவார். பிறகு, அந்தச் செய்தி யைக் கடைக்கோடியிலுள்ள அறையில் அதன் காவலாளி கீழே போய் வேறு காவலாளி மேலே வருவதற்குள், தெளிவாகவும் சரியாகவும் சொல்லிவிடுவார். அவர் வெகு ஜாக்கிரதையாக இருப்பதோடு, சமயோசித புத்தியில் நிகரற்றவராகவும் இருக் கிறார். அவரது கை மூலம் நூற்றுக்கணக்கான செய்திக் குறிப்பு கள் சென்றிருக்கின்றன. இதுவரை ஒன்றுகூடப் பிடிபட வில்லை. சந்தேகத்திற்குக் கூட இடமேற்படவில்லை.

யாருக்குத் தொந்தரவு ஏற்பட்டிருக்கிறது? வெளி நிலைமையைப் பற்றி யாருக்குச் சில உற்சாக வார்த்தைகள் கூற வேண்டும் என்பதெல்லாம், எப்படியோ அவருக்குப் பார்த்த மாத்திரத்தில் தெரிந்துவிடுகிறது. மனத் தத்தளிப்பை எதிர்த்துச் சமாளிக்க ஒருவனுக்கு மனவலு வேண்டியிருக்கும் போது, தன்னுடைய வாஞ்சையினால் யாருக்கு உற்சாகமூட்ட

வேண்டும் என்பது அவருக்குத் தெரியும். அடுத்து வரும் பட்டினித் தண்டனையைத் தாக்குப்பிடிக்க யாருக்கு ஒரு துண்டு ரொட்டி அல்லது ஒரு அகப்பை 'சூப்' அதிகமாகக் கொடுக்க வேண்டும் என்பது அவருக்குத் தெரியும். இந்த விஷயங்களெல்லாம் அவருக்குத் தன் சொந்த அனுபவத் தினாலும் இளகிய உள்ளத்தினாலுமே தெரிகிறது. தெரிந்த வுடன் ஒவ்வொருவருக்கும் அவசியமானதைச் செய்கிறார்.

அவர்தான் அப்பாஸ்கொரிபா, ஒரு படை வீரன். வலுவானவன். தைரியசாலி. நிஜ மனிதன்.

எப்போதாவது இந்தக் குறிப்புகளைப் படிக்கப் போகும் உங்களை ஒன்று நான் கேட்டுக் கொள்கிறேன். அவரை நீங்கள் ஒரு நிஜ மனிதனாக மட்டும் பார்த்தால் போதாது. ஆண்டை யினால் கட்டளையிடப்படும் வேலையை, அடிமைக்குச் செய்யும் சேவையாக மாற்றும் ஆற்றல் படைத்திருந்த அவரை ஏவல் கைதிகளிலேயே தலை சிறந்தவராகவும் பார்க்க வேண்டும். இங்கு ஒரே ஒரு அப்பாஸ் கொரிபாதான் உண்டு. ஆனால், வேறு அச்சுகளில் வார்க்கப்பட்ட மற்றவர்கள் அவருக்கு எவ்விதத்திலும் குறையாமல் சேவை செய்கிறார்கள். அவர்கள் எல்லோரையும் பற்றிச் சித்தரிக்க நான் விரும்பி னேன். ஆனால் சில மணி அவகாசம் தான் இருக்கிறது என்ற வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். "இவ்வளவு காலம் வாழ்ந்த வாழ்க்கையின் கீதம் இவ்வளவு சுருக்கமாகப் பாடப் படுகிறது." ஆகவே, இன்னும் சில பெயர்களைக் குறிப்பிட மட்டுமே—நேரம் இருக்கிறது. அநேகரில் ஒரு சில உதாரணங் களை மட்டுமே—நினைவில் வைக்க வேண்டிய பலரில் சிலரை மட்டுமே—எழுத முடியும்.

'ரெனக்'—பெயர் ஸோஸப் டெரிங்கல், கஷ்டப்பட்டு உழைப்பவன், கோபக்காரன், தியாக குணம் படைத்தவன்; பெட்செக் கட்டிடத்தின் சரித்திரத்துடனும், அதில் நாங்கள் நடத்திய போராட்ட வரலாற்றுடனும் நிறையச் சம்பந்தப் பட்டிருப்பவன். இவனைப் போலத்தான் இவனுடைய இணை பிரியாத, நல்ல மனமுள்ள நண்பன் ஜோபெர் வீடுவும்.

டாக்டர் மிலோஷ்நெட்வெட்:— வசீகரமான இளைஞன். குணசாலி, சிறைப்பட்ட தோழர்களுக்கு தினசரி உதவிய தற்காக, தன் உயிரையே இழந்தான்.

ஆர்னாஸ்ட் லாரென்ஸ்—இவர் தன் தோழர்களைக் காட்டிக் கொடுக்க மறுத்ததற்காக இவருடைய மனைவி தூக்கில் ஏற்றப்பட்டாள். 400ம் நம்பர் ஏவல் கைதிகளையும், கூட்டு அமைப்பு முழுவதையும் காப்பாற்றும் பொருட்டு ஒரு வருடத்திற்குப் பிறகு இவர் தன் உயிரை அர்ப்பணித்தார்.

வாஷெக் ரெஸ்கு—அபூர்வமான ஹாஸ்யப் பேச்சுக் காரர். இவருடைய ஹாஸ்யத்தை அழிக்கவே முடியவில்லை.

அன்னி விகோவா—வாய் பேசாமல் விசுவாசத்துடன் வேலை செய்தாள். இராணுவச்சட்டம் அமுல் நடந்த போது கொல்லப்பட்டாள்.

ஸ்பிரின்ஜர்—புத்திசாலி; எப்போதும் சிரித்த முகம். 'லைப்ரரியன்' என்று பெயர். தன் அவசிய காரியத்தைச் செய்ய எப்போதுமே ஏதாவது ஒரு புது வழியைக் கண்டு பிடித்து விடுவார்.

பிலெக்—அழகிய இந்த இளங்காளை....

இவையெல்லாம் வெறும் உதாரணங்கள்; சாம்பிள்கள். பெரியவர்களோ, சிறியவர்களோ, நிஜமனிதர்கள்; வெறும் உருவங்கள் அல்ல.

---

அத்தியாயம் எட்டு:

# வரலாற்றின் துணுக்கு

---

## ஜூன் 9, 1943

என் அறைக்கு முன், வெளிச்சுவரில் ஒரு 'பெல்ட்' தொங்குகிறது. அது என்னுடையதுதான். விரைவில் என்னை

ஏற்றிச் செல்ல, வண்டி தயாராக நிற்கும் என்பதற்கு அடையாளம். இரவில் எந்த நேரத்திலாவது என்னை இவ்விடத்திலிருந்து கிளப்பி, வழக்கு விசாரணைக்காக ஜெர்மனிக்கு அனுப்புவார்கள். என் வாழ்க்கையின் கடைசிப் பருக்கையை, நேரம் கடித்துச் சாப்பிடுகிறது. பான்கிராப்ட்ஸில் நான் வாழ்ந்த நானூற்றுப் பதினோரு நாட்கள் இருக்கின்றன. எப்படிப்பட்ட நாட்கள்? அவற்றை நான் எங்கு கழிப்பேன்?

வேறு இடத்தில் எனக்கு எழுதச் சந்தர்ப்பமே அநேகமாகக் கிடையாது. ஆகவே இதுதான் என் கடைசி மரண வாக்கு மூலம். சரித்திரத்தின் ஒரு சிறு பகுதியைக் கூறுகிறேன். இந்தச் சிறு பகுதியைப் பற்றி அறிந்த சாக்ஷிகளில் நான் ஒருவன் மட்டுமே தற்போது உயிருடன் இருக்கிறேன். நான் கடைசிச் சாக்ஷி.

1941, பிப்ரவரி மாதத்தில், செக்கோஸ்லோவேகிய கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக் கமிட்டி முழுவதையும் அவர்கள் கைது செய்தனர். நாங்கள் கைது ஆக நேர்ந்தால் உடனே அடுத்த படியாகத் தலைமை வகிக்கத் தயாராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்த இரண்டாம் அணித் தலைவர்களும் அப்போதே கைது செய்யப்பட்டனர். இத்தகைய எதிர்பாராத பேரிடி, எப்படித் திடீரென்று விழுந்தது என்பதை இதுவரை சரியாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. கெஸ்டாபோ அதிகாரிகளைக் கைது செய்து, விவரத்தைக் கக்கும்படி செய்கிறபோது, ஒரு வேளை அது முழுவதும் தெளிவாகும். பெட்செக் கட்டிடத்தில் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஏவல் கைதி என்ற முறையில், அந்த இரகசியத்தை அறிய முயன்றேன். ஆனால் முயற்சி பலிக்கவில்லை. எதிரியின் உளவு வேலைதான் காரணம் என்றாலும், நம் தோழர்களின் அஜாக்கிரதையும் அதற்குக் காரணமாகும். இரண்டு வருடங்கள் வெற்றிகரமாகத் தலைமறைவு வாழ்க்கையை நடத்தியதால், நம் தோழர்கள் தங்கள் உஷார் பார்வையை மங்கவிட்டுவிட்டனர். நம் இரகசிய ஸ்தாபனம் மிகப் பெரிதாக விரிந்து விட்டது; புதிய ஊழியர்கள் ஏராளமாகக் கட்சிக்குள் வந்து சேர்ந்தனர். முதல் அணிக்கு

ஏதாவது நேர்ந்தால், உடனே அதற்குப் பதிலாக இயங்குவதற்கு அவசியமான 'ரிசர்வ்' தோழர்களும் கட்சிக்குள் இழுக்கப் பட்டுவிட்டனர். 'செல்'களின் அமைப்பு, சரியாகக் 'கண்ட்ரோல்' செய்ய முடியாத அளவுக்குச் சிக்கலாகிவிட்டது. கட்சி மத்தியக் கமிட்டியைத் தவிர்க்க, நீண்ட காலத்திற்கு முன் பிருந்தே திட்டமிட்டு, எதிரி ஜாக்கிரதையாக ஆயத்தமாகி வந்திருந்தான் என்பதும், அவன் சோவியத் யூனியன் பேரில் பாயத் தயாராக இருக்கும் சமயத்தில், தன் திட்டத்தை நிறை வேற்றி கட்சி மத்தியக் கமிட்டி பேரில் பாய்ந்தான் என்பதும் தெளிவு.

எங்களில் எத்தனை பேரை அவன் மடக்கிச் சிக்க வைத்தான் என்பது முதலில் எனக்குத் தெரியாது. யார் யார் அகப்பட்டனர் என்பது விளங்கவில்லை. ஆகவே அகப் படாமல் மிஞ்சியவர் திட்டப்படி என்னுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்வார்கள் என்று நினைத்து, நான் காத்தி ருந்தேன். ஆனால் நான் எதிர்பார்த்தபடி எந்தத் தோழரும் என்னுடன் தொடர்பு கொள்ள வரவில்லை. ஒரு மாதம் கழிந்த பிறகு, சேதம் அசாதாரணமானது என்று விளங்கிற்று. மற்றவர்களிடமிருந்து எனக்குத் தொடர்பு எற்படும் என்று நினைத்து நான் காத்திருந்ததே, ஒன்றும் நடக்காது என்பது தெளிவாயிற்று. இதனால் நான் மற்றவர்களைத் தேடித் தொடர்பு கொள்ள முயற்சித்தேன். மற்றவர்களும் இவ்விதமே தேட ஆரம்பித்தனர்.

நான் சந்தித்த முதல் அங்கத்தினர் தோழர் ஹொன்ஸா விஸ்கோசில் ஆவர். இவர் பொஹீமியா மத்தியப் பகுதிக்குத் தலைவர். முன் முயற்சி செய்து காரியத்தைத் துவக்கும் ஆற்றல் இவரிடம் நிறையவே இருந்தது. கட்சிக்கு ஒரு பத்திரிகை இல்லாமல் இருக்கக் கூடாது என்பதற்காக, அவர் ஏற்கெனவேயே 'ரெட்ரைட்ஸ்' என்ற நம் பத்திரிக்கையை மீண்டும் துவங்கச் சில ஏற்பாடுகளைச் செய்திருந்தார். அதன் முதல் இதழுக்கு நான் ஒரு தலையங்கம் எழுதிக் கொடுத்தேன். ஆனால் பிறகு யோசித்து நாங்கள் அந்த முடிவை மாற்றி னோம். 'ரெட்—ரைட்ஸ்' என்ற பெயரில் அதை ஒரு தொடர்பு

பத்திரிகையாக வெளியிடுவதற்குப் பதில் அப்போது கையில் தயாராக இருந்த கட்டுரைகளை 'மே மலர்' என்ற தலைப்பில் ஒரு தனிப்பிரசுரமாக வெளியிடுவதென்று தீர்மானித்தோம். எங்களைப் போலவே மற்ற கட்சிகளும், அப்போது ஒரே பெயரில் தொடர் பத்திரிகையை நடத்துவதற்குப் பதில், இது போன்ற தனித்தனிப் பிரசுரங்களை வெளியிட்டிருந்தன.

அடுத்த மாதங்களில் 'பார்டிஸான்' கொரில்லா வீரர் வேலையில் ஈடுபட்டோம். தாக்குதல் கடுமையானதாக இருந்த போதிலும், அது கட்சியை அழித்து விடவில்லை. கைதான தலைவர்கள் விட்டுச் சென்ற வேலைகளைக் கவனிக்க நூற்றுக் கணக்கான புதிய ஊழியர்கள் முன் வந்தனர். அவர்களுடைய புதிய முறுக்கும், ஈடுபாடும், ஸ்தாபன அஸ்திவாரத்தில் எவ்வித ஆட்டமும் ஏற்படாமல் தடுத்தன. எவ்விதத் தோல்வி மனப் பான்மையும், செயலற்றிருக்கும் போக்கும் தலை நீட்டாதபடி பாதுகாத்தன. ஆனால் மத்திய உயிர் நிலை காணப்படவில்லை. இதனால் 'பார்டிஸான்' கோஷ்டிகளுக்கு இடையே ஒற்றுமை யும் அவற்றிற்கு நன்கு அமைந்த ஒரு கேந்திரத் தலைமையும் இருக்காது.

'ரெட்—ரைட்ஸ்' என்ற பெயரில் ஒரு 'பார்டிஸான்' குழு ஒரு பத்திரிகையை வெளியிட்டது. அதன் பிரதி ஒன்று எங்களுக்குக் கிடைத்தது. அதில் மிகவும் அனுபவம் வாய்ந்த ஒரு அரசியல் கை வேலை செய்வதை நான் கவனித்தேன். அதேபோல், எங்களுடைய 'மே மலரை' அந்தக் குழுவினர் பார்த்தனர். இது மிகவும் சிறந்த முறையில் வெளியாயிற்று என்று கூறமுடியாது. எனினும் தங்களுடன் ஒத்துழைக்க யாரோ ஒருவர் இருக்கிறார் என்பதை, அதில் மற்றவர்கள் பார்த்தனர். இவ்விதம் எங்கள் இரு கோஷ்டிகளும் ஒன்றோடொன்று தொடர்பு கொள்ள வழி தேடின.

அது அடர்ந்த காட்டில் யாரையோ தேடுவது போலி ருந்தது. எங்கள் காதில் ஒரு குரல் விழும். உடனே அதைக் காண நாங்கள் புறப்படுவோம். பிறகு முற்றிலும் வேறான ஒரு திசையிலிருந்து நிதானமாகக் கேட்கும் சரியான குரல். நமக்கு

ஏற்பட்ட பெரு நஷ்டத்தினால் கட்சியில் ஒவ்வொருவரும் எச்சரிக்கையாக நடந்து கொள்ள ஆரம்பித்தனர். வலையில் சிக்கிக் கொள்ளாமல் இருக்க நிரம்ப உஷாராக நடந்தனர். பழைய மத்தியக் கமிட்டி அங்கத்தினர்கள் இருவர் ஒருவரை யொருவர் சந்திக்க விரும்பியபோது, கடுஞ் சோதனைகளுக்கும் பரீக்ஷைகளுக்கும் ஆளாக வேண்டியிருந்தது. அவர்கள் யாரை நம்பினார்களோ, அவர்களே பல வழிகளில் அவர்களைப் பரீக்ஷித்தனர். பல முட்டுக் கட்டைகளைப் போட்டனர். காரணம், இருவரில் எவரும் துரோகியாக மாறிவிடவில்லை என்பதை இருமடங்கு ஊர்ஜிதம் செய்து கொள்வதற்காகத் தான். கஷ்டத்திலேயே பெருங்கஷ்டம் என்னவென்றால் நான் சந்திக்கப் போவது யாரை என்பது எனக்குத் தெரியாது. அதே போல் அவருக்குத் தான் தொடர்பு கொள்ள முற்படும் நபர் யார் என்பதும் தெரியாது.

கடைசியாக எங்கள் இருவரையும் தெரிந்து கொண்டிருந்த ஒருவரை நாங்கள் கண்டுபிடித்தோம். அவர்தான் டாக்டர் மிலோஷ் நெட்வெட், ஒரு அபூர்வமான இளைஞன். எங்களுடைய முதல் செய்திப் போக்குவரத்து ஊழியர். அவரை நான் சந்தித்தது தற்செயலாக நிகழ்ந்த சம்பவமாகும். 1941, ஜூன் மத்தியில் நான் நோயுற்றுப் படுக்கையில் படுத்தேன். டாக்டர் நெட்வெட்டை அழைத்து வரும்படி லிடாவை அனுப்பினேன். நான் அப்போது ஒளிந்திருந்த பாக்ஸா வீட்டுக்கு அவரை அவள் அழைத்து வந்தாள். அவர் உடனே புறப்பட்டு வந்தார். நாங்கள் பேசிக் கொண்டிருந்தபோது அவர் மிகமிக ஜாக்கிரதையாக, வார்த்தையை அளந்து, பேச்சுப் போக்கிலேயே ஒரு விஷயத்தைத் தெரிவித்தார். 'மே மலரில்' தலையங்கம் எழுதிய ஆசாமியைக் கண்டுபிடித்து, தொடர்பு ஏற்படுத்த வேண்டும் என்று அவரிடம் கூறப்பட்டிருந்ததாம். நான்தான் அந்த ஆசாமி என்று அவருக்குத் தெரியவில்லை. ஏனெனில், மறுபக்கத்தில் இருந்த எல்லா அங்கத்தினர்களும், கைதானவர்களும் ஜாப்தாவில் என்னையும் சேர்த்து எண்ணிவிட்டனர். நான் சுட்டுக் கொல்லப்பட்டிருப்பேன் என்று நினைத்துக் கொண்டிருந்தனர்.

1941, ஜூன் மாதத்தில், ஹிட்லர் சோவியத் யூனியனைத் தாக்கினான். அன்று மாலையிலேயே நானும் ஹொன்ஸாவிஸ் கோசிலும் சேர்ந்து ஒரு துண்டுப் பிரசுரத்தை அச்சிட்டு வெளியிட்டோம். செக்கோஸ்லோவேகியா மக்கள் அத் தாக்கு தலை எப்படிப் புரிந்து கொள்ள வேண்டுமென்று அதில் தெளிவாக எடுத்துரைத்திருந்தோம். ஜூன் 30ம் தேதியன்று, நான் இவ்வளவு நாட்களாய் தேடிவந்த ஆசாமியைக் கடைசி யாகச் சந்தித்தேன். நான் குறிப்பிட்டிருந்த விலாசத்தை அவர் தேடி அடைந்தார். ஏனெனில் யாரைச் சந்திக்கப் போகிறோம் என்பது அவருக்குத் தெரியும். ஆனால் எனக்கு இன்னும் அவர் யார் என்று தெரியாதிருந்தது. அது கோடை இரவு. மலர் மணம் காற்றில் மிதந்தது. காதலர்களுக்கு உவப்பான நேரம். இருவரும் பேசுவதற்கு முன் ஜன்னலை மூடினோம். விளக்கை நான் ஏற்றியபோது ஒருவரையொருவர் கட்டி அணைத்துக் கொண்டோம். அவர் ஹொன்ஸா ஜிகா.

1941, பிப்ரவரியில், மத்தியக் கமிட்டி அங்கத்தினர்கள் அத்தனைபேரும் கைது ஆகவில்லை. ஒரு அங்கத்தினர் தன்னந்தனியாய் நின்றார். அவர்தான் ஜிகா. அவரை எனக்கு வெகு காலமாகத் தெரியும். அவர் பேரில் எனக்கு அமோக மான பற்று எப்போதுமே உண்டு. ஆனால் இப்போதுதான் நாங்கள் ஒருவரையொருவர்— நாங்கள் கூட்டாக மேற் கொண்ட காரியத்தில்—நன்கு புரிந்து கொண்டோம். அவர் கட்டை குட்டையானவர். எப்போதும் முகத்தில் புன்னகை தவழும். வேலையில் ஈடுபாடும், ஊசலாடா உறுதியும், சளைக் காமல் உழைப்பதும், விட்டுக் கொடுக்காது போராடுவதும் அவர் குணங்கள். அவருக்குத் தன்னுடைய வேலையைத் தவிர வேறு விவகாரங்கள் தெரியாது. வேறு விவகாரங்களைத் தெரிந்து கொள்ள அவர் விரும்புவதுமில்லை. தன் கடமையைச் செய்வதற்காக, அவர் தன் சுய சௌகரியங்கள் அனைத்தையும் விட்டுவிட்டார். ஜனங்களை அவர் நேசித்தார். ஜனங்கள் அவரை நேசித்தனர். ஆனால் எவனையும் அவனுடைய குறை பாடுகளைக் கவனியாமல் விடுவது மூலம், அவர் தன் வசப்படுத்தியதில்லை.

சில நிமிடங்களில் நாங்கள் ஒரு முடிவைக் கண்டு விஷயத்தை முடித்துக் கொண்டோம், அதிக நேரம் வேண்டி யிருக்கவில்லை. சில நாட்களில் மே மாதம் முதல் ஜிகா தொடர்பு வைத்திருந்த புதிய தலைமையின் அங்கத்தினர் ஒருவரையும்—மூன்றாவது நபரை—நான் தெரிந்து கொண் டேன். அவர்தான் ஹொான்சாசெர்னி. அவரும் அபூர்வமான தோழர்களில் ஒருவர். ஸ்பெயினில் போர் புரிந்தார். யுத்தம் மூண்டபிறகு அங்கிருந்து நாஜி ஜெர்மனியைத் தாண்டி இங்கு வந்து சேர்ந்தார். வரும்போது சுவாசப் பையில் ஒரு காயம். எப்போதுமே ஒரு படைவீரனாகவே இவர் இருந்திருக்கிறார். தலைமறைவு வாழ்க்கையில், நிறைய அனுபவம் இவருக்கு உண்டு. ஆற்றலும் உண்டு. எப்போதுமே முன் முயற்சி செய்து காரியத்தைத் துவங்குகிறார்.

கடுமையான போராட்டம், மாதக் கணக்கில் நீடித்தது. எங்களை முதல் தரமான தோழர்களாக உருவாக்கிற்று. நாங்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு துறையில் விசேஷப் பயிற்சி பெற்றிருந்ததானது முற்றிலும் பொருத்தமாக இருந்தது. மனப்போக்கும் எங்களுக்குள் ஒத்ததாகவே இருந்தது.

ஜிகாதான் அமைப்பாளர். யதார்த்த உண்மை அவர் கண்ணில் சட்டென்று தைத்து மூளையில் ஏறும். பேச்சு வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்ற முறையில் இருக்கும். அலங்கார அடுக்குச் சொற்களால் அவரை ஏமாற்றிவிட முடியாது; எந்த ரிப்போர்ட்டானாலும் சரி, அதன் முழு முக்கியத்துவம் விளங்கும்வரை துருவித் துருவிப் பார்ப்பார். ஒவ்வொரு யோசனையையும் ஒவ்வொரு கோணத்திலிருந்தும் கவனித்து பரீக்ஷிப்பார். பிறகு மிகவும் கனிவாக, ஆனால் உறுதியாக, கோஷ்டியின் தீர்மானத்தை நிறைவேற்றுவார்.

நாச வேலைகளைக் கவனிப்பதும், ஆயுதமேந்திய புரட்சிக்கு ஆயத்தம் செய்வதும், செர்னி வகித்த பொறுப்பு களாகும். அவர் எப்போதுமே இராணுவ பாஷையில் தான் சிந்தித்தார். புதிய முறைகளைச் சுலபமாகக் கண்டு பிடிப்பார். திட்டமிடுவதெல்லாம் பெரிய அளவில்தான் இருக்கும்.

உழைப்பதில் களைப்பதில்லை. புதிய ஆட்களையும், சாதனங் களையும் தேடிக் கண்டு பிடிப்பதில் சமர்த்தர்.

நான் பத்திரிக்கைக்காரன். என் மூக்கின் உதவியைக் கொண்டு—மோப்பம் பிடித்து— அரசியல் கிளர்ச்சி செய்ய வேண்டும் நான். சில சமயம் கற்பனை ரதம் கட்டவிழ்ந்து ஓடிவிடும். தராசுத் தட்டுகளைப் பிடித்து முள்ளுக்கு நேராக நிறுத்துவதுபோல், இரு பக்கங்களையும் சமப்படுத்துவதும் ஒற்றுமையை உண்டு பண்ணுவதும் என் பழக்கம்.

எங்கள் வேலைப்பிரிவினை, வாஸ்தவத்தில் வேலைப் பிரிவினை அல்ல; அது பொறுப்புப் பிரிவினையேயாகும்— எல்லோரும் எல்லா சமயங்களிலும் கூடி, எல்லா விஷயங் களையும் விவாதிப்பது என்பது முடியாது. ஆகையால் ஒவ்வொருவரும் தத்தம் காரியத்திற்குப் பொறுப்பு வகிக்கும் போதே, அவசியப்படுகிறபோது மற்றவருடைய துறையிலும், அவரைக் கலக்காமலே முடிவு எடுக்க வேண்டியிருக்கும். அப்படி எடுக்கும் முடிவுக்கும், செய்கைக்கும் பொறுப்பேற்றுக் கொள்ள வேண்டும். பிப்ரவரியில் நம் கட்சியின் பேரில் விழுந்த பேரிடி, எங்களுடைய தொடர்புகள் அனைத்தையும் அறுத்துவிட்டது; ஸ்தாபனத்தில் சில பகுதிகள் பூராவுமே நசுக்கப்பட்டுவிட்டன. வேறு சில தலை தூக்கித் தம்மைத் திருத்தி அமைத்துக் கொண்டன. ஆனால் அவற்றைத் தேடித் தொடர்பு கொள்வது சாத்தியமாக இல்லை. அநேக 'பாக்டரி செல்கள்' சில பிரதேசக் கமிட்டிகள் கூட, யாருடனும் தொடர்பு இல்லாமல் தனிமையில் பல மாதங்கள் இயங்கின. அவர்களுக்கு அப்போதைக்கப்போதைய நிலவரத்தைப் பற்றி வழிகாட்ட முடியவில்லை. மத்தியக் கமிட்டியின் பத்திரிகையை அவர்கள் பெற்று அதில் குறிக்கப்படும் பொதுக்கொள்கையைப் புரிந்து, அவர்கள் பின்பற்றுவார்கள் என்று இருந்த இடத்தில் இருந்த படியே நம்புவதைத் தவிர, எங்களால் வேறு ஒன்றும் செய்ய முடியவில்லை.

வசிப்பதற்கே இடமில்லாமல் நாங்கள் தவித்த அந்தச் சமயத்தில், வேலை செய்வது மிகமிகக் கஷ்டமாக இருந்தது.

பழைய இருப்பிடங்களை எங்களால் பயன்படுத்த முடிய வில்லை. அவை, ஒரு வேளை எதிரியின் கண்பார்வையில் ஒவ்வொரு வினாடியும் இருக்கக் கூடும். முதலில் எங்களிடம் துளிப் பணம் கூட இல்லை. ரேஷன் கார்டு இல்லாமல் உணவு பெற முடியவில்லை. ரேஷன் கார்டு பெற்றால், நாங்கள் யார் என்று எதிரிக்குத் தெரிந்து விடும். இந்த முட்டுக்கட்டை களை எல்லாம் தாண்ட வேண்டியிருந்தது. எந்தச் சமயத்தில்' தயாரிப்புச் செய்யவும், கட்டுவதற்கும் காலம் கடந்துவிட்ட சமயத்தில்! போராட்டத்தில் முழுவதும் ஈடுபட வேண்டிய நேரத்தில்! சோவியத் யூனியன் தாக்கப்பட்டுவிட்ட வேளை யில்! ஆக்கிரமிப்பாளனை எதிர்த்து உள்நாட்டு யுத்தத்தை நடத்துவது—நாசவேலைகள் மூலம் சிறுசிறு போராட்டங்களை நடத்துவது—எங்களுடைய வேலையாகும். எங்களுடைய சக்தியைக் கொண்டு மட்டுமல்ல; முடிந்த அளவுக்குச் செக் தேசம் பூராவும் சக்தியையும் திரட்டித் தாக்குவதன் மூலம், 1939—லிருந்து 1941 வரையில் தயாரிப்புக் காலத்தில், ஜெர்மன் போலீஸுக்கு எதிராக மட்டுமல்லாமல், செக் அரசாங்கத்திற்கு எதிராகவும் கட்சி தன் இரகசிய வேலைகளைச் செய்ய வேண்டியிருந்தது; கொடூரமான அடக்கு முறைக்கு ஆளான போதிலும், கட்சி தன்னை வலுப்படுத்திக் கொள்ள வேண்டி யிருந்தது; ஆக்கிரமிப்பாளனுக்கு எதிராகத் தன் ஸ்தாபனத்தை பரிசுத்தமாக்கி உறுதிப்படுத்த வேண்டியிருந்தது. அதே சமயம் தேச, மக்களின் நம்பிக்கையையும் பெற வேண்டியிருந்தது. அப்படியென்றால், ஒரு கட்சியையும் சேராத ஜனங்களை அணுக வேண்டியிருந்தது. சுதந்திரத்திற்காகப் போராட உறுதி கொண்ட ஒவ்வொருவருடனும் பேச வேண்டியிருந்தது; தேச மக்கள் அனைவரையும் போராடும்படி அறைகூவி அழைக்க வேண்டியிருந்தது; தயக்கத்தை விடாதவர்களைக் கவனிக்க வேண்டியிருந்தது.

1941ம் வருடம் செப்டம்பர் மாதத் தொடக்கத்தில், முடமாக்கப்பட்ட நம் ஸ்தாபனத்தை நாம் பூரணமாகத் திருப்பிக் கட்டிவிடவில்லை என்றாலும், அதற்குள் குறிப்பிடத் தக்க அளவு பொறுப்புக்களை ஏற்று நிறைவேற்றக் கூடிய

உறுதியான தோழர்கள் பலரை நாம் தயாரித்து விட்டோம். கட்சியின் பிரச்சாரம் ஜனங்களின் கவனத்தைக் கவர ஆரம்பித்தது. நாசவேலைகள் பரவின. எங்கும் தொழிற்சாலைகளில் வேலை நிறுத்தங்கள் நடந்தன. செப்டம்பர் மாத முடிவில், அவர்கள் ஹைட்ரிச்சை நம் பேரில் பழி வாங்க ஏவிவிட்டனர்.

இராணுவச் சட்டம் அமுலுக்கு வந்தது. நாளுக்கு நாள் பெருகும் நம்முடைய தீவிரமான எதிர்ப்பை, அதன் முதல் கட்டத்தில் அவர்களால் உடைக்க முடியவில்லை. எனினும் நம் எதிர்ப்பை மட்டுப்படுத்தினார்கள். கட்சிக்குப் புதிய காயங்களை உண்டு பண்ணினார்கள். படுமோசமாக அடிபட்டது பிரேக் ஜில்லாவும், இளைஞர் கழகமும் ஆகும். நம் தலைவர்களில் இன்னும் பலர்— ஜான்கிரேசி, ஸ்டன்ஜல், மிலோஷ் கிரா கி இன்னும் பலர்— கட்சியின் பொக்கிஷங்கள் உயிர் இழந்தனர்.

ஒவ்வொரு அடிக்குப் பிறகும், கட்சி எந்த அளவுக்கு அழிக்க முடியாததாக இருந்திருக்கிறதென்பதே தெளிவாயிற்று. அடிபட்டு விழுந்த ஊழியர் மிகமிக முக்கியமானவராக இருந்த போதிலும், அவருடைய நஷ்டத்தை ஈடு செய்ய முடியாது என்று தோன்றிய போதிலும், அப்படி வீழ்ந்த ஒவ்வொருவருக்கும் பதிலாக இரண்டு அல்லது மூன்று புதிய ஊழியர்கள் வந்து சேர்ந்தனர். புது வருடம் பிறப்பதற்குள், நாம் திரும்பவும் ஒரு வலுவான ஸ்தாபனத்தைக் கட்டிவிட்டோம். 1941 பிப்ரவரியில் நேர்ந்த பெரு நஷ்டம் போல் நஷ்ட மேற்பட்டிருக்காவிட்டால், அந்த ஸ்தாபனம் இன்னும் கடுமையான தாக்குதலையும் சமாளிக்கக் கூடியதாக இருந்திருக்கும். புனர் அமைப்பு வேலையில் நாங்கள் எல்லோரும் பங்கு கொண்ட போதிலும், முக்கியமான பெருமை தோழர் ஹொன்ஸா ஜிகாவையே சேரும்.

நாங்கள் செய்த பிரச்சார வேலைகளுக்கு ஆதாரங்களை, வீட்டு நிலவறைகளிலும், பரணிகளிலும், ஒளிக்கப்பட்ட 'பைல்' களிலும் காணலாம். ஆனால் அதைப் பற்றி இங்கு பேச வேண்டிய அவசியமில்லை.

எங்களுடைய பத்திரிகைகள் மிகவும் விரிவாக வினியோகிக்கப்பட்டன; படிக்கப்பட்டன. கட்சி அங்கத்தினர்களால் மட்டுமல்ல; தேசம் முழுவதிலும்கூட, அவை எல்லாம் அநேக 'டெக்னிக்கல் சென்டர்'களில். ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாத அநேக இரகசிய இடங்களில் அச்சிடப்பட்டன. அல்லது கையால் எழுதி நகல் எடுக்கப்பட்டன; பிரசுர கோஷ்டியில் எவருக்கும், மற்ற கோஷடியில் இருப்பவர்கள் யார், அதன் இருப்பிடம் எது என்பது தெரியாது. கட்டுரைகள் யாரிடமிருந்து வந்தன என்பதும் யாருக்கும் தெரியாது. அவர்கள் எல்லோரும் மனித சக்தியால் முடிந்த அளவுக்கு வேகமாக வேலை செய்தார்கள். யுத்தத்தின் வேகத்திற்குத் தகுந்தபடி அவர்கள் கைகள் விரைந்தன. உதாரணமாக, 1942, பிப்ரவரி 23ம் தேதியன்று தோழர் ஸ்டாலின் வெளியிட்ட இராணுவப் பிரகடனத்தை, 24ம் தேதி மாலைக்குள் வாசகர்களின் கையில் கிடைக்கும்படி நாங்கள் அச்சிட்டு வெளியிட்டோம். அச்சுத் தொழிலாளர் குழு அபூர்வமாக வேலை செய்தது. டாக்டர்கள் குழுவும் ஒரு தனிப் பத்திரிக்கை நடத்திற்று. பூக்ஸ்—லாரன்ஸ் என்று அழைக்கப்பட்ட குழு, 'ஹிட்லருக்கு எதிரி உலகம்' என்ற ஒரு பத்திரிக்கை நடத்திற்று. மற்ற பத்திரிகைகளில் வெளியான பெரும் பாலான விஷயங்களை நானே எழுதினேன். பலரை எழுதச் சொல்லி, ஆபத்துக்கு இடமளிக்கக் கூடாது அல்லவா? நான் கைதானால், எனக்குப் பதிலாக வேலை பார்க்க, வெகு நாட்களுக்கு முன்பே வேறு ஒருவரைத் தயாரித்து ஆயத்தமாக வைத்திருந்தோம். நான் கைதானவுடன் அவர் என் வேலையை மேற்கொண்டார். தற்போது தன் வேலையைச் செய்து வருகிறார்.

நாங்கள் ஒரு குறிப்பிட்ட வேலையில் எவ்வளவு குறைந்த நபர்களை ஈடுபடுத்த முடியுமோ, அவ்வளவு குறைந்த நபர்களை மட்டும் ஈடுபடுத்துவதற்கு ஏற்ற முறையில், முடிந்த அளவுக்குச் சுலபமான ஸ்தாபனத்தைக் கட்டினோம். செய்திகளை ஒரு இடத்திற்குச் சேர்ப்பிப்பதற்கு முன், அவற்றைப் பலகைகளில் மாற்றி வடிகட்டிய ஒரு சிக்கலான முறையை

நாங்கள் கைவிட்டோம். அந்த வடிகட்டும் முறையினால் 1941, பிப்ரவரியில் மத்தியக் கமிட்டியைக் காப்பாற்ற முடியவில்லை. வாஸ்தவத்தில் பார்க்கப் போனால், அந்த முறை, துரோகிகள் இடையில் புகுவதற்கு இடமளித்து அபாயத்தை அதிக மாக்கிற்று. எங்களுடைய புதிய முறை, ஒவ்வொருவரையும் தனிப்பட்ட முறையில் முன்னைவிடப் பாதுகாப்பற்ற நிலையில் வைத்த போதிலும் வெகுவாக ஸ்தாபனம் முழுவதையும் பாதுகாப்பான நிலையில் வைத்தது. பிப்ரவரியில் நடந்தது போல், வருங்காலத்தில் எந்தத் தாக்குதலாலும் கட்சியை முடமாக்கிவிட முடியாது.

இவ்விதம் நான் கைது செய்யப்பட்ட போது மத்தியக் கமிட்டி ஒழுங்கான முறையில் தொடர்ந்து வேலை செய்து கொண்டிருந்தது. என் காலி ஸ்தானத்தை எனக்குப் பதிலாகப் பொறுக்கப்பட்டிருந்த தோழர் பூர்த்தி செய்தார். மிகவும் நெருங்கியவர்கள்கூட இந்த மாறுதலில் ஒரு வித்தியாசத்தையும் பார்க்க முடியவில்லை.

1945, மே 27—ந்தேதி இரவு ஹொன்ஸாஜிகா கைது செய்யப்பட்டார். அதுவும் கூடத் தற்செயலாக நிகழ்ந்த சம்பவமே. அது ஹைட்ரிச் கொலைக்கு மறுநாள் இரவு. அன்று எதிரியின் படை பூராவும் பிரேக்கின் மூலைமுடுக்குகளில் எல்லாம் நுழைந்து சோதனை நடத்திக் கொண்டிருந்தன. ஜிகா இரகசியமாக வசித்த வீட்டின் மாடி அறைக்குள் அவர்கள் நுழைந்தார்கள். அவருடைய கள்ள அடையாளச் சீட்டு சரியாகவே இருந்தது. அவர் அமைதியாக நிதானத்துடன் நடந்து கொண்டிருந்தால், அவரை அவர்களால் யார் என்று கண்டுபிடித்திருக்கவே முடியாது. ஆனால் தனக்கு இடமளித்த நண்பர்களுடைய உயிருக்கு ஆபத்து விளைவிக்க அவர் விரும்பவில்லை. இந்த எண்ணத்தினால் உந்தப்படவே அவர் இரண்டாவது மாடி ஜன்னல் வழியாகத் தப்பி ஓட முயற்சித்தார். படுகாயப்பட்டுக் கீழே விழுந்தார். பிறகு சிறை ஆஸ்பத்திரிக்கு இழுத்துச் செல்லப்பட்டார். யாரைப் பிடித்தி ருக்கிறோம் என்பது அவர்களுக்குத் துளிகூடத் தெரியவில்லை.

பதினெட்டு நாட்கள் பல புகைப்படங்களை ஒத்திட்டுப் பார்த்தார்கள். பைல்களை புரட்டிப் பார்த்தார்கள். பதினெட்டாம் நாள் யார் என்று கண்டுபிடித்தனர். விசாரணைக்காகப் பெட்செக் கட்டிடத்திற்குச் சாகும் நிலையில் தள்ளிப் போனார்கள். கடைசி தடவையாக நாங்கள் அங்கு சந்தித்தோம். என்னை அவரிடம் அழைத்துப் போனார்கள். நாங்கள் கை குலுக்கினோம். அவர் தன் புன்முறுவலை என் பேரில் வீசிச் சொன்னார்:

"ஜுலோ! கவனமாக இரு!" அது ஒன்றுதான் அவரிடமிருந்து அவர்கள் அறிந்த விஷயம். வேறு ஒரு வார்த்தையைக் கூட அவர்களிடம் அவர் பேசவில்லை. சில மணி நேரத்தில், முகத்தில் விழுந்த குத்துக்களைப் பொறுக்க முடியாது அவர் சுருண்டு விழுந்து உயிர் துறந்தார்.

அவர் கைதியான செய்தி, மே 29ம் தேதி எனக்குக் கிட்டிற்று. எங்கள் இருவருக்குமிடையே போய்வந்த நபர்கள் மிகவும் நல்ல முறையில் வேலை செய்தார்கள். அவர்கள் மூலம் அடுத்தபடி நாங்கள் எப்படி நடந்து கொள்வது என்பதுபற்றி ஒரு முடிவுக்கு வந்தோம். ஹொன்ஸாசெர்னி அம்முடிவை ஆமோதித்தார். அதுதான் நாங்கள் ஒன்று சேர்ந்து எடுத்த கடைசி முடிவு.

1942 கோடையில், ஹொன்ஸாசெர்னி கைது செய்யப் பட்டார். இந்தத் தடவை தற்செயலாக அது சம்பவிக்கவில்லை. அவருடன் நேரடித் தொடர்பு வைத்திருந்த ஜான் பொகொர்னி, கட்டுப்பாட்டை மீறியதனால் அது சம்பவித்தது. பொகொர்னி பொறுப்புள்ள குழுத்தலைவராக நடந்து கொள்ளவில்லை. சில மணி நேரம் 'விசாரிக்கப்பட்ட' பிறகு—மிகவும் கொடூரமான சித்ரவதைக்கு ஆளான பிறகு—வேறு எப்படிப்பட்டதை அவர் எதிர்பார்க்க முடியும்? சில மணி நேரம் அவதிப்பட்ட பிறகு, அவர் பயந்து நடுங்கிவிட்டார். உடனே செர்னியைச் சந்தித்த இடத்தை விலாசத்துடன் தெரிவித்துவிட்டார். அங்கிருந்து அவர்கள் ஹொன்ஸாவைப் பின்தொடர ஆரம்பித்தனர். சில நாட்களில் அவரைக் கெஸ்டாபோ கைது செய்தது.

அவரைப் பிடித்து வந்த உடனேயே, அவரை அடை யாளம் காட்டுவதற்காக என்னை இழுத்துச் சென்றார்கள்.

"இவனை உனக்குத் தெரியுமா?"

"தெரியாது,"

அவரும் என்னைத் தெரிந்திருந்ததாகக் காட்டிக் கொள்ள வில்லை. அவர் ஒரு கேள்விக்கும் பதில் கூற முடியாதென்றார். பழைய காயம், புதிய சித்ரவதைக்கு ஆளாகாமல் அவரைக் காப்பாற்றிற்று. சிறிது நேரத்திற்குள் அவர் பிரக்ஞையிழந்து சாய்ந்தார். அடுத்த 'விசாரணை'க்கு அவர் லாயக்காகி இழுத்துப் போகப்படுவதற்குள், நிலைமையை நாங்கள் அவருக்குத் தெரிவித்துவிட்டோம். அதன் பிறகு நிலைமைக்கு ஏற்றபடி அவர் நடந்து கொண்டார்.

அவர் வாயிலிருந்தும், ஒன்றையும் கக்க வைக்க முடிய வில்லை. வெகுநாட்கள் அவரைச் சிறையில் அடைத்து வைத்தி ருந்தனர். ஏதாவது ஒரு புதிய ருஜூ அவருடைய மௌனத் தைக் கலைக்கும் என்று எதிர்பார்த்தனர். ஆனால் ஹொன்ஸா சொ்னியின் உறுதியை அவர்களால் உடைக்க முடியவில்லை.

சிறைவாசம் அவரை மாற்றவில்லை. அவர் எப்போதுமே தைரியசாலியாக உற்சாகத்துடன் இருந்தார். அவருடைய சொந்த எதிர்காலம் சாவைச் சுட்டிக்காட்டியபோது அவர் மற்றவர்களுக்குச் சுபிட்ச எதிர்காலத்தைச் சுட்டிக்காட்டிக் கொண்டிருந்தார்.

ஏப்ரல் மாத முடிவில், திடீரென்று ஒருநாள் அவரை எங்கேயோ பான்கிராப்ட்ஸிலிருந்து இழுத்துப் போனார்கள். எங்கே என்று எனக்குத் தெரியாது. இப்படிப்பட்ட திடீர் மறைவு, கெட்ட சகுனமேயாகும். நான் நினைப்பது தவறாக இருக்கலாம், ஆனால் அவரை மீண்டும் சந்திக்க முடியும் என்று நான் நினைக்கவில்லை.

நாங்கள் எப்போதுமே சாவின் முகத்தில் விழித்துக் கொண்டிருந்தோம். கெஸ்டாபோ கையில் சிக்குவதென்றால் ஆயுள் முடிந்ததென்று அர்த்தம். அதற்கு ஏற்ப நாங்கள்

பிடிபட்ட பிறகும்கூட, எங்கள் ஆத்மாக்களிடத்திலும் மற்றவர் கள் விஷயத்திலும் நடந்து கொண்டோம்.

என் சொந்த நாடகம் முடிவுபெறப் போகிறது. அந்த முடிவை என்னால் எழுத முடியாது. ஏனெனில், அது எப்படி இருக்கும் என்பது எனக்கே தெரியாது. இது இனி மேல் நாடகம் அல்ல; இது வாழ்க்கை.

கடைசிக் காட்சி—திரை உயர்கிறது.

என் நாட்டு மக்களே!

உங்கள் எல்லோரையும் நான் நேசித்தேன்.

வணக்கம், உஷாராக இருங்கள்.

ஜூன், 6, 1943. — ஜூலிஸ் பூசிக்



நாஜி ஹிட்லரின் ஜெர்மன் படையெடுப்பாளர்களால் செக் மக்கள் சித்திரவதைக்குள்ளான போது அதையும் செக் அரசாங்கத்திற்கு எதிராகவும் கம்யூனிஸ்ட் கட்சி பிரச்சாரமும் இரகசிய வேலைகளையும் செய்தபோது பத்திரிக்கையாசிரியர் ஜுலிஸ் பூசிக் கைது செய்யப்பட்டு கொடூரமான அடக்குமுறைக்குள்ளானார் (1942-43).

பான்கிராப்ட்ஸ் சிறையில் சித்ரவதை அடக்குமுறைகளும் சித்தாந்த தாகம் மூலம் அவற்றை எதிர்கொண்ட மனத்திடமும் ஜுலிஸ் பூசிக்கின் தூக்குமேடைக் குறிப்புகள் இதோ உங்கள் கரங்களில். (12ம் பதிப்பு)

''நாங்கள் மகிழ்ச்சியாக வாழ்கிறோம். அதற்காகவே போராட்டத்தில் ஈடுபட்டோம், அதற்காகவே சாகிறோம். எங்கள் பெயர்களைத் துக்கத்தின் சாயல் ஒருபோதும் அணுகாதிருக்கட்டும்.'' (19.5.1943)

''கடைசிக் காட்சி - திரை உயர்கிறது.
என் நாட்டு மக்களே!
உங்கள் எல்லோரையும் நான் நேசித்தேன்.
உஷாராக இருங்கள்''
வணக்கம்,
6.6.1943 - ஜுலிஸ் பூசிக்.

புு.எண். 34 (ப.எண்.35,) சாரங்கபாணி தெரு,
காமராஜர் நினைவில்லம் அருகே,
திருமலை பிள்ளைசாலை குறுக்கே,
தி.நகர் சென்னை - 600 017.
மின் அஞ்சல் : tamilputhakalayam@yahoo.com
வெப்தளம் : http://dhagambook.tripod.com

ISPN 81-89628-15-1